தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 265

# சிவபூஜா பத்ததி

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர், முனைவர்
**சு. சுவர்ணகாளீச்சுரன், டி. லிட்.,**
திருவையாறு.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்**
தஞ்சாவூர்.

2008 விலை : ரூ. 80-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : சிவபூஜா பத்ததி |
| பதிப்பாசிரியர் | : சு. சுவர்ணகாளீச்சுரன் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : 265 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : நான்காம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2008 |
| தாள் | : TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : 192 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 12 |
| அச்சிட்டோர் | : சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : மந்திரம் |
| விலை | : ரூ. 80-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சைத் தரணியில் தன்னிகரற்றுத் திகழும் அறிவுக் களஞ்சியம் சரசுவதி மகால் நூலகமாகும். இந்நூலகத்தில் ஏராளமான கையெழுத்துப் பிரதிகள், ஆவணங்கள் ஆகியவை நிரல்பட பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அவையாவும் மொழிவாரியாகப் பகுக்கப்பெற்று மொழி சார்ந்த வல்லுநர்களால் பதிப்பித்து அறிஞர் உலகிற்கும் மக்களுக்கும் அளித்து வருகிறது இந்நூலகம். அவ்வரிசையில் **"சிவபூஜா பத்ததி"** எனும் இந்நூல் நான்காம் பதிப்பாக தற்போது வெளிவருகிறது.

இந்நூல் நம் சரசுவதி மகால் நூலக ஏட்டுச்சுவடி பகுதியில் உள்ள தொண்ணூறாவது எண்ணுள்ள சுவடியின் தொகுப்பாகும். சிவபூஜை விதிகளை விளக்குகின்ற இந்த நூல், பூஜை விதிகளை மிக விரிவாக விளக்குவதுடன் பூஜையில் பயன்படுத்தப்படும் மந்திரங்களின் விளக்கங்களையும், பூஜைக்குப் பயன்படும் மலர்களின் வகை குறித்தும் சிறப்பாக எடுத்து அளிக்கின்றது. நூலில் பூஜை முறைகள் தொகுத்தளிக்கப்பட்டு மகேசுவரனின் இருபத்தைந்து மூர்த்தங்களையும் வழிபடுபவர் பெறும் நலன்கள் குறித்தும் விரிவாக விளக்கப்படுகின்றன.

சிவார்ச்சனா விதிகளைச் சிவாகமங்களிலிருந்து பதினெண்மர், பதினெட்டு பத்ததிகளாக வடமொழியில் செய்தனர். அவற்றுள் அகோர சிவாச்சாரியார் பத்ததி

பலரால் கையாளப்பெற்று வருகிறது. இறை வழிபாட்டு முறைகளில் இந்தச் சிவபூஜா பத்ததியை அறிவாலும், உணர்வாலும் ஒருங்கே அனுபவித்து மேலோங்கிட, பூசை நடத்துவோரும், பூசைப்பலன் வேண்டும் பக்தர்களும் ஆனந்தப்படத்தக்க அற்புமான நூல். இந்நூலை எளிய முறையில் நுட்பமான விளக்கம் துலங்க பேராசிரியர் டாக்டர் திரு. சு. சுவர்ணகாளீச்வரன் அவர்கள் பதிப்பித்துள்ளார்.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், இத்தகைய நூல் வெளிவரத் துணைநின்ற நூலக நிருவாக அதிகாரி மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம், எம். ஏ., அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர கணினி பிரிவில் பணிபுரிந்த அனைவருக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
7-2-2008

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



## உள்ளுரை

பொருள் பக்க எண்

**ஆன்மார்த்த பூஜைக்குரிய சிவலிங்கங்களின் விவரங்கள்**



**சிவபூஜைக்குரிய மலர்களின் விளக்கம்**



**சிவபூசையில் பயன்பெறும் அருக்கியங்களின் விளக்கம்**



**சிவபூசைக்கு அங்கமாகக் கூறப்பெறும் பூசைகளின் விவரங்கள்**

**சிவார்ச்சனாவிதி சிவபூசை செய்திடும் முறைகள்**

செந்திலாதிபன்துணை

# முகவுரை

நின்போ லமரர் நீண்முடி சாய்த்து நிமிர்ந்துஉகுத்த
பைம்போ துளக்கி பவளந் தழைப்பன பாங்கறியா
எம்போ லிகள்இட்ட இலையும் முகையு மெல்லாம்
அம்போ தெனக்கொள்ளும் அய்யாறன் அடித்தலமே.

'சிவார்ச்சனா விதி, சிவபூசை அகவல்' என்னும் இவ்விருநூலின் சுவடிகளைத் தஞ்சை சரபோஜி மன்னர் சரஸ்வதி மகால் நூல் நிலையத்திலிருந்து அச்சில் வெளிப்படுத்தத் திருவருள் கூட்டியது.

சிவார்ச்சனா விதிகளைச் சிவாகமங்களிலிருந்து பதினெண்மர், பதினெட்டு பத்திகளாக வடமொழியில் செய்தனர். அவற்றுள் அகோர சிவாச்சாரியார் பத்ததி பலரால் கையாளப்பெற்று வருகிறது. மற்றும் சோமசம்பு பத்ததி திருவாவடுதுறையாதீனத்தில் கையாளப் பெறுகின்றது. மேலும் அப்பைய தீட்சதர் செய்த சிவார்ச்சனா தீபிகை, சிவாக்கிர யோகிகள் செய்த கிரியா தீபிகை, வருண பத்ததி முதலிய நூல்களும் வடமொழியில் எழுந்தன.

பதினான்காம் நூற்றாண்டு நூலாகிய தத்துவப்பிரகாசம் நூற்று முப்பத்தொன்று திருவிருத்தங்களால் தமிழில் கூறுகின்றது. இதுவே தமிழில் முதல் நூல்.

சிவபூசை அகவல் கமலைஞானப்பிரகாசப் பெருந்தகையார் செய்தது. சிவபூசை முறைமை மனத்தினில்

தொடர்ந்து எழும் வாய்ப்பின் பொருட்டு நூற்று எழுபத்திரண்டு வரிகளில் சூரியபூசையும் நானூற்று முப்பத்தைந்து வரிகளில் சிவபூசையும் கூறப்பெறுகின்றன. தத்துவப் பிரகாசத்திற்குப் பிறகு தோன்றிய இரண்டாவது செய்யுள் நூலாகும். பூசை முறைகள் பிறழாமல் இருக்க விட்டுப்போகாமல் இருக்க இந்த நூல் செய்யப்பெற்றது.

**சிவபூசை அந்தாதி** என்னும் நூல் மதுரைச் சிற்றம்பலவர் மகனார் அழகிய சொக்கனாதவரோதயரால் செய்யப் பெற்றது. கமலைஞானப்பிரகாசர் அகோர சிவாச்சாரியார் பத்ததியின்படி செய்த நூலை மீட்டும் எடுத்துரைக்கின்றார் என அந்நூற்பாயிரம் கூறுகின்றது. இந்நூற்சுவடி ஏடு சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் சூரிய பூசை நாற்பத்தேழாம் பாடலுக்கு மேல் இருக்கின்றது. முழுவதும் இன்மையால் அச்சிட இயலவில்லை. இந்நூல் முழுவதும் *1880* ல் திருநெல்வேலி சுப்பிரமணிய சிவாச்சாரியரால் அச்சிடப்பெற்றுள்ளது. இந்நூல் மிகச்சில இடங்களிலேயே இருப்பதால் கிடைப்பதற்கரிதாகவுள்ளது. இந்நூல் நூற்று இருபத்தேழு பாடல்களையுடையது.

புட்ப **விதி** என்ற நூல் பூசைக்குரிய மலர்களைக் குறித்தும் அப்பூக்கள் எடுக்கும் முறை முதலியவைகளும் கூறப்பெறுகின்றன.

**சிவபூஜா தீபம்** என்றநூலும் சிவபூசை முறைகளைத் தொகுத்துக் கூறுகின்றது.

மற்றும் சைவ சமய நெறி, நித்தியகன்ம நெறி என்ற இரண்டு நூல்களும் குறள் வெண்பாவால் சிவபூசை குறித்துக் கூறுவன.

**முத்திரை லட்சணம்** என்னும் நூல் சிவபூசைக்குரிய முத்திரைகளை விளக்குகின்றது.

**குருமொழி வினா விடை** என்ற நூல் சைவக் கிரியைகளின் தத்துவங்களை வினா விடையாக விளக்குகின்றது.

**ஆன்மலிங்கமாலை**

சிவபூசையின் அங்கமாகிய பஞ்ச சுத்திகளையும் கூறுகின்றது.

**மாயூரப் புராணத்தில்** பத்துப் படலங்களால் சிவபூசா விதி விளக்கமாகக் கூறப்பெறுகின்றது. மற்றும் விருத்தாசல புராணம், வேதாரணிய புராணம், காஞ்சிப்புராணம், திருவானைக்காப்புராணம் முதலிய நூல்களிலும் வாயுசங்கிதை, சிவதருமோத்திரம், பிரமோத்தர காண்டம், உபதேசகாண்டம் முதலியவற்றிலும் சிவபூசைச் சிறப்புக்கள் கூறப்பெறுகின்றன.

இத்தகைய சிவபூசை விளக்க நூல்களில் சிவார்ச்சனா விதி, சிவபூசை அகவல் என்ற இரண்டு நூல்களும் நம் சரசுவதி மகால் ஏடுகளிலிருந்து எடுக்கப்பெற்று அன்பர்களுக்குத் தரத் திருவருள் கூட்டியுள்ளது.

**பதிப்பு முறை**

இவ்விரு நூல்களைப் பயில்வோருக்கு உதவியாக நூலில் அவ்வப் பகுதிகளுக்குத் தனித்தனி தலைப்பிட்டுத் தலைப்புகளுக்கு விளக்கமும் தரப்பெற்றுள்ளன. மற்றும் நூல் வரலாறு, சிவபூசைக்குரிய இலிங்கங்கள், சிவ பூசைக்குரிய மலர்கள், பஞ்ச சுத்திகள், நியாசங்கள், மந்திரங்கள் அருக்கியங்கள், முத்திரைகள், சிவமூர்த்தங்கள், பூசைகளின் விவரங்கள், பயன்பெறும் பாடல்கள், கிரியைகளின் பெயர்களின் சொற்பொருளகராதி இவைகள் அடியேனால் தொகுக்கப்பெற்று விளக்கப்பட்டுள்ளது. மேலும் ஏடுகளின் சிதைவால் வீணாகப்பெற்ற இடங்களுக்குரிய சொற்களை அகோர சிவாச்சாரிய

பத்ததியின் துணைகொண்டு சேர்த்துள்ளேன். நூலிடையே வரும் தியானச் சுலோகங்களுக்குரிய பொருளை அங்கங்கே கொடுத்துள்ளேன்.

'சிவார்ச்சனா விதி' என்னும்நூல் தருமையாதீனக் குரு முதல்வர் குருஞானசம்பந்தப் பெருமானார் பதினாறாம் நூற்றாண்டில் உரைநடை வடிவில் இயற்றி அருளப் பெற்றது. இதுவரை அச்சில் வெளிவராமல் சுவடியாகவே சரசுவதி மகாலில் இருந்தது. இப்பொழுது வெளிவருகின்றது. இந்நூலின் இறுதியிலுள்ள பாடல்கள் கமலை ஞானப்பிரகாசரைத் துதிக்கும் குரு தோத்திரங்களாக அமைந்துள்ளன. இவற்றுள் 'பெருவேதனையுறுங்காயத்தை விட்டு' என்ற முதற்பாடல் குருஞானசம்பந்தர் நூல் எதிலும் காணப்பெறவில்லை.

தானே வரக்கண்டும் கைப்பாணி வாங்கியும் தாரணியில்
ஊனே வளர்ந்து திரிவதல்லால் உண்மையாஞ் சிவத்தில்
யானே இருக்க இருப்பதெந் நாட்சொல் எனதுளத்தில்
தேனே கமலையில் ஞானப்பிரகாச சிதம்பரனே,

எனும் பாடல் நூலில் காணப்பெறுகிறது.

முதற்பாடல் குருஞானசம்பந்தரே செய்திருப்பதால் மற்றப் பாடல்களையும் செய்தவர் குருஞான்சம்பந்தரே யாதல் வேண்டும். அப்பாடல்களைத் தாம்செய்த பூசாவிதி யாகிய 'சிவார்ச்சனா விதி'யில் அமைத்திருக்கின்றார் என உணரலாம். இந்த நூல் முதன் முதலாக அச்சேறப் பெறுகின்றது.

சிவபூசையகவல் கமலைஞானப்பிரகாசரால் இயற்றப் பெற்றதென்பது 'ஞானப்பிரகாசன் உரைத்தான்' என அந்நூலிலேயே வருவதால் அறியலாம்.

சிவபூசை ஆன்மார்த்தம், பரார்த்தம் என இரு வகைப்படும். பரார்த்த பூசை உலகிலுள்ளோர்

அனைவருக்கும் பொதுவாக ஆலயங்களில் செய்யப்பெறும் பூசை. ஆன்மார்த்த பூசை தன் பொருட்டு ஆசானால் பெறப்பெற்ற சிவலிங்கத்தைப் பூசித்தல்.

ஆன்மார்த்த பூசை மூன்று வகைப்படும். சுத்தபூசை, கேவலபூசை, மிச்சிரபூசை. இம்மூன்றனுள் சிவலிங்கத்தை மட்டும் வைத்துப் பூசை செய்வது சுத்த பூசை, சிவலிங்கம் உமாதேவி, கணபதி, முருகன், இடபதேவர் என்னும் ஐவரையும் வைத்துப் பூசிப்பது கேவலபூசை. சூரியன், கணபதி, முருகன், இடபதேவர், சிவலிங்கம், உமாதேவி சண்டேசர் என எழுவரையும் பூசிப்பது மிச்சிர பூசையாகும்.

மிச்சிர பூசையே இந்நூலில் பேசப்படுகின்றது. ஆசாரிய அபிடேகம் பெற்றோர் செய்யும் அனைத்தையும் இப்பூசா விதியில் கூறப்பெறுவதால் தங்கள் தீட்சைக்கு உரியவற்றை மட்டும் தத்தம் தீட்சாகுருவிடம் தெரிந்து அதன்படி செய்தால் முறையாகும்.

சிவார்ச்சனா விதியில் அகோர சிவாச்சாரிய பத்ததியின் வண்ணம் ஆதிச்சண்டர் வழிபாடு கூறப்பெறுகின்றது. ஆதிச்சண்டர் திருவடிவங்கள் தாராசுரம், சிதம்பரம் முதலிய திருக்கோவில்களில் காணப்பெறுகின்றன.

இப்பணியில் அடியேனை ஈடுபடுத்திய திருவருளுக்கும் இப்பணியில் ஊக்குவித்த அ. பஞ்சநாதன் (நிருவாகப் பொறுப்பு) மற்றும் நிருவாகத்தினர் உள்ளிட்ட அனைவருக்கும் நன்றியுடையேன். இவ்வாறே மற்றைய ஆகமக் கிரியைகளைப் பற்றிய ஏடுகள் தமிழுலகுக்குப் பயன்பெறச் செந்திலாண்டவன் சேவடியைச் சிந்திக்கின்றேன்.

இங்ஙனம்,
முருகனடிமை,
பேராசிரியர், டாக்டர் **க. சுவர்ணகாளீச்சுரன்**, டி. லிட்.,
திருவையாறு.



உ

செந்திலாதிபன் துணை

# நூல்களின் வரலாறுகள்

சிவார்ச்சனா விதி என்ற நூல் நம் சரசுவதி மகால் ஏட்டுச் சுவடிப் பகுதியில் தொண்ணூறாவது எண்ணுள்ள சுவடியிலிருந்து எடுக்கப்பெற்றது.

இந்நூல் சிவபூசா விதிகளை விளக்குகின்ற விசேட நிர்வாண ஆச்சாரிய அபிடேகம் பெற்றோர்வரை செய்யத் தகுந்த பூசாவிதிகள் மிக விரிவாகக் கூறப்பெற்றுள்ளன.

தருமையாதீனக் குரு முதல்வராம் குருஞானசம்பந்தரால் அருளப்பெற்றது. தனது குருவாகிய கமலைஞானப்பிரகாச தேசிக குரு வணக்கம் காணப்பெறுகின்றது. திருவில்லிபுத்தூரில் திருவவதாரம் செய்து மதுரையில் சொக்கநாதரே சிவலிங்க வடிவில் எழுந்தருளப்பெற்று திருவாரூரில் சித்திச்சுரம் தட்சிணாமூர்த்தி சந்நிதியில் கமலைஞானப்பிரகாசரால் அருளுபதேசம் பெற்று அவர் ஆணைப்படியே தருமை எழுந்தருளி அருள் வழங்கி தருமையாதீனத்தின் குரு முதல்வராகத் திகழ்ந்தவராவார்கள். அவ்வாதீன பரம்பரையில் இருபத்தாறாவது குரு மகா சந்நிதானமாக ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அருளாட்சி புரிந்து வருகின்றார்கள்.

குருஞான சம்பந்தர் தமது குருநாதர்மேல் பண்டாரக் கலித்துறை என்னும் நூலும், ஆன்மார்த்த மூர்த்தியின்மேல் சொக்கநாத வெண்பாவும் இயற்றி அருளினார்கள். மற்றும் திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவலும் முத்தி நிச்சயம் என்னும் அநுபவ ஞானநூலையும் இயற்றி அருளினார்கள்.

பதினாறாம் நூற்றாண்டில் அவர்கள் அருளிய சிவார்ச்சனா விதி என்னும் நூல் முதன் முதலாக ஏட்டில் இருந்து அன்பர்களுக்கு நூல் வடிவில் வழங்கப் பெறுகின்றது.

**சிவபூசை அகவல்**

நம் சரசுவதி மகால் நூல் நிலைய M.387 D.751 எண்களுள்ள ஏடுகளிலிருந்து எடுக்கப்பெற்றது. இந்நூலாசிரியர் கமலைஞானப்பிரகாசராவார். 'கிடந்தாலும் ஞானப்பிரகாசர் என்பேன்' எனத்தொடங்கி 'அந்தகனார் வருகின்ற போதும் ஞானப்பிரகாசன் என்பேன்' என முழக்கமிட்ட திருத்தருமையாதீனக் குரு முதல்வர் திருவருட்டிரு குருஞானசம்பந்தப் பெருமானின் ஞான குருவாகத் திகழ்ந்தவ ராவார். திருவாற்றியூர் ஞானப்பிரகாசர் போன்றவர்களுக்கும் குருவாகத் திகழ்ந்தார்.

சிக்கல் நவநீதப் பெருமாள் கோவில் கருப்பக் கிரகத்திலுள்ள 'கிருஷ்ணதேவராயர்' காலத்துக் கல்வெட்டில் திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரத்தைப் பரதேசி முத்திரையும் கணக்கெழுத்தும் அமைத்துக்கொள்ளும்படி செய்வித்து அதன் பொருட்டு சர்வ மானியம் அளித்த செய்தி கூறப்படுகிறது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுபவர் இந்நூலாசிரியராகிய கமலைஞானப்பிரகாசராவார். ஆகவே இந்நூலாசிரியர் காலம் பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்பது உறுதி.

இந்நூல் சிவாகமத்தில் உள்ள கருத்துகளைக் கூறுவது என்பதனையும் உலக நாயகன் என்னும் நற்றவப் பெரியர் சிவபூசை முறையினைத் தமிழில் அகவற்பாவினால் செய்துதர வேண்டுமென்று கேட்க அதன்படி கமலைஞானப்பிரகாசர் இந்நூலைச்செய்தார் என்பதனையும் பூசனை முறைமையைச் சொற்றமிழகவலில் சொல்ல

வேண்டுமென நற்றவ உலகநாயகன் விளம்ப சிற்குணனுரைத்த சிவாகமம் நோக்கி நற்கமலையில் வாழ் ஞானப்பிரகாசன் சொல்லிய பூசைத்தொகையை எனவரும் அடிகளால் உணரலாம்.

இவ்வாசிரியர் கிரியாபாதத்திற்கு இந்நூலையும் சரியாபாதத்திற்கு சைவானுட்டான அகவல், புட்பவிதி போன்ற நூல்களையும் மற்றும் திருவாரூர்ப்பள்ளு திருவானைக்கா புராணம், திருமழபாடி புராணம் ஆகிய நூல்களைச் செய்து சைவ உலகத்துக்குக் கொடுத்தவர்.

இவர் தனது தென்னாட்டு யாத்திரையில் காளையார் கோவில் என்னும் தலத்தில் இருந்த சமணர்களை வென்று அங்குள்ள மக்களைப் பஞ்சத்தினின்றும் காக்க மழை பெய்வித்த செய்தி மற்றும் இவர் செய்த பலவித சித்துக்களையும் இறுதியில் திருவாரூரில் சிதம்பரநாதன் கொல்லை என்ற இடத்தில் ஐப்பசி மாதம் கிருட்டிண பட்ச சஷ்டியில் இறைவன் திருவடி அடைந்திட்ட வரலாற்றையும் ஞானப்பிரகாசம் என்னும் நூலில் காணலாம்.



உ

சிவமயம்

# சிவபூஜைக்குரிய முத்திரைகளின் விவரங்கள்

மந்திரம் உச்சரித்துக் கிரியையில் முத்திரை காட்டும்போது அதற்குரிய அதிதேவதை தோன்றி மகிழ்ச்சி அடைகிறது.

முத் + மகிழ்ச்சி, திரா - வேகமாகச் செல்லுதல்

முத்திரை - அடையாளம்

மந்திரம் - பாவனை - கிரியை

மூன்றனுள் பாவனையைச் சேர்ந்தவை

**சோடிகா முத்திரை**

சுட்டு விரலால் பெருவிரலைத் தெறிப்பதாகிய முத்திரை.

**மகா முத்திரை**

இரு கைகளையும் விரித்துச் சேர்த்து சுவாமிக்கு நேராகக் காட்டுதல்.

**திராசனி முத்திரை**

வலது கையின் சுட்டுவிரலை நீட்டி மற்ற விரல்களை மடக்கி இடது கையில் தட்டுவது.

**தேனு முத்திரை**

இரு கைகளின் விரல்களைச் சேர்த்துக் கோர்த்து வலக்கைச் சுட்டுவிரலோடு இட நடுவிரலையும் இடச்சுட்டு விரலையும் நடுவிரலையும் மோதிர விரலோடு இடச்சிறு விரலையும் இட மோதிர விரலோடு வலச்சுட்டு விரலையும் சேர்த்து பசுவின் முலைக்காம்பு போல் காட்டப்பெறுவது.

**பிம்ப முத்திரை**

இருகைப் பெருவிரல்களின் அடியினைச் சேர்த்து இரு மோதிர நடுவிரல்களில் நுனிகள் மட்டும் ஒன்றையொன்று பொருந்த வளைத்து விரல்கள் ஒன்றி நிற்கப் பிடித்தல்.

**கோவிடான முத்திரை**

வலக்கைச் சிறுவிரல் மோதிர விரல்களை மடக்கிப் பெருவிரலினால் பிடித்து நடுவிரல் சுட்டுவிரல்களை நீட்டி விரித்துப் பிடித்தல்.

**நமஸ்கார முத்திரை**

இரு கைகளையும் சேர்த்து நிமிர்த்தி வலக்கைப் பெருவிரலை இடக்கைப் பெருவிரலோடு சேர்த்துப் பிடித்தல்.

**நாராச முத்திரை**

இரண்டு கையில் இரண்டு பெருவிரல்களின் நுனியில் இருக்கும் பத்திர புஷ்பங்களை இரண்டு சுட்டுவிரல் களினாலும் தெரிப்பது.

**சம்மார முத்திரை**

வலக்கையில் சிறுவிரல் முதலிய நான்கு விரல்களையும் பெருவிரல் அடியில் சேர்த்துப் பிடித்தல்.

### பஞ்சமுகி முத்திரை

இருகைகளின் விரல்களை உட்புறமாகக் கோர்த்துச் சேர்த்து விரித்து இடக்கைச் சிறுவிரலோடு மேல் வலக்கைப்பெருவிரலையும் வலக்கையின் சிறுவிரலின் மேல் இடக்கைப் பெருவிரலையும் இடக்கை நடுவிரலின்மேல் வலக்கைச் சுட்டு விரலையும் வலக்கை நடுவிரலின்மேல் இடக்கைச் சுட்டு விரலையும் வைத்துப் பிடித்து நடுவில் இரண்டு மோதிர விரலையும் நிமித்திச் சேர்த்துப் பிடித்தல்.

### பதும முத்திரை

இரு கைகளையும் தாமரை போல் சேர்த்து நடுவில் இரு பெருவிரல்களையும் கர்ணிகை (தாமரை மொட்டை) போல் சேர்த்துப் பிடித்தல்.

### திரிசூல முத்திரை

இருகை விரல்களையும் கோர்த்துச் சேர்த்து இரு பெரு விரல்களையும் இரு நடுவிரல்களையும் இரு சிறு விரல்களை மட்டும் சேர்த்து நீட்டி முச்சூலம் போலப் பிடித்தல்.

### மகர முத்திரை

இடக்கையில் நான்கு விரல்களையும் நீட்டிக் கவிழ்த்துப் பிடித்து அதன்மேல் வலக்கையின் நான்கு விரல்களையும் நீட்டிக் கவிழ்த்து வைத்து இரு பெருவிரல்களையும் அசைத்துக் கொண்டு பிடித்தல்.

### சிருக்கு முத்திரை

இரு கைவிரல்களை எதிர்முகமாகக் கோர்த்து வலக்கைச் சுட்டுவிரலினால் இடக்கை நடுவிரலையும் இடக்கை நடு விரலினால் வலக்கை நடுவிரலையும் பிடித்து அவற்றின் கீழ் இரு மோதிர விரலையும் வைத்து இரு சிறு விரலையும்

வைத்து இரு சிறுவிரலின் அடியில் இரு பெருவிரல்களைத் தொடும்படி பிடித்தல்.

**திவ்ய முத்திரை**

மூர்த்தியை வலக்கைப் பெருவிரலுடன் கூடிய மோதிர விரலால் தொடுவது.

**விஸ்புர முத்திரை**

வலக்கைப் பெருவிரல் நுனியில் சிறுவிரல் மோதிர விரல் சுட்டுவிரல் என்ற நான்கு விரல்களின் நுனியும் சேர்த்துப் பிடித்தல்.

**ஆவாஹன முத்திரை**

இரண்டு மோதிர விரல்களினாலும் இரண்டு பெருவிரல் களையும் சேர்த்துக்காட்டுதல்.

*(இந்த நிலை இறைவனை எதிர்முகமாக்குவதை பாவனையாலே குறிக்கும்)*

**ஸ்தாபன முத்திரை**

ஆவாஹன முத்திரையை அதோ முகமாகக்காட்டுதல் (இக்கிரியை இறைவனை எழுந்தருளி இருக்குமாறு வேண்டுதலைக் குறிக்கும்)

**சந்நிதான முத்திரை**

இரண்டு கைகளையும் முஷ்டியாகப் பிடித்து இரண்டு பெருவிரலையும் உயர்த்திக்காட்டுதல். (இக்கிரியை பூசிக்குங்கால் இறைவனை நீங்காது இருத்தல் வேண்டும்)

**சந்நிரோதன முத்திரை**

சந்நிதான முத்திரையையே இருபெருவிரல்களையும் முஷ்டிக்குள்ளே மடக்கிக் காட்டுதல் (இக்கிரியை பூசிக்குங்கால் இறைவனை நீங்காது இருக்க வேண்டுதல்)

**மிருக முத்திரை**

வலக்கைப்பெருவிரல் மோதிரவிரல் நடுவிரல்களைச் சேர்த்து சிறுவிரல் சுட்டுவிரல்களைப் பிடித்தலாம்.

**திராசினி முத்திரை**

வலக்கைச் சிறுவிரல் மோதிரவிரல் நடுவிரல்களை மடக்கிப் பெருவிரலால் பிடித்து சுட்டுவிரலை மட்டும் நீட்டிப்பிடித்தல்.

**மனோரத முத்திரை**

இரண்டு கைகளின் விரல்களைக் கோர்த்துச் சேர்த்துச் சுட்டுவிரல்கள் இரண்டையும் நீட்டிச் சேர்த்து இரண்டு பெருவிரல்களையும் இதனடியில் பொருந்தும்படி சேர்ப்பது.

**காளகர்ணிகை முத்திரை**

இரு கைகளின் விரல்களை உள்ளே பொருந்தும்படி குவித்துப் பெருவிரல்களை நிமிர்த்திப் பிடித்தல்.

**இலிங்க முத்திரை**

வலக்கை விரல்களை மடக்கிப் பெருவிரலை நிமிர்த்திப் பெருவிரல் சுட்டு விரல்களால் வலக்கைப் பெருவிரலின் கீழ் வளைத்துப் பிடித்து மற்றைய விரல்களை நீட்டிப் பிடித்தல்.

**உற்பவ முத்திரை**

வலக்கையின் சிறுவிரலை மடக்கிச் சுட்டுவிரலை மற்றைய விரல்களால் சிறிது வளைத்துப் பிடித்தல்.

**பதாகை முத்திரை**

வலக்கையின் ஐந்து விரல்களையும் நீட்டிப் பிடித்தல்.

····◆····

## சிவபூஜைக்குரிய மந்திரங்களின் விவரங்கள்

### சூரிய அங்கமந்திரம்

ஓம் அம் ஹிருதாய நம:

ஓம் அம் அர்க்காய சிரஸே நம:

ஓம் அம் பூர்புவஸ்வரோம் ஜ்வாலிநீசிகாயை நம:

ஓம் ஹ்ரும் கவசாய நம:

ஓம் பம் பாநுநேத்ரோப்யாம் நம:

ஓம் ரம் அஸ்த்ராய நம:

### சூரிய ஆசனமூர்த்தி மூலமந்திரம்

ஓம் அம் அர்க்காஸநாய நம:

ஓம் கம் கஷோல் காயஸூர்யமூர்த்தயே நம:

ஓம் ஹராம் ஹ்ரிம்ஸ: சிவஸூர்யாய நம:

### சூர்ய பூஜை மந்திரம்

ஓம் அம் தண்டிநே நம:

ஓம் அம் பிங்களாய நம:

ஓம் அம் கணபதயே நம:

ஓம் அம் குருப்யோ நம:

ஓம் அம் ப்ரபூதா ஸநாய நம:

ஓம் அம் விமலாய நம:

ஓம் அம் ஸாராய நம:

ஓம் அம் ஆராத்யாய நம:

ஓம் அம் பரம ஸுகாய நம:

ஓம் அம் பத்மாய நம:

ஓம் ராம் தீப்தாயை நம:

ஓம் ரீம் ஸூக்ஷ்மாயை நம:

ஓம் ரும் ருஜாயை நம:

ஓம் ரேம் பத்ராயை நம:

ஓம் ரைம் விமலாய நம:

ஓம் ரோம் அமோகாயை நம:

ஓம் ரௌம் வித்யுதாயை நம:

ஓம் ர: ஸர்வதோ முக்யை நம:

ஓம் அம் அர்காஸநாய நம:

ஓம் கம் கஷோல்கமூர்த்தயே நம:

ஓம் ஹ்ரிம்ஸ சிவஸூர்யாய நம:

ஓம் ஹாம் உஷாதேவ்யை நம:

ஓம் ஹாம் பிரத்யுஷாதேவ்யை நம:

ஓம் ஸம் ஸோமாய நம:

ஓம் பும் புதாய நம:

ஓம் ப்ரும் ப்ருஹேஸ்பதியே நம:

ஓம் பம் பார்க்கவாய நம:

ஓம் அம் அங்காராய நம:

ஓம் சம் சனைச்சராய நம:

ஓம் ரம் ராஹவே நம:

ஓம் கம் கேதுவே நம:

ஓம் அம் தேஜச்சண்டாய நம:

## பச்சிமத்வார பூஜைமந்திரம்

ஓம் ஹாம் கணபதயே நம:

ஓம் ஹாம் ஸரஸ்வத்யை நம:

ஓம் ஹ்ராம் மகாலக்ஷ்ம்யை நம:

ஓம் ஹ்ராம் நந்திநே நம:

ஓம் ஹ்ராம் கங்காயை நம:

ஓம் ஹ்ராம் மகாகாளாயை நம:

ஓம் ஹ்ராம் யமுநாயை நம:

ஓம் ஹ்ராம் அஸ்திரதுவாரபாலாய நம:

ஓம் ஹ்ராம் வாஸ்த்வதிபதயே ப்ரஹ்மணே நம:

ஓம் ஹ்ராம் பச்சிமத்வார பாலேப்யோ நம:

## கணேச கமலாகுரு பங்க்தி பூஜைமந்திரம்

ஓம் ஹ்ராம் மகாகணபதயே நம:

ஓம் ஹ்ராம் மஹாலக்ஷ்ம்யை நம:

ஓம் ஹ்ராம் சதாசிவகுரவே நம:

ஓம் ஹ்ராம் அனந்தகுரவே நம:

ஓம் ஹ்ராம் ஸ்ரீகண்டகுரவே நம:

ஓம் ஹ்ராம் அம்பிகாகுரவே நம:

ஓம் ஹ்ராம் ஸ்கந்தகுரவே நம:

ஓம் ஹ்ராம் விஷ்ணுகுரவே நம:

ஓம் ஹ்ராம் ப்ரஹ்மகுரவே நம:

ஓம் ஹ்ராம் ஸதாசிவாதி ஸப்தகுருப்யோ நம:

## ஷடுத்தாசன மந்திரம்

ஓம் ஹ்ராம் அனந்தாய நம:

ஓம் ஹ்ராம் தர்மாய நம:

ஓம் ஹ்ராம் க்ஞானாய நம:

ஓம் ஹ்ராம் வைராக்யாய நம:

ஓம் ஹ்ராம் ஐசுவர்யாய நம:

ஓம் ஹ்ராம் பத்மாய நம:

## சிவபூஜை மந்திரம்

### (சிவாசன மந்திரங்கள்) (நிராசன பூஜை)

ஓம் ஹறாம் ஆதார சந்தயே நம:

ஓம் ஹறாம் அநந்தஸநாய நம:

ஓம் ஹறாம் அனந்தாய நம:

ஓம் ஹறாம் தர்மாய நம:

ஓம் ஹறாம் க்ஞானாய நம:

ஓம் ஹறாம் வைராக்யாய நம:

ஓம் ஹறாம் ஐசுவர்யாய நம:

ஓம் ஹறாம் அதர்மாய நம:

ஓம் ஹறாம் அக்ஞானுய நம:

ஓம் ஹறாம் அவைராக்யாய நம:

ஓம் ஹறாம் அநைகலாரியாய நம:

ஓம் ஹறாம் அதச்சுதனாய நம:

ஓம் ஹறாம் ஊர்த்துவச்சதனாய நம:

ஓம் ஹறாம் கந்தாய நம:

ஓம் ஹறாம் பிஜாய நம:

ஓம் ஹறாம் அஸ்குராய நம:

ஓம் ஹறாம் நாளாாய நம:

ஓம் ஹறாம் கண்டகேப்யோ நம:

ஓம் ஹறாம் தளேப்யோ நம:

ஓம் ஹறாம் கேஸரேப்யோ நம:

ஓம் ஹறாம் கர்ணிகாய நம:

ஓம் ஹறாம் பீஜேப்பியோ நம:

ஓம் ஹறாம் பத்மாய நம:

ஓம் ஹறாம் வா மாயை நம:

ஓம் ஹ்ராம் ஜ்யேஷ்டாய நம:

ஓம் ஹ்ராம் ரௌத்ரியை நம:

ஓம் ஹ்ராம் காள்யை நம:

ஓம் ஹ்ராம் காலவிகரணியை நம:

ஓம் ஹ்ராம் பலவிகர்ணியை நம:

ஓம் ஹ்ராம் பலப்பிரமதிந்யை நம:

ஓம் ஹ்ராம் ஸர்வபூதமந்யை நம:

ஓம் ஹ்ராம் மனோன்மந்யை நம:

ஓம் ஹ்ராம் சூரிய மண்டலாய நம:

ஓம் ஹ்ராம் அனந்தாய நம:

ஓம் ஹ்ராம் மண்டலாதிபதயே ஓம் ஹ்க்ம் பிரஹ்மணே நம:

ஓம் ஹ்ராம் மண்டலாய நம:

சோம மண்டலாதிபதயே ஓம் ஹ்ராம் விஷ்ணவே நம:

ஓம் ஹ்ராம் அக்கினி மண்டலாய நம:

அக்கினி மண்டலாதிபதயே ஓம் ஹ்ராம் ருத்ராய நம:

ஓம் ஹ்ராம் சக்தி மண்டலாய நம:

சக்தி மண்டலாதிபதயே ஓம் ஹ்ராம் ஈச்வராய நம:

ஓம் ஹ்ராம் சிவாஸநாய நம:

ஓம் ஹ்ராம் ஹ்ம் ஹ்ராம் சிவர்த்தயே நம:

ஓம் ஹ்ராம் ஹௌம் சிவாய நம:

## ஆவரண பூஜை மந்திரம்

இரண்டாவது ஆவரணம்

ஓம் ஹ்ராம் அனந்தாய நம:

ஓம் ஹ்ராம் ஸூக்ஷ்மாய நம:

ஓம் ஹ்ராம் சிவோத்தமாய நம:

ஓம் ஹ்ராம் ஏகநேத்ராய நம:

ஓம் ஹ்ராம் ஏகருத்ராய நம:

ஓம் ஹ்ராம் த்ரிமூர்த்தயே நம:

ஓம் ஹ்ராம் ஸ்ரீகண்டாய நம:

ஓம் ஹ்ராம் சிகண்டிநே நம:

மூன்றாவது ஆவரணம்

ஓம் ஹ்ராம் நந்திநே நம:

ஓம் ஹ்ராம் மஹா காளாய நம:

ஓம் ஹ்ராம் ப்ருங்கிநே நம:

ஓம் ஹ்ராம் விநாயகாய நம:

ஓம் ஹ்ராம் வ்ருஷபாய நம:

ஓம் ஹ்ராம் ஸ்கந்தாய நம:

ஓம் ஹ்ராம் தேவ்யை நம:

ஓம் ஹ்ராம் சண்டாய நம:

நான்காவது ஆவரணம்

ஓம் ஹ்ராம் இந்திராய நம:

ஓம் ஹ்ராம் அக்கினியே நம:

ஓம் ஹ்ராம் யமாயை நம:

ஓம் ஹ்ராம் நிருதயே் நம:

ஓம் ஹ்ராம் வருணாய நம:

ஓம் ஹ்ராம் வாயுவே நம:

ஓம் ஹ்ராம் குபேராய நம:

ஓம் ஹ்ராம் ஈசாநாய நம:

ஓம் ஹ்ராம் ப்ரஹ்மணே நம:

ஓம் ஹ்ராம் விஷ்ணவே நம:

ஐந்தாவது ஆவரணம்

ஓம் வஜ்ராய நம:

ஓம் சக்தயே நம:

ஓம் தண்டாய நம:

ஓம் கட்காய நம:

ஓம் பாசாய நம:

ஓம் த்வஜாய நம:

ஓம் கதாயை நம:

ஓம் சூலாய நம:

ஓம் பத்மாய நம:

ஓம் சக்ராய நம:

ஓம் ஹாம் த்வனிச்சண்டாய நம:

இவ்வேட்டின் முறைப்படி ஆதிச்சண்டாய நம: என்று கூற வேண்டும்.)

**காயத்ரி மந்திரம்**

ஓம் தந்மஹேசாய வித்மஹே

வாக்வி சுத்தாய தீ மஹி

தந்நோ சிவ ப்ரசோதயாத் . . .

**ஸம்ஹிதா மந்திரம் பீஜத்துடன்**

ஓம் ஹோம் ஈசாந மூர்த்தாய நம:

ஓம் ஹேம் தத்புருஷ வக்த்ராய நம:

ஓம் ஹோம் அகோர இருதயாய நம:

ஓம் ஹும் வாமதே குஹ்யாய நம:

ஓம் ஹாம் ஸத்யோ ஜாதாய மூர்த்தயே நம:

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம:

ஓம் ஹூம் சிரசே நம:

ஓம் ஹூம் சிகாயை நம:

ஓம் ஹைம் கவசாய நம:

ஓம் ஹௌம் நேத்ரோப்பியோ நம:

ஓம் ஹம் அஸ்த்திராய நம:

## காலமந்திரம் பீஜத்துடன்

ஓம் ஹ்லாம் நிவர்த்தி கலாயை நம:

ஓம் ஹ்ரீம் பிரதிஷ்டா கலாயை நம:

ஓம் ஹ்ரும் வித்யா கலாயை நம:

ஓம் ஹைம் சாந்தி கலாயை நம:

ஓம் ஹௌம் சாந்தியாதீத கலாயை நம:

## கலாநியாச மந்திரங்கள்

சரிந்யை நம: - ஈசான மூர்த்தினி

அங்கதாயை நம: - தற்புருஷ மூர்த்தினி

இஷ்டாயை நம: - அகோர மூர்த்தினி

மரீச்யை நம: - வாமதேவ மூர்த்தினி

ஜ்வாலிந்யை நம: - சத்யோஜாத மூர்த்தினி

சாந்தியாதீதகலாய நம: - ஈசான முகம்

சாந்திகலாய நம: - தத்புருஷமுகம்

வித்யாகலாயை நம: - அகோர முகம்

பிரதிஷ்டாகலாயை நம: - வாமதேவமுகம்

நிவர்த்திகலாயை நம: - சத்யோஜாத முகம்

தமசே நம: - இருதயம்

மோகாயை நம: - கண்டம்

ஜயாயை நம: - வலதுதோள்

நித்ராய நம: - இடது தோள்

| | |
|---|---|
| த்ருதியை நம: | - நாபி |
| க்ஷாந்தியை நம: | - வயிறு |
| ஸ்மிருத்தியை நம: | - பிருஷ்டம் |
| க்ஷயாயை நம: | - மார்பு |
| ரஜாயை நம: | - குஹ்யம் |
| ரத்யை நம: | - விருஷத்துவயம் |
| பால்யாயை நம: | - தென்பாக வயிறு |
| ரக்ஷாயை நம: | - வாமபாக வயிறு |
| கலாயை நம: | - வலது முழங்கால் |
| ஸம்யமிந்யை நம: | - இடது முழங்கால் |
| கிரியை நம: | - வலது கண்டைக்கால் |
| திருஷ்ணாயை நம: | - இடது கண்டைக்கால் |
| மோஹாயை நம: | - நாக்கின் வலப்புறம் |
| க்ஷயாயை நம: | - நாக்கின் இடப்புறம் |
| சிந்தாயை நம: | - வஸ்திதேசம் |
| மோஹிந்யை நம: | - வயிற்றின் வலப்புறம் |
| பிராமிண்யை நம: | - வயிற்றின் இடப்புறம் |
| பிரித்தியை : | - வலது பாதம் |
| ரித்தியை நம: | - இடது பாதம் |
| திருத்யை நம: | - வலது கை |
| லக்ஷ்மியை நம: | - இடது கை |
| மேதாயை நம: | - மூக்கு நுனி |
| காந்தியை நம: | - தலையின் நடு |
| ஸ்வதாயை நம: | - வலது புஜம் |
| பிராஜயை நம: | - இடது புஜம் |

(சிவபூஜை செய்யும் சிவபுத்திரர்கள், கரநியாசம், அங்கநியாசம் செய்வதுபோல இந்தக் கலாநியாசமும் செய்யவேண்டும்.)

## சப்தகோடி மகாமந்திரம்

எந்த மந்திரங்களும் முதலில் ஓம் என்ற பிரணவமும் இறுதியில் நம: சுவாஹா; சுவதா; வெளஷட்; வஷட்; பட்; ஹூம் என்ற ஏழினுள் ஒன்று பெற்று நிற்கும். இந்த ஏழும் சப்தகோடி மகாமந்திரம் (கோடி-இறுதி) எனப்பெயர் பெறும்.

| | |
|---|---|
| நம: | - இஃது அழைத்தல், ஐசுவரியங்களை அளித்தல் |
| சுவாஹா | - தேவதைகளை திருப்தி செய்தல் |
| சுவதா | - இது தைரியத்தையும் வசிகரத்தையும் தருதல் |
| வெளஷட் | - இது தேவதைகளை இழுத்தல் |
| வஷட் | - இது தேவதைகளை வசம் செய்தல் |
| பட் | - இது விக்கினங்களை நீக்குதல் |
| ஹூம் | - இது சீவராசிகளை ஒடுக்குதல் |

(ஹூம்பட் இது விரைந்து செயலை முடித்தல்)

## பீஜமந்திரங்கள்

குறிலாகவுள்ள ஹம் ஹூம் என்னும் பீஜ மந்திரங்கள் பாவங்களைப் போக்கும்.

நெடிலாகவுள்ள ஹாம் ஹைம் ஹெளம் என்னும் பீஜ மந்திரங்கள் வீடுபேற்றை அளிக்கும்.

## அஷ்டசுத்தி

(எட்டு வகையாகச் சுத்திசெய்யும் முறைகள்)

| கிரியை | முத்திரை | மந்திரம் |
|---|---|---|
| நிரிட்சணம் (பார்த்தல்) | நிரிட்சண முத்திரை | ஓம் ஹாம் ஹெளம் சிவாய நம: |

| கிரியை | முத்திரை | மந்திரம் |
|---|---|---|
| புரோட்சணம் தெளித்தல் | பதாகை | ஓம் ஹம் அஸ்திராயபட் |
| தாடனம் (தட்டுதல்) | அதோமுகி | ஓம் ஹாம் அஸ்திராயபட் |
| அப்யுட்சணம் (மூடுதல்) | சோத்திகம் | ஓம் ஹைம் கவசாய வௌஷட் |
| தாளத்திரயம் (மூன்றுமுறை தாளமிடுதல்) | கோவிஷானம் | ஓம் ஹ: அஸ்திராயபட் |
| திக்பந்தனம் (எட்டுத்திக்குகளையும் கட்டுதல்) | சோடிகா | ஓம் ஹ: அஸ்திராபட் |
| அவகுண்டனம் (சுற்றுதல்) | அக்தியுக்ஷணம் | ஓம் ஹெம் கவசாய வௌஷட் |
| தேனுமுத்திரை (முத்திரை காட்டல்) | தேனு | ஓம் ஹாம் ஹெளம் சிவாய வௌஷட் |

1-4 நாற்சுத்தியாகும். இவை எட்டும் அட்டசுத்தி எனப்படும்.

## திருமுழுக்கு ஆட்டும்போது சொல்லவேண்டிய பத மந்திரங்கள்

ஓம் வ்யோம வ்யோமினே வ்யோம ரூபாய சர்வ வ்யாபிநே
சிவாய அநந்தாய அநாதாய அநாஸ்ருதாய த்ருவாய
சாஸ்வதாய யோகபீட சமஸ்திதாய நித்ய
யோகிநே த்யாநா ஹராய நமசிவாய சர்வப்ரபவே

சிவாய ஈசான மூர்த்தாய தத்புருஷ வக்த்ராய
அஹோர ஹ்ருதயாய வாமதேவ குஹ்யாய சத்யோஜாத
மூர்த்தயே ஓம் நமோ நம: குஹ்யாதி குஹ்யாய
கோப்த்ரே அநிதநாய சர்வ யோகாதி க்ருதயாய
சர்வ வித்யாதிபாய ஜோதிரூபாய பரமேச்வர பராய
அசேதநா சேதந வ்யோமின் வ்யாபின்
வ்யாபின் அருபின் அருபின் ப்ரதவ ப்ரதம
தேஜஸ் தேஜஸ் ஜோதிர் ஜோதிர் அரூப அநக்தி
அதூம அபஸ்ம அநாதே நாநா நாநா தூதூ
தூதூ ஓம் பூஹூ ஓம் புவஹ ஓம் சுவஹ
அநித்த நித்த நித்தோத்பவ சிவ சர்வ பரமாத்மந்
மகேச்வர மகாதேவ சப்தாவேச்வர மஹாதேஜஹா
யோகாதி பத முந்ச முந்ய ப்ரதம ப்ரதம
சர்வ சர்வ பவபவ பவோத்பவ சர்வபூத
சுகப்ரத சர்வ சாநித்ய கர ப்ரம்ம விஷ்ணு
ருத்ர பர அநிர்ச்சித அநிர்ச்சித அஸம்ஸ்துத
அஸம்ஸ்துத பூர்வஸ்தித பூவர்வஸ்தித சாட்சி சாட்சி
துரு துரு பதஸ்க பதஸ்க பிஸ்க பிஸ்க
ஞான ஞான சப்த சப்த சூக்ஷ்ம சூக்ஷ்ம சிவ
சர்வ சர்வதய ஓம் நமோ நம: சிவாய நமோநம: ஓம்

## பவாதிநாம அருச்சனை

ஓம் பவாய தேவாய நம:
ஓம் சர்வாய தேவாய நம:
ஓம் ஈசாதாய தேவாய நம:
ஓம் பசுபதயே தேவாய நம:

ஓம் உக்ராய தேவாய நம:

ஓம் ருத்ராய தேவாய நம:

ஓம் பீமாய தேவாய நம:

ஓம் மகாதேவ தேவாய நம:

**அஸ்த்ர காயத்ரி மந்திரம்**

ஓம் சிவாஸ்த்ராய வித்மஹே

கலா நலாய தீமஹி

தன்னோ அஸ்த்ர ப்சோதயாத்

**ஆசமன மந்திரங்கள்**

ஓம் ஹாம் ஆத்மதத்துவாய ஸ்வதா

ஓம் ஹீம் வித்யா தத்துவாய ஸ்வதா

ஓம் ஹூம் சிவதத்துவாய ஸ்வதா

**சிவமூர்த்தி மந்திரம்**

ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம:

மந்திரங்கள் வாசக மந்திரம்- வாக்கிய மந்திரம் என இரு வகைப்படும். வாசகம்-சொல். வாக்கியம்-பொருள். இவ்வகையில் பன்னிரு திருமுறைகளும் வேதாகமங்களும் வாசக மந்திரங்களாகும்.

கண்டபெருமந்திரமே மூவர்பாடல் கைகாணாமந்திரம்
கண்ணுதலோன் கூறல் (திருமுறைகண்ட புராணம்)

# ஆன்மார்த்த பூஜைக்குரிய சிவலிங்கங்களின் விவரங்கள்

**இலிங்கம்**

இறைவன் ஆன்மாக்களின் தியான பாவனா நிமித்தம் நிட்கள சகளத் திருவுருக்கொண்ட நிலை.

இலிங்கம்-சித்திரித்தல். இலிங்-லயம். கம்-தோற்றம்.

சிவலிங்க வடிவம் ஆன்மாக்களின் தியானம் பூஜை முதலியவற்றின் பொருட்டு சிவபெருமான் கொண்ட ஒரு திருவடிவமாகும்.

**இட்டலிங்கம்**

பாணம் அல்லது மரகதம், படிகம், கல் முதலியவற்றால் ஆகிய சிவலிங்கம் ஒன்றை ஆசாரியனிடம் விரும்பிப் பெற்று ஆயுள் உள்ளவரையும் வைத்துக்கொண்டு நாடோரும் பூஜிக்கும் இலிங்கம் இட்டலிங்கமாம்.

**க்ஷணிக லிங்கம்**

நாடோரும் பூசித்தபின் கைவிடும் இலிங்கம். இட்ட லிங்கம் பெற்றுப் பூசிக்க இயலாதவர்கள் க்ஷணிகலிங்கம் பெற்றுக்கொள்ளலாம். இது எளிது. பயன் இரண்டு இலிங்கங்களுக்கும் ஒன்றே. இரண்டிற்கும் பாவனாபிஷேகம் உண்டு.

| க்ஷணிகலிங்க வகைகளும் | பயன்களும் |
|---|---|
| புற்றுமண் இலிங்கம் | மோட்சம் தரும் |
| ஆற்றுமணல் இலிங்கம் | பூமி லாபத்தைத் தரும் |
| பச்சரிசி இலிங்கம் | திரவிய லாபம் |
| அன்ன லிங்கம் | அன்னவிருத்தியைத் தருவது |
| கோமயலிங்கம் (பசுவின் சாணம் | வியாதி நீக்கம் தரவல்லது |
| வெண்ணெய் இலிங்கம் | மனமகிழ்ச்சியைத் தரவல்லது |
| உருத்திராட்ச இலிங்கம் | ஞானவிருத்தியைத் தரவல்லது |
| விபூதி இலிங்கம் | சகலசெல்வத்தையும் தரவல்லது |
| சந்தன இலிங்கம் | சகல இன்பத்தையும் தரவல்லது |
| பூவாலாகிய இலிங்கம் | ஆயுள்விருத்தி |
| கூர்ச்சலிங்கம் (தருப்பை) | முத்திச்செல்வம் |
| சர்க்கரை இலிங்கம் | விரும்பிய இன்பங்களைத்தரும் |
| மாவு இலிங்கம் | உடல் வலிமையைத் தரும் |
| பழ இலிங்கம் | சுகத்தைத் தரும் |
| தளிர் இலிங்கம் | நல்ல குணத்தைத் தரும் |
| தண்ணீர் இலிங்கம் | சகல மேன்மையையும் அளிக்கும் |

(அஞ்சுமான் ஆகமத்தில் இவ்வாறு கூறப்படுகின்றது)

## திருவாசக பூஜை

திருவாசகத்தையே மூர்த்தியாகக்கொண்டு பூஜை செய்வது திருவாசக பூஜையாகும்.

# சிவபூஜைக்குரிய மலர்களின் விளக்கம்

**கோட்டுப் பூவகை**

வன்னி பலா எலுமிச்சை நார்த்தை

கோங்கு மந்தாரை கருஊமத்தை மாவிலிங்கை

நொச்சி பன்னிர் அகில் மாதுளை

அசோகு பாதிரி வெள்ளருக்கு இலந்தை

பலாசு நுணா நறவம் புன்னை

விளா மருது கொன்றை நெல்லி

குரா செருந்தி பொன்னாவரை கிளுவை

குருந்து வில்வம் நாவல்

**கொடிப் பூவகை**

நாட்டு மல்லிகை முல்லை வெற்றிலை

தாளி கருங்காக்கொன்றை வெண்காக்கொன்றை

குருக்கத்தி இருவாட்சி கொகுடி பிச்சி

**நீர்ப் பூவகை**

செந்தாமரை அதிக இதழில்லாத தாமரை

வெண்தாமரை செங்கழுநீர் நீலோற்பலம்

கருநெய்தல் செந்நெய்தல் வெண்நெய்தல்

**நிலப் பூவகை**

பட்டி நாயுருவி கண்ணுப்பூ பச்சை சிவந்திப்பூ

தும்பை வெட்டிவேர் மருக்கொழுந்து சிவகரந்தை

விஷ்ணுகரந்தை துளசி செங்கீரை கருஊமத்தை

செம்பரத்தை கொக்கிறகு அனிச்சம் நந்தியாவட்டை

**பஞ்ச வில்வம்**

நொச்சி விளா வில்வம் கிளுவை மாவிலங்கம்

**வில்வம் எடுக்கலாகாத நாட்கள்**

மாதப்பிறப்பு சதுர்த்தி அட்டமி நவமி சதுர்த்தசி அமாவாசை பௌர்ணமி திங்கள் ஆகிய நாட்களில் வில்வம் எடுக்கலாகாது.

**மலர்கள் பூஜைக்கு பயன்படும்**
**கால அளவுகள்**

| | | |
|---|---|---|
| தாமரைப்பூக்கள் | - | ஏழு நாட்கள் |
| அரளிப்பூ | - | மூன்று நாட்கள் |

வாசனை மலர்கள் அகப்படாதபோது பழுப்பிலைகள் தளிர்களைச் சாத்தலாம்.

| | | |
|---|---|---|
| வில்வம் | - | ஆறு மாதங்கள் |
| துளசி | - | பன்னிரண்டு மாதங்கள் |

**பன்னிரண்டு திங்களுக்குக்கும் உரிய சிறப்பு மலர்கள்**

| | | |
|---|---|---|
| சித்திரை | - | பலாசம் |
| வைகாசி | - | புன்னை |
| ஆனி | - | வெள்ளெருக்கு |
| ஆடி | - | அரளி |
| ஆவணி | - | சண்பகம் |
| புரட்டாசி | - | கொன்றை |
| ஐப்பசி | - | தும்பை |
| கார்த்திகை | - | கத்ரி |
| மார்கழி | - | பட்டி |
| தை | - | தாமரை |
| மாசி | - | நீலோற்பலம் |
| பங்குனி | - | மல்லிகை |

**தெய்வங்களுக்குரிய மலர்கள்**

| | | |
|---|---|---|
| சிவபெருமான் | - | வில்வமும் கொன்றையும் |
| விநாயகர் | - | அறுகு-திருவாத்தி |
| முருகன் | - | கடம்பு |
| திருமால் | - | முல்லைப்பூ |
| சரஸ்வதி | - | வெண்டாமரை |
| உக்கிரமூர்த்திகள் | - | சிவப்பு மலர்கள் |
| எல்லாத் தேவருக்கும் | - | கருங்குவளை |
| சூரியன் | - | தாமரைப்பூ |
| சோமன் | - | வெள்ளைப்பூ |
| புதன் | - | பொன்னரளி |
| பிரகஸ்பதி | - | மஞ்சள்பூ |
| வெள்ளி | - | வெள்ளைப்பூ |

| | | |
|---|---|---|
| செவ்வாய் | - | சிவப்புப்பூ |
| சனி | - | நீலம் |
| ராகு | - | புகை |
| கேது | - | சிவப்பு |

பொதுவாக சூரியபூஜைக்குச் சிவப்பு மலர்களை உபயோகப்படுத்தலாம்.

**தெய்வங்களுக்கு ஆகாத மலர்கள்**

| | | |
|---|---|---|
| சிவம் | - | தாழை |
| பிரமன் | - | தும்பை |
| துர்க்கை | - | அறுகம்புல் |
| சூரியன் | - | வில்வம் |
| விநாயகர் | - | துளசி |
| திருமால் | - | நந்தியாவர்த்தம் |
| உமை | - | நெல்லி |

**நின்மாலியம் ஆகியும் மேலும் பூஜிக்க உரியவை**

ஒருமுறை அருச்சித்த துளசி வில்வம் கருஊமத்தை நீலோற்பலம் ஆகியவைகளைப் பொன்மலரைப்போலவே கழுவிச்சாத்தலாம்.

**பாவம் அகற்றும் மலர்கள்**

| | | |
|---|---|---|
| பலாசம்பூ | - | களவுபோன பொருள் கிடைக்கஉதவும் |
| எள்ளுப்பூ | - | பிர்மகத்தி |
| கொன்றைப்பூ | - | அறியாமல் செய்த கொலை |
| வெள்ளைப்பூ | - | பிறர் மனைவிக்கு இழைத்த குற்றம் |
| கத்திரிப்பூ | - | நோய் நீங்க |

நீலோற்பலம் - கொடிய வார்த்தையால் வரும் துன்பம் நீங்கல்

துளசி - நினைத்தது கைகூடல்

தும்பைப்பூ - பசு வதை

**பூஜைக்கு ஆகாதவை**

எடுத்தபின் மலர்ந்த பூ, பழம்பூ, எருக்கிலையிலும் ஆமணக்கிலையிலும் கட்டி வைத்த பூ, கட்டிய ஆடையிலும் கையிலும் வைத்த பூக்கள், கீழே உதிர்ந்த பூக்கள், இடுப்புகளின் கீழேயுள்ள உறுப்புக்களில் பட்ட பூக்கள், புழுக்கடிப்பூக்கள், சிலந்தி பறவைகளின் எச்சமும் பட்ட பூக்கள், மயிர்பட்ட பூக்கள், இரவில் எடுத்த பூக்கள், நீரில் மூழ்கிய பூக்கள், அசுத்தரால் எடுக்கப்பெற்ற பூக்கள் பூஜைக்கு ஆகாதவைகளாம்.

**பயன்தரும் மலர்கள்**

**அம்பிகைக்கு உகந்த மலர்கள்**

பாதிரிப் பூ - நல்ல மனைவி கிடைப்பாள்

பலாசமலர் - அணிகள் பல அடைவர்

தாழம்பூ - சிவிகை முதலிய பெருமைகளை அடைவர்

முல்லைப்பூ - சிறந்த பதவி

மாதுளை - எல்லோருடைய கருணையையும் பெறுவர்

தாமரைப்பூ - பகை நீங்கப்பெறுவர்

**புஷ்ப தானம்**

நறுமணமுள்ள மலர்கள் அட்சதைகளை அஞ்சலியாகக் கொண்டு இறைவன் திருவடியில் சாத்தல்.

**அஷ்ட புஷ்பம்** (எட்டுவகை மலர்கள்)

புன்னை வெள்ளெருக்கு சண்பகம் நந்தியாவர்த்தம் நீலோத்பலம் பாதிரி அலரி செந்தாமரை.

(கொல்லாமை அடக்கம் பொறுமை அன்பு தியானம் தவம் சத்தியம் அறிவு - எண் குணங்களாகிய மலர்கள்)

**கிள்ளுப்பத்திரமாகப் பயன்பெறுபவை**

கிளுவை வெண்ணொச்சி வன்னி நுணா இவற்றைக் கிள்ளும் ஒலி வெளிவரவேண்டும்.

இடக்கையினால் பத்திரத்தின் மேல் பாகத்தைப் பற்றி வலக்கை அணி விரலாலும் பெருவிரலாலும் யானைக்கண் அளவில் கிள்ளி அருச்சித்தல் முறை.

இவ்விதிகள் சிவபூஜை அகவல் ஆசிரியராகிய கமலை ஞானப்பிரகாசரால் அருளப்பெற்ற புஷ்ப விதிப்படி காணப்பெறுவது. (பதினாறாம் நூற்றாண்டின் இடைப்பகுதி)

**எட்டுவகை மலர் சாத்தப்படும் இடங்களும் மந்திரங்களும்**

| | | |
|---|---|---|
| வில்வம் | - கண்டம் | - சிவஞான மந்திரம் |
| தாமரை | - முகம் | - சிவமூர்த்தியே நம |
| எருக்கம்பூ | - திருமுடி | - மூலமந்திரம் |
| நந்தியா வர்த்தம் | - மார்பு | - இருதய மந்திரம் |
| பாதிரி | - உந்தி | - சிரசாய நம |
| அலரி | - அரைப்பகுதி | - கவச மந்திரம் |
| சண்பகம் | - முழந்தாள் | - சிகாமந்திரம் |
| நீலம் | - பாதம் | - அஸ்திர மந்திரம் |

# சிவபூஜையில் பயன்பெறும் அருக்கியங்களின் விளக்கம்

### சூரிய தரிசனார்க்கியம்

சிவப்பு நிறப் பூக்கள் இடப்பட்ட நீரை இரு முழங்கால்களையும் மண்டியிட்டு தலைவரையில் செல்லத் தூக்கி சூரிய மூலமந்திரம் சொல்லி தரிசினார்க்கியமாக கீழே விடுதல்.

### சூரிய அருக்கியம்

புருவ நடுவாகிய விந்துத்தானத்திலிருந்து அமுதம் சிவந்த நிறத்துடன் வீழ்வதாகப் பாவித்து அத்திர மந்திரத்தால் கழுவப்பெற்ற வட்டகையில் அபிடேகக் கலசத்தால் குடத்தினின்றும் எடுக்கப்பெற்ற நீரை நெற்றிவரை கொண்டுபோய் முன்சொன்ன அமிர்தம் அதில் சேர்ந்ததாகப் பாவித்து "கஷோல்க மந்திரத்தால்" சந்தனம் இட்டுக் கரைத்த அந்நீரை அங்க மந்திரங்களால் அருச்சித்து திக்குப்பந்தனமும் அவகுண்டனமும் மூல மந்திரத்தால் தேனு முத்திரையும் கொடுத்தல்.

### சூரிய திரோதார்க்கியம்

சூரியபூஜை முடிவில் சூரியமூர்த்தியை வேண்டி அருக்கியம் கொடுத்தல்.

### சாமானிய அருக்கியம்

இவ்வருக்கியம் சிவபெருமானல்லாத ஏனையோருக்கும் சிவபெருமானுக்கு இலிங்கசுத்தி மட்டிலும் பயன்பெறுவது.

இச்சாதாரண அருக்கியத்தின் பயன் துவாரபாலகர்கள் ஆவரண தோவதைகள் இவர்களுக்கு இவ்வருக்கியத்தினைக் கொடுத்தல் பயன். சாமானிய அருக்கியம் தனித்த அருக்கியமாகும். மற்றைய அருக்கியம் முதலியவற்றை தனித்தனியே வட்டகை பாத்திரத்தில் அமைக்கவேண்டும். தனித்தனி அருக்கியம் வைக்க இயலாதவர்கள் விசேடார்க்கியத்தினாலேயே மற்றைய அருக்கியங்களின் பெயரைச் சொல்லி அளிக்கலாம்.

அருக்கியாதிகளை வலக்கைப் பெருவிரல் அணிவிரல் நடுவிரல் மூன்றையும் சேர்த்து சுட்டுவிரல் சிறுவிரல்களை நீட்டிப் பிடித்தலாகிய மிருக முத்திரையினால் கொடுத்தல் வேண்டும். இதற்கு மாறாக ஐந்து விரல்களிலும் அருக்கியம் கொடுக்கின் அந்த நீர் இரத்தத்திற்கு சமானமாகும்.

**பாத்தியம்**

திருப்பாதங்களுக்கு வலமிடமாகத்தரும் நீர் இப்பாத்திய நீர். வட்டகையில் அருகு வெண்கடுகு சந்தனம் விலாமிச்சவேர் என்னும் நான்கையும் மலர்களையும் இடுதல் வேண்டும். அங்க மந்திரங்களால் பூஜிக்கவேண்டும்.

**ஆசமனம்**

திருமுகத்திற்குத் தரும் நீர் ஆசமனம்-மும்மூன்றுதரம் தரல் வேண்டும்.

இவ்வாசமன நீர் வட்டகையில் ஏலம் இலவங்கம் கோட்டம் சாதிக்காய் கற்பூரம் விலாமிச்சைவேர் என்னும் ஆறையும் இடுதல் வேண்டும். சம்ஹிதா மந்திரங்களால் பூஜிக்க வேண்டும்.

**அருக்கியம் (விசேடனருக்கியம்)**

பால் தருப்பைநுனி அரிசி எள்ளு வால்நெல்லு வெண்கடுகு பச்சைக் கற்பூரம் குங்குமம் என்னும் எட்டையும் இடவேண்டும். இவை கிடைக்காவிட்டால் பூ சந்தனம் அரிசி என்பவற்றை இடலாம்.

இவ்வருக்கியம் சிவபெருமானுக்கே உரியது சிரசில் அளிப்பது.

**ஸ்வாகத அருக்கியம்**

அருகு புட்பாட்சதைகளால் இறைவனை வரவேற்றல்.

**நிரோதருக்கியம்**

பூஜை முடிவில் கொடுக்கப்பெறும் அருக்கியம் நிரோத முத்திரை கொடுக்கும்போதும் எல்லாவற்றையும் ஒடுக்கும் போதும் கொடுக்கும் அருக்கியமாகும்.

**அருக்கியங்களில் இடப் பயன்பெரும் பொருள்கள்**

1. சிவப்புநிறப்பூக்கள் (சூரிய அருக்கியம்), 2. அறுகு, 3. வெண்கடுகு, 4. சந்தனம், 5. விலாமிச்சைவேர், 6. ஏலம், 7. இலவங்கம், 8. கோட்டம், 9. சாதிக்காய், 10. கற்பூரம், 11. பால், 12. தருப்பை நுனி, 13. அரிசி, 14. எள்ளு, 15. வால்நெல், 16. பச்சைக்கற்பூரம், 17. குங்குமம்.



# சிவபூஜைக்கு அங்கமாகக் கூறப்பெறும் பூஜைகளின் விவரங்கள்

**சூரிய பூஜை**

சிவபூஜைக்கு அங்கமாக சிவசூரியனைப் பூஜித்தல்.

**சூரிய துவார பூஜை**

தண்டி முதலிய துவாரமூர்த்திகளை வழிபடல். சூரியனுக்கு இருதயாதி வடிவங்களை நியாசம் செய்தல். உஷா, பிரத்தியுஷா தேவி வழிபாடு.

**சூரியலயாங்க பூஜை**

இருதய முதலிய மந்திரங்களை மூர்த்தியில் ஒன்றாக வைத்து அருச்சிப்பது லயாங்க பூஜை.

**போகாங்க பூஜை**

இருதய முதலிய மந்திரங்களை பிரித்து வைத்து பூஜிப்பது போகாங்க பூஜை.

**சோமாதிக்கிரக பூஜை**

சூரிய பத்ம தளத்தில் கிழக்கு நுனியிலிருந்து வடகிழக்கு நுனி வரை சோமாதிக்கிரகங்களை வழிபடல்.

**தேஜஸ் சண்ட பூஜை**

சூரிய பூஜைக்குரிய தேஜஸ் சண்ட பூஜையை துவளிச் சண்ட பூஜையுடன் சேர்த்துச் செய்தல் மரபு.

(சூரியபூஜைஇல்லாமலும் சிவபூஜை மட்டும் செய்யும் விதியும் உண்டு. கமலைஞானப்பிரகாசர் சிவபூஜை அகவலில் சூரியபூஜையும் எடுத்துக்காட்டுகிறார்.)

## சிவபூஜை

**பச்சிம (மேற்குத் துவார) பூஜை**

**கணபதி முதல் யமுனை முடிய எழுவரையும்** வழிபடல். இடப தேவ பூஜை.

பச்சிமத் துவாரபாலக பூஜை செய்வது.

துவாரம் நான்கு திக்கிலும் இருக்க மேற்குத் துவாரத்தில் பூசிப்பதன் காரணம் பின்வருமாறு.

வடக்குத்திக்கு சக்தியிருக்கும் தலமாதலால் துவார பூஜை ஆகாது என்று சிந்தியாகமம் கூறுதலானும், கிழக்குத் திக்கிலே துவாரபூஜை செய்யில் போகத்தைக் கொடுக்குமென்று கூறுதலானும் தெற்குத்திக்கிலே கோமுகையை வடக்கே வைத்து துவாரபூஜை செய்தல் குற்றமென்று மகுடாகமம் கூறுதலானும் இம்மூன்று திக்கையும் ஒழித்து மேற்குத் துவாரத்தில் பூசை செய்தல் உத்தமம். இதுவே போக மோட்சங்களைக் கொடுக்குமென்பதே சிவாகமத் துணிவு.

## சிவாசன பூஜை

**சிவாசன பூஜை மூன்று வகை**

1. சிவாசனாய நம: என்று பெயரளவில் கூறி அமர்தல்.

2. தர்மம் ஞானம் வைராக்கியம் ஐஸ்வர்யம் ஆகிய சிங்கங்களின்மேல் பதுமாசனம் பூஜித்து அனந்தாசனம் அமைத்தல். இவ்வாறு அனந்தன் முதலிய ஆறையும் பூஜிப்பதே ஷடுத்தாசனம்.

3. ஆதார சத்தி முதல் குடிலாசத்தி ஈறாக ஆசனமாக அமைக்கும் பூஜை.

"ஆதார சத்தியை நம:" என்று பூஜித்து எட்டுவித பாம்புகள் தாங்குவதாக அனந்தாசனம் அமைத்து, தர்மம் முதலிய சிம்மாசனம் அமைத்து யுகாதிகள் முதலிய யோகாசனம் அமைத்து யோகாசனத்தை நான்கு பூதங்கள் தாங்குவதாகவும் அதச்சதன முதலிய கீழிதழ்களுடன் கூடியதாகப் பாவித்து அதன்மேல் பத்மாசனத்தை ஆதார சத்தியின் கிளையிலிருந்து கிளம்பியதாகவும் சுத்த வித்தியா தத்துவம் வரை உள்ளதாகவும் பாவித்து பூசித்து,

ஓம் ஹாம் கந்தம் முதல் கர்ணிகை ஈறாக எட்டு இதழ்களையுடைய தாமரையாகப் பாவித்து தளங்களில் வாமா முதல் பத்மம் ஈராக பத்மாசனத்தின் மேல் தளங்களுடைய நுனியால் சிவப்புநிறச் சோதியுருவாய் விளங்கிக்கொண்டிருக்க சூரிய சோம வன்னி முதலிய மண்டலத்தின் மேல் விமலாசனம் அதன்மேல் சிவாசனம் அமைத்தல் வேண்டும். இஃது திராசனபூஜை என்னும் சிவாசனபூஜை.

***அந்தரியாகபூஜை (உட்பூஜை, அகப்பூஜை)***

இருதய கமலத்தில் சிவனை ஆவாஹித்து வெளியில் பூஜிப்பது போலவே பூஜித்து நாபியாகிய குண்டலத்தின் உள்ளே அக்கினியால் ஞானாக்கினியாகப் பாவித்து விந்துத்

தானத்தில் உள்ள அமிர்தமாகிய நெய்யினால் வெளியில் செய்வது போலவே ஆகுதிசெய்து அந்த வேள்வியின் பயனைச் சிவனிடமே சமர்ப்பித்தல்.

## ஆத்மபூஜை

**சப்தகுரு பூஜை**

மகாகணபதி மகாலட்சுமி சதாசிவர் அனந்தர் கந்தர் விட்டுனு பிரமன் ஆகிய ஏழு குருமூர்த்திகளையும் வழிபடல்.

**ஆசனமூர்த்தி பூஜை**

சிவமூர்த்தியை ஒளிவடிவினதாக தண்டாகாரம் பிரியாத அவயவ சிவதத்துவ வடிவாக நினைத்து ஐந்து முகங்கள் முதலாய அவயவங்கள் உண்டானதாகப் பாவித்துப் பூசித்தல்.

**லயாங்க பூஜை**

இருதய முதலிய மந்திரங்களை மூர்த்தியில் ஒன்ற வைத்து சுருக்கி பூசிப்பது லயாங்க பூஜை.

**கௌரி பூஜை**

போகசத்தியாகிய இறைவியைப் பூசித்தல்.

### **போகாங்க பூஜை** (ஐந்து ஆவரண பூஜைகள்)

இருதய முதலிய மந்திரங்களை மூர்த்தியிலிருந்து தனித்தனியே பிரித்துவைத்துப் பூசிப்பது போகாங்க பூஜை.

**முதல் ஆவரணம்**

| | | |
|---|---|---|
| ஈசானமூர்த்தம் | - | வடகிழக்கு |
| தத்புருஷவக்தரம் | - | கிழக்கு |
| அகோதர ஹிருதயம் | - | தெற்கு |
| வாமதேவம் | - | வடக்கு |
| சத்தியோசாதம் | - | மேற்கு |
| நேத்திரம் | - | வடகிழக்கு |
| ஹிருதயம் | - | தென்கிழக்கு |
| சிரசு | - | வடகிழக்கு |
| இருதயம் | - | தென்கிழக்கு |
| நேத்திரம் | - | வடக்கு |
| சிகாயநம | - | தென்மேற்கு |
| கவசாயநம | - | வடமேற்கு |
| அஸ்திராயநம | - | கிழக்கு தெற்கு வடக்கு |

**இரண்டாம் ஆவரண பூஜை**

அனந்தர் சூக்குமர் சிவோத்தமர் ஏகநேத்திரர் ஏகருத்திரர் திரிமூர்த்தி சீகண்டர் சிகண்டி முதலியோரை வழிபடல்.

**மூன்றாம் ஆவரண பூஜை**

நந்தி மாகாளர் பிருங்கி கணபதி ரிஷபர் ஸ்கந்தர் மாதேவி சண்டர் முதலியோரை வழிபடல்.

**நான்காம் ஆவரணம்**

இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் பிரமன் திருமால் ஆகிய திக்கு பாலகர்களை வழிபடல்.

**ஐந்தாம் ஆவரணம்**

வச்சிராயுத முதலிய திக்குப் பாலர்களின் ஆயுதங்களை வழிபடல்.

**குருமூர்த்தி பூஜை**

தீட்சா குரு-சமய சந்தான குருமூர்த்திகளை வழிபடல்.

**வித்தியா பீட பூஜை**

வித்தியா பீடத்தை வழிபடல்.

**துவிதிய கால பூஜை**

இரண்டாம் மூன்றாம் கால பூஜையையும் சேர்த்துச் செய்தல்.

**நித்தியாக்கினி காரிய பூஜை**

வேள்விக் குண்டத்திற்கு செய்யவேண்டிய எட்டுவிதக் கிரியைகள் வாகீஸ்வரி சமேதவாகீஸ்வரரை வழிபடல், அவர்கள் தியானம் அந்தர்பலி பஹிர்பலி முதலியன கொடுத்து இறைவனுக்கு ரட்சை சாத்தல்.

அக்கினிகாரியம்: நெருப்பை ஓம குண்டத்தில் உண்டாக்கி சிவ சொரூபமாக்குதல். சிவாக்கினி சிறப்பு நைவேத்தியத்தைநேரே ஏற்பது. அநேகவிதமான சுத்திகளை செய்யத்தக்கது. சிவகிரியையின் பயனை நேரே கொடுக்கத் தக்க சிவசக்தி திருவருளே அக்கினிக்கு உயிராம் கடவுளைப் பூஜை செய்வது.

**அக்கினி காரியம்**

நாடி சந்தானம் செய்து நெற்பொறி முதலியவற்றால் ஆகுதிகளை சிவசொரூபமாகிய சுருக்கினாலும் சக்தி வடிவமாகிய சுருவத்தாலும் பூரண ஆகுதி கொடுத்தல்.

யாகரட்சை: தருப்பையை ஓமாக்கினியினின்றும் சுட்டு நெற்றியில் பொட்டாக இறைவனுக்குச் சாத்தி தானும் அணிதல்.

**இஷ்டகாமிய மூர்த்தி பூஜை**

தான் விருப்பமாக வழிபட்டு வரும் மூர்த்திகளின் வழிபாடு.

**அஷ்ட புஷ்ப மந்திர பூஜை**

எட்டுவித மலர்களால் எட்டுவித குணங்களையும் இறைவனுக்கு அர்ப்பணித்தல்.

**சண்டேஸ்வர பூஜை**

சூரியன் பூஜைக்கு தேஜஸ் சண்டரையும் சிவபூஜைக்கு த்வனிச் சண்டரையும் வழிபடல் மரபாக இருந்து வருகின்ற நிலையில் இந்நூலில் அகோரசிவாச்சாரியர் பத்ததிப்படி சிவபூஜை இறுதியில் ஆதிச்சண்டர் வழிபாடு கூறப் பெறுகின்றது. இவ்வாதிச்சண்டர் திருவடிவம் தாராசுரம் சிதம்பரம் முதலிய இடங்களிலுள்ள திருக்கோவில்களில் காணலாம்.

கோபூஜை பஞ்சகவ்ய பூஜை சிவாலய வழிபாடு போஜன விதி வரை கூறி நூலை நிறைவுசெய்கின்றார் ஆசிரியர்.

**அஷ்ட புஷ்ப பூஜை** *(காலச்சுருக்கத்தில் செய்யப்பெறும் சிவபூஜை)*

மேற்கூறிய விரிவான பூஜைகள் செய்ய இயலாத நிலையும் உள்ளவர்களுக்காகக் கூறப்பெறுவது.

முதலில் பூசைப்பரிவட்டத்தில் இந்திரன் முதலிய தேவர்களை கிழக்கு முதல் வடகிழக்கு ஈறாக வைத்து அக்கினி நடுவே சிவசூரியனையும் வடமேற்கில் விநாயகரையும் வடகிழக்கில் குருவையும் பூசித்துக்கொண்டு பரிவட்டத்தின் நடுவே

ஓம் ஹாம் சிவாசனாய நம:

ஓம் ஹாம் சிவமூர்த்தியே நம:

இருதயாய நம:

ஈசனாய அஸ்திராய நம:

ஓம் ஹைம் தத்புருஷ கவசாய நம:

ஓம் ஹூம் ஹீம் அகோரசிகாயை நம:

ஓம் ஹிம் ஹீம் வாமதேவாய சிரசே நம:

ஓம் ஹம் ஹாம் சத்தியோஜாதாய ஹிருதயாய நம:

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம:

என்று பூஜித்து அபிஷேகம் பாவனையாகச் செய்து தூபதீப நைவேத்தியம் கொடுத்து கற்பூரம் காட்டி தோத்திரம் செய்து சண்டேசுர பூஜை செய்து பூஜையை நிறைவு செய்தல் வேண்டும் இதுவே அஷ்ட புஷ்ப பூஜையாகும். மனிதத் துணை இல்லாதவர்கள் தொழில் செய்பவர்கள் நோயாளர்கள் பூஜை செய்யப்பேராவல் இருந்தும் பலப்பல தடையுள்ளவர்கள் இவ்வட்ட பூஜை உரியவராவர் என்று ஷட்ஸகஸ்ர காலோத்திரம் என்னும் நூல் கூறுகின்றது. இந்த

அஷ்ட புஷ்ப பூஜையை பக்தியோடும் கவலையோடும் செய்தால் போதுமானது என்பதை சைவ சந்நியாஸபத்ததியில் "புனரேபிரவஷ்யாமி" என்னும் ஸ்லோகத்தாலறியலாம்.

சமய விசேட தீட்சதர்களுக்கு ஆவரண பூஜைகள் செய்யவேண்டிய அவசியம் இல்லை. விருப்பமுறின் செய்யலாம். நிர்வாண ஆசாரியர்களுக்கு அவசியம் ஆவரண பூஜை தேவை.

ஆசாரியருக்கு அதிகார லிங்க பூஜையும் தேவை. இம்முழுப்பூஜை விவரமும் சிவார்ச்சனாவிதியில் கூறப்பட்டுள்ளன. அவர்களுக்குரிய மட்டும் கைக்கொள்ளல் வேண்டும்.



# சிவபூஜையில் பயன்படுத்தப்பெறும் நியாசங்களின் விளக்கங்கள்

நியாசம் என்ற சொல்லுக்குப் பொருள் வைக்கை என்பதாம். கடவுளே புகல் என்று அவரிடம் ஆத்ம பாரத்தை வைக்கை மந்திரங்களால் தேவதைகளை உறுப்புகளில் வைக்கும் கிரியை (தொடுதலாகிய செயல்கள்)

**சகளீகரணம்**

கரநியாச அங்க நியாசங்களால் இவ்வுடலைச் சிவமயமாக ஆக்குதல். சகள(சிவ) உடலாக கரணம்-செய்தல்.

கர நியாசம்: சிவ மந்திரங்களை கையில் பதித்தல்.

அங்க நியாசம்: அவ்வாறு பதிப்பிக்கப்பெற்ற கையினால் உடம்பின் மற்றப் பகுதிகளில் சிவமந்திரங்களை பதிப்பிப்பது. சிவவடிவமாக்கல் அங்க நியாசம். (இக்கிரியை சைவசமயத்திற்கு உயிர்போன்றது.)

**சிவ அங்கநியாசம்**

இறைவனுடைய அங்கங்களில் மந்திரங்களைப் பதிப்பித்தல்.

**தண்டபங்கி நியாசம்**

சிவபூஜையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை அக்கினித் தம்பமாகத் தியானித்து மந்திரத்தால் பூசித்தல்.

**முண்டபங்கி நியாசம்**

ஈசனாதி மந்திரங்களால் சிவமூர்த்தியின் ஐந்து சிரசுகளிலும் முண்டபங்கி நியாசம் (தொடுதல்) செய்தல்.

**வத்ரபங்கி நியாசம்**

இறைவனுக்கு ஐந்து முகங்கள் உடையவனாகப் பாவித்துத் தொடுதல்.

(முண்டபங்கி நியாசம் வத்திரபங்கி நியாசம் என்பன க்ஷணிகலிங்க பூஜைக்கே உரியன என்பர்.)

**கலாபங்கி நியாசம்**

முப்பத்தெட்டுக் கலாபேதங்களாகப் பாவித்துத் தொடுதல்.

**அட்சர நியாசம்**

ஐம்பத்தோரு எழுத்துக்களாகப் பாவித்துத் தொடுதல். அகரம் முதல் க்ஷகரம் வரை சிருஷ்டிக்கிரமம். க்ஷகர முதல் அகரம் வரை சங்காரக்கிரமம்.

**சிகண்ட நியாசம்**

எழுத்துக்களுக்குரிய சீகண்டர் முதலான தேவதை களையும் சத்திகளையும் கூட்டித் தொடுதல். (இவை நிர்வாண தீட்சிதருக்கு உரிய)

**வித்தியாதேக நியாசம்**

கைகளில் நிறைய மலர்களை எடுத்துக்கொண்டு அஞ்சலியாக இருதயத்தானத்தில் வைத்துக்கொண்டு வித்தியாதேகம் பாவித்து நேத்திர மந்திரத்தால் பிரமரந்திரமளவும் செல்ல உச்சரித்து அது நட்சத்திரம் போல புஷ்பாஞ்சலிக்குள் வந்ததாகப் பாவித்து மூர்த்தியில் நியாசித்து பின்பு ஐந்து முகத்திலும் நேத்திரம் நியாசித்தல்.

# சிவார்ச்சனா விதியில் கூறப்பெறும் சுத்திகளின் விளக்கம்

**ஐவகை சுத்தி**

*1. பூத சுத்தி (ஆன்ம சுத்தி)*

*2. பூ சுத்தி (தல சுத்தி)*

*3. திரவிய சுத்தி*

*4. மந்திர சுத்தி*

*5. இலிங்க சுத்தி*

இவ்வைந்து சுத்திகளையும் செய்தல் ஆணவம் கன்மம் மாயை திரோதாயி மாயேயமாகிய ஐந்துவகை பாவங்களையும் களைதல் என்னும் கருத்துப் பற்றியதாகும். இதனைச் சைவசமயநெறிக் குறள்

" பஞ்சவித சுத்தியினைப் பண்ணியேப்பாங்காக
பஞ்சவித பாச மறுப்பர் "

பூத சுத்தி

அன்று செய்த பாபங்களை நீக்குவதாகிய ஆன்மசுத்தி பிருதிவியாதி தத்துவங்களைச்சடமெனக் காண்பது அவையும் தானாகக் காரியப்படா என அறிதல், குரு தீக்கை பண்ணும்போது ஆன்மசோதனை பண்ணி இருக்கவும் மீண்டும் மீண்டும் நாள்தோறும் பூதசுத்தி கூறியதற்குக்

காரணம். அந்த பூதம் வாயிக பூதமென்றும் அப்பியாந்த பூதமென்றும் இருவகைப்பட்டிருக்கும். ஆறு அத்துவாவை அடைந்திருக்கிற பூதமும் சரீர சுகமாயிருக்கிற தூலபூதமும் தீட்சையினாலே சோதிக்கப்பட்ட சுத்தமிருந்தாலும் ஆன்மா சஞ்சிதகன்மவாதனையுடன் கூடிய உடலிலிருந்து பூசிக்கையினாலே அது சுத்தியாயிற்றோ இல்லையோ என்று சந்தேகம் நிகழ்தலாலே யோகதாரணையினாலே நாடோறும் பூதசோதனை பண்ணி மந்திரமயமாக்கி சுத்தனாய் சிவலிங்கப் பெருமானை அருச்சிக்கவேண்டும்.

**பூத சுத்தியின் வகை மூன்று**

1. சீவசுத்தி-ஆன்மசுத்தியை யோகமார்க்கமாகத் திருவருளில் சேர்த்தல்.

2. சூக்குமதேகசுத்தி-தத்துவங்கள் யாவற்றையும் மகாமாயையில் ஒடுக்கும். சரீரப்பகுதிகளையும் விந்துபிர்மா முதல் சிவம் ஈறாகும்.

3. தூலதேகசுத்தி-வெளியுடம்பை திருவருளாகிய அமிர்தத்தினால் சுத்தி செய்தல்.

**சீவசுத்தி**

சுழுமுனா நாடித்தியான முதலியவற்றால் சீவனைச் சிவனாக்கல்.

**சூக்குமதேக சுத்தி**

சப்தம் பரிசம் இரசம் உருவம் கந்தங்களை பிரமன் திருமால் உருத்திரனிடத்து அந்தக்கரணங்களில் புத்தி

அகங்காரத்தை புத்தி மகேச்சுரனிடத்தும் இவ்வாறு ஐவரிடத்திலும் இவை ஒடுங்கினதாக பாவித்தல்.

**தூலதேக சுத்தி**

பிருதிவி முதலிய ஐந்தையும் முறையே அப்பு தேயு ஆகாயம் பராகாயம் என்பவற்றில் ஒடுக்குதல் இவ்வாறு பஞ்சபூதங்களை ஒடுக்கும் கிரியையால் தூல தேகமாகிய ஆலமரம் உயர்ந்ததாக கருதவேண்டும். தூல உடலைச் சார்ந்த பஞ்சபூத குணங்கள் முற்றும் எரிந்து நிவர்த்தி முதலிய ஐந்து கலைகள் பழுதில்லாமல் நின்றதாகக் கருதுதல் துவாத சாந்தத்திலுள்ள சத்தி மண்டலத்தினின்றும் பெருகும் அமிர்ததாரகைகளினால் தூல உடலில் உள்ளும் புறமும் நனைந்ததாக எண்ணல் ஆன்மாவை ஒளிவடிவினன் ஆக்குதலாகும்.

**தான சுத்தி**

விக்கினங்களை அத்திர மந்திரத்தால் போக்குவது. அத்திரமந்திரத்தால் தன்னைச் சுற்றிலும் அக்கினி மயமான மதிலையும் கவச மந்திரத்தால் மூன்று அகழிகள் உண்டான தாகப் பாவித்து சத்திகளின் கூட்டம் எங்கும் நிறைந்ததாய்ப் பாவித்தல்.

**திரவிய சுத்தி**

ஆன்மா இறை திருவருளால் எல்லாம் நடப்பன என அறிதல் என்பது. பூசைக்குரிய பொருள்களை மந்திர நீரைத் தெளித்துச் சுத்தி செய்தல். பூசைப்பொருட்கள் எல்லாம் மாயையினிடத்து உண்டானவாதலால் சுத்தனாயிருக்கற

சிவபெருமானுக்கு அப்பொருள்கள் அனுமதிக்கப் படமாட்டா. அதுவன்றி பலத்தையும் கொடாது. ஆதலினால் அப்பொருள்களில் சிவசக்தியைப் பதித்தல். விறகானது அக்கினியைச் சேர்ந்தபோது தன்வடிவமற்று அக்கினி வடிவமானாற் போல பூசைப்பொருள்களும் சக்தி மயமாக ஆதல்.

**மந்திர சுத்தி**

ஐந்தெழுத்தை சிகார முதலாக மாறி அதன் உண்மையை விசாரித்தறிதல், மந்திரங்களைக் குற்றமற மாத்திரை தவறாமல் உச்சரித்தல் மந்திரங்களெல்லாம் எந்நாளும் அவற்றைச் சுத்தி செய்யவேண்டியதற்குக் காரணம் மந்திரங்கள் அதிகார பலத்துடன் கூடி திரோதன சத்தியால் மறைப்புண்டிருக்கையில் பஞ்சகலை முதலிய பிராசாத மந்திரத்தை சமய முதலிய நால்வரும் அவரவர்க்கேற்ற பிராசாத கலைகளை அறிந்து அவ்வாறே உச்சரிக்கில் அம்மந்திரங்கள் பராசத்தியுடனே லயித்து அக்குற்றம் நீங்குதற் பொருட்டென்க.

**இலிங்க சுத்தி**

சிவலிங்க வடிவைச் சுத்தி செய்தல் சிவபெருமானை நீராட்டுதற்குரிய வேதிகையில் எழுந்தருளப் பண்ணி பரிச பூஜை செய்து இலிங்கத்தைச் சுத்தி செய்யாவிடில் முதலில் பூஜித்த மந்திரங்களிலெல்லாம் விந்து தத்துவத்தில் ஒடுக்கப் பட்டிருப்பதால் அம்மந்திர ஒளியின்றி குரூரமாயிருக்கிற பூத முதலிய விக்கினங்களாலே தடைப்பட்டுப்போக மோட்சங்களை கொடுக்கப்படமாட்டா. ஆதலால் அம்மந்திரங்கள் தடையின்றி ஒளிவிடும்போது இலிங்கத்தை

அத்திரமந்திரத்தினாலும் பீடத்தைப் பாசுபதாஸ்த்திரத்தி னாலும் திருமுழுக்காட்டின் சகல விக்கினங்களும் தீர்ந்து அம்மந்திரங்கள் பயன் கொடுக்கும்.

இலிங்க சுத்தியின் தத்துவம் பூரணமாய்ப் பசுபாசங்கள் இரண்டினும் பிரிவற நின்று அவற்றைச் சேட்டிப்பித்து நின்ற தன்மையை அறிந்து அத்தகைய சிவம் இலிங்கத்தினும் இருக்கும் என அறிதல். இங்கு அபிடேகம் இலிங்க சுத்தியாகவே சொல்லப்பட்டது. பின்பு பூஜையில் மறுமுறை பாவனாபிடேகம் விதிக்கப்படுகிறது. சோமசம்பு பத்ததி முதலியவற்றில் இலிங்கசுத்தியை சுருக்கமாக விதித்து அபிடேகம் பூஜையிலே விதிக்கப்பட்டுள்ளன.



## சிவபூஜைக்குரிய மகேசுவர மூர்த்தங்கள் இருபத்தைந்தின் சிறப்புகள்

### 1. இலிங்கோற்பவ மூர்த்தி

பிரம விஷ்ணுக்களுக்கு நல்லறிவுறுத்த அக்கினி பிழம்பாய் நின்ற சிவபெருமான் லிங்கத்திருவடிவாய்த் தோன்றியதே இலிங்கோற்பவ மூர்த்தியாம். இம்மூர்த்தியை வழிபடுவோர் உடல்நலம் முதலிய சிறப்புக்களைப் பெறுவர்.

### 2. சுகாசன மூர்த்தி

உமாதேவியாருக்கு வேதசிவாகமங்களின் உண்மையை சுகாசனத்திலிருந்து உபதேசித்த மூர்த்தி. இத்திருவடிவை வழிபடுவோர் சுகதுக்காதிகளில் விருப்பு வெறுப்பு இன்றி இருந்து, சங்கற்ப விகற்பங்கள் நீங்கப்பெறுவர்.

### 3. சந்திதர மூர்த்தி

சிவபெருமான் பிரமவிட்டுணுக்களுக்கு அவர்கள் தொழில் நடைபெறச்செய்யத் தமது இடப்பாகத்திலிருந்து உமையம்மையைத் தோற்றுவித்த மூர்த்தி. இத்திருவடிவை வழிபடுவோருக்குப் போகமுண்டாம்.

### 4. கல்யாணசுந்தரமூர்த்தி

இறைவி பெருமானை நோக்கி தமக்குள்ள தாக்ஷாயணி என்னும் பெயரை மாற்ற வேண்டி மலையரையன் மகவாய்த்

தோன்றி பார்வதி என்னும் திருப்பெயருடன் மேனைபால் வளர்ந்துவருங் காலத்து எமது ஐயன் திருமணக் கோலங்கொண்டு எழுந்தருளிய திருவடிவம். இப்பெருமானை வழிபடுவோர். மங்களகரமான விழாக்களை எப்பொழுதும் அடைந்து நலமுறுவர்.

**5. உமையொருபாகர்**

இடப்பாதி இறைவியும் வலப்பாதி பெருமானுமாக எழுந்தருளிய திருவடிவம். இப்பெருவடிவை வழிபடுவோர் உலக இன்பத்தை அடைவர்.

**6. சோமாஸ்கந்தமூர்த்தி**

இறைவியோடும் முருகனோடும் கூடி இருக்கும் திருவடிவு. இப்பெருமானை வழிபடுவோருக்குப் புத்திரப் பேறுண்டாகும். (மூர்த்தநாயகர் என்றும் கூறுவதுண்டு.)

**7. சக்கரவரதர்**

திருமாலுக்கு சக்கரம் ஈந்த மூர்த்தி-இம்மூர்த்தியை வழிபடுவோர் போகங்களை இடையூறின்றி அடைவர்.

**8. திரிமூர்த்தி**

இறைவன் பிரம்மவிஷ்ணு உருத்திரர்களை தோற்றுவிக்கும் நிலைகாட்டு திருக்கோலம். ஆசைப்படுகின்ற பொருள் கிட்டப்பெறுவர்.

**9. ஹரியர்த்தர்**

இறைவியின் வடிவம்பெற்ற திருமாலை இடப்பாகம் கொண்ட திருக்கோலம். இப்பெருமானை வழிபடுவோருக்கு

புண்ணிய பாவங்களைச் சமானமாய்ச் செய்து அவரவர்களுக்குச்சத்தினிபாதத்தைக் கொடுப்பார்.

### 10. தென்முகக் கடவுள்

இறைவன் தெற்குத் திக்கு நோக்கி ஜனகாதி நால்வருக்கு உபதேசித்த திருவடிவம். யோகமுறையைக் காட்டியவர். யோக தட்சிணாமூர்த்தி. தும்புரு, நாரதர், சுகர் முதலியோருக்கு வீணையின் இலக்கணத்தை உணர்த்தி அதனைவாசித்துக் காட்டியவர். வீணாதட்சிணாமூர்த்தி என்றும் கூறுவர் மேலோர். இம்மூர்த்தியின் திருவடிவங்கள் பலப்பல என்று மேலோர் கூறுவர். இப்பெருமானை வழிபடுவோருக்கு முத்திநிலை பெறச்செய்வார்.

### 11. பிட்சாடணமூர்த்தி

தாருகாவனத்து முனிவர்கள் சிவபக்தி இல்லாராகி கன்மப்பிரமவாதிகளாய் இருந்ததை மாற்றி அவர்களுக்கு நல்லுணர்வுண்டாக்க நிர்வாணராய் பிரமகபாலம் கைக்கொண்டு பலி ஏற்கவந்த பெருவடிவம். இப்பெருமான் பரிபாகமுள்ள ஆன்மாக்களுக்கு போகசங்கிரகம் உண்டுபண்ணுவார். (ஆசையை நீக்குவார்.)

### சரபமூர்த்தி

சிவபெருமான் இரணியனை சங்கரித்த நரசிம்மத்தின் அகந்தையைச் சரபர் வடிவங்கொண்டு நீக்கிய வடிவம். ஆன்மாக்களது கன்மாதிமலநீக்கமடையச்செய்வார். வாழ்வில் பதவிக்கு இடையூறுவரின், இப்பெருமானை வழிபட்டால் அத்தடை நீங்கப்பெறுவர். (திரிபுவனம்)

**13. நீலகண்டமூர்த்தி**

சர்வ சுதந்திரனாகிய பதி, பாற்கடலில் தோன்றிய ஆலகாலத்தை உண்டு தேவர்களைக் காப்பாற்றிய திருவடிவம். இப்பெருமான் நாமொருவரே இறப்பில்லாதவர் என்று காட்டுகின்றார். இப்பெருமானை வழிபடுவோர் ஆணவ மலம் நீங்கப்பெறுவர்.

**14. திரிபாதமூர்த்தி**

பிரளயத்தின் முடிவில் பிரம, விஷ்ணு உருத்திரர்கள் மகேசுவரனிடத்தில் ஒடுங்கும் திருக்கோலத்தை திரிபாத மூர்த்தி என வழங்குவர். (இம்மூர்த்திக்கு இரண்டு சிரசும் நாலு கொம்பும், ஏழு புஜமும், மூன்று பாதமும் உள்ளவென அறிக) சரியை கிரியை யோகம் அனுஷ்டிக்கும்படி செய்யும் பெம்மான் சிவன்.

**15. ஏகபாதமூர்த்தி**

இறைவன் சர்வ சம்ஹார காலத்தில் எல்லாம் தன்னிடத்தே ஒடுங்க ஏகபாத மூர்த்தியாய் விளங்கும் திருக்கோலம். இப்பெருமான் ஞான பாதத்தினைப் பெற அருள்செய்வார். (இத்திருவடிவினை திருவானைக்காவல் அகிலாண்டநாயகி திருக்கோவிலில் காணலாம்)

**16. பைரவமூர்த்தி**

அந்தகாசூரனுக்காக எழுந்தருளிய திருக்கோலம். சகல கட்டுப்பாட்டினின்றும் நம்மை இப்பெருமான் விடுவிப்பார்.

**17. இடபாரூடமூர்த்தி**

திரிபுரதகன காலத்துத் திருமால் விடையாகி இறைவனைத் தாங்கிய திருக்கோலம். குருவருள் கிடைக்கத் திருவருள் புரிவார்.

**18. கங்காளமூர்த்தி**

வாமனவடிவத்தை திருமாலுக்கு நீக்கியருளிய திருக்கோலம். இப்பெருமானை வழிபடுவோர் வைராக்கியத்தை அடைவார்கள். *(திருமாணிக்குழி)*

**19. காமாரி**

காமனைக் காய்ந்த திருக்கோலம். இப்பெருமான் ஆன்மாக்களுக்கு காம இச்சையை நீக்குவார்.

*(திருக்குறுக்கைப் பெருமான்)*

**20. காலகாலர்**

மார்க்கண்டேயருக்காகக் காலனைக் காய்ந்த திருக்கோலம் . காலபயத்தினைப் போக்கும் பெருமான். ஆயுள் நீட்டிக்கச்செய்வார். *(திருக்கடவூர் பெருமான்)*

**21. சலந்தராரி**

உருத்திரமூர்த்தியின் வேர்வையில் தோன்றி வருணனால் வளர்க்கப்பெற்று பிருந்தையை மணந்து பிரமனால் ஜலந்தரன் என்று அழைக்கப்பெற்று தேவர்களைத் துன்புறுத்தியவனை இறைவன் தன் பாதத்தால் கீரிய சக்கரத்தால் சங்கரித்த திருகோலம். இப்பெருமானை வழிபடுவோர் கோபத்தினின்றும் நீங்கப்பெறுவார்.

*(விற்குடிப்பெருமான்)*

**22. திரிபுராரி**

பொன்-வெள்ளி-இரும்பு ஆகிய மூன்று கோட்டைகளை யுடைய திரிபுராதியரைச் சிரித்தெரித்த திருவடிவம் திரிபுர தகன மூர்த்தி எனப் பெயர் பெறுவர். ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றினின்றும் உயிர்களை விடுவிப்பார் இப்பெருமான். *(திருவதிகைப்பெருமான்)*

**23. சந்திரசேகரர்**

தட்சனுடைய சாபத்தால் நாளொரு கலையாகக் குறையக்கண்ட சந்திரன் சிவபெருமானைச் சரணடைய அவன் நாளொரு கலையாக வளரச்செய்து தமது திருமுடியில் வைத்த திருவடிவம் . இப்பெருமான் பிறவிப்பிணி போக்குவார்.

**24. நடராஜமூர்த்தி**

பிரணவமே திருவாசியாகவும், பஞ்சாட்சரமே திருவுருவாகவும் பராசக்தியே சிற்சபையாகவும் தமருகத்தால் தோற்றத்தையும், அபயத்தால் திதியையும், எரியால் சம்ஹாரத்தையும், ஊன்றிய திருவடியால் திரோபவத்தையும் குஞ்சிதபாதத்தால் அனுக்கிரகத்தையும் செய்கின்ற பஞ்சகிருத்திய தாண்டவப்பெருமான். இப்பெருமான் சிவானந்த அனுபூதியைத் தருவார்.

**25. கங்காதரமூர்த்தி**

கங்கையைத் தமது சடையிலணிந்த பெருமான் திருவடிவம். உயிர்களை ச் சாயுச்சியானந்தத்தில் அழுந்தச் செய்வார்.

மற்றும் சிவஸ்தலங்களுள் எழுந்தருளியிருக்கும் சிவமூர்த்தங்களும் சிவபூஜை செய்யத்தக்க மூர்த்தங்களாகும். திருவாசகத்தையே பெருமானாகக்கொண்டு வழிபடும் திருவாசக பூஜையும் செய்யத்தக்கது.



# சிவபூஜைக்குரிய கிரியைகளின் பெயர்களின் சொற்பொருள் விளக்கம்

**சிவபூஜை**

சகலநிட்களராக உள்ள சிவபெருமானை சகல வடிவாகத் தியானித்தல்.

**துவாரபூஜை**

பூஜாஸ்தானத்தில் ரேசகபூரக வியாபாரங்களை அஸ்திரத் துவார பாலகர்களால் தடுத்து மனத்தை நிறுத்துதல்.

**கரநியாசம்**

கைகளைச் சிவமாக்குவது.

**பூத சுத்தி**

தத்துவங்களின்றும் நீக்குதல்.

**தான சுத்தி**

மாயையினின்றும் கடந்து நிற்றல்.

**திரவிய சுத்தி**

அனைத்தையும் சிவமாகக் காணுதல்.

**மந்திர சுத்தி**

சிவபூஜா மந்திரங்களை அருள்நாத ஒலியில் எழுந்தனவாகச் சிந்தித்தல்.

**இலிங்க சுத்தி**

எட்டு மூர்த்திகளைத் திருமேனியாகக்கொண்ட பெருமானை எட்டு மூர்த்திகளைக் கடந்து இலிங்க உருவத்தில் எழுந்தருளி இருப்பவனாகக் கருதல்.

**கணபதி குரு வணக்கம்**

*விக்கின நிவர்த்தி.*

**இலக்குமி குரு வணக்கம்**

*திரவிய பரிபூரண பூர்த்தி.*

**சதாசிவாதி குரு வணக்கம்**

*கர்ம பரிபூரண சித்தி.*

**சிவாசன பூஜை**

*பிரிதிவியாதி தத்துவங்களைக் கடந்தபிரானை ஆன்மாக்களுக்கு அனுக்கிரகத்தின் பொருட்டு தத்துவங்களை அனுஷ்டிக்கச் செய்தல்.*

**மூர்த்தி**

*ஓங்கிய ஒளியாய் இருத்தல் (தடத்தம்)*

**இறைவனுருவம்**

*மூர்த்திமான் எல்லாவற்றையும் கடந்து நிற்றல். (சொரூபம் ஆவாஹனம் முதல் புஷ்பதானம் வரையிலுள்ள கிரியைகளின் விளக்கம்)*

ஆவாகனம்

எதிர்முகமாக்கல் (ஆவாகன முத்திரை) பூஜையின் பொருட்டு மூலமந்திரத்தைச் சொல்லி வரவழைத்து அபிஷேகம் செய்வது. சிவபிரானை அருளினால் அறிந்து அதில் அழுந்தி நிற்றல்.

ஸ்தாபனம்

எழுந்தருளி இருக்குமாறு வேண்டுதல். (ஸ்தாபன முத்திரை) சிவபிரான் அருளில் அழுந்தி நிற்றலை நிலை பெறச்செய்வது.

சன்னிதானம்

அண்மையில் உள்ளவராக ஆக்கிகொள்ளுதல். (சந்நிதான முத்திரை) அனுக்கிரகப்படும் தன்மையும் உண்டு பண்ணுதல் சமீபித்த சம்பந்தம்.

சந்நிரோதனம்

பூஜிக்கும்வரை நீங்காதிருக்கச் செய்தல் (சந்நிரோதன முத்திரை) எப்போதும் என்னிடத்தில் இருக்கவேண்டு மென்று பிரார்த்தித்தல்.

அவகுண்டனம்

சிவமுகங்களிலிருந்தும் இருதயாதி ஸ்தானங்களில் இருந்தும் உண்டாகும் ஒளியை உருவகப்படுத்துவான் வேண்டி கவசமந்திரத்தால் சுற்றுதல்.

சிவலிங்கத்தைச் சுற்றி மூன்று அகழ் உண்டானதாகப் பாவித்தல்.

மேற்சொல்லிய ஒலியை அசுத்தமாகிய புறவொலி இல்லாமல் தடுத்தல்.

**திக்குபந்தனம்**

மேற்சொல்லிய ஒளியில் அசுத்தமாகிய புறவொளி விரவாது தடுத்தல்.

சிவமுகங்களிலிருந்தும் இருதயாதி ஸ்தானங்களில் இருந்தும் உண்டாகும் ஒளியை உருவகப்படுத்த கவசமந்திரத்தால் சுற்றுதல்.

**தேனுமுத்திரை**

அமிர்தமயமான தன்மையை ஆக்குதல். (பசுவின்மடி போன்று காட்டும் முத்திரை)

பாத்தியம்

மாயையின் இரண்டு தன்மையினின்றும் நீங்குதல். (ஆணவம் கன்மம்) மூலமந்திரத்தை "நம" என்னும் இறுதியை உடைய திருவடிகளில் நிறைவு அடைவித்தல்.

ஆசமனம்

தன்னைப் பெருமானிடத்து அர்ப்பணித்துக் கொள்ளுதல்.

மூலமந்திரத்தை "ஸ்வதா" என்ற இறுதியை உடையதாக ஐந்து தடவை மும்மூன்று தரம் நீரைத் தருதல்.

அருக்கியம்

அஞ்ஞானம் நீங்குதல் மூலமந்திரத்தால் கடவுளுடைய சிரங்களில் நீரைத் தருதல்.

**புஷ்பதானம்**

சுத்த சைதன்யமாகி ஆனந்தம் பெறுதல். *(மூல மந்திரத்தால் மலர்களைச் சாத்துதல்)*

**திருமஞ்சனம்**

மல நிவர்த்தி.

**சந்தனம் வஸ்த்திரம் ஆடை அளித்தல்**

போக மோட்ச சத்தி.

**தூபம்**

கிரியாசத்தி விளக்கம் உத்தியாகிய சிவசந்நிதானத்தில் விடுவது. ஆணவமலமாகிய அறியாமையை கிரியாசத்தியைக் கொண்டு நீக்குதலாகும்.

**தீபம்**

ஞானாசத்தி விளக்கம் சித்சத்தியாகிய தீபம் ஆன்மாவினது மலத்தைப் போக்கும் ஞானத்தை விளக்குதலாகும்.

**நைவேத்தியம்**

சர்வான்ம திருப்தி. ஆத்ம குணமாகிய அகங்காரம் மோஹம் என்பவற்றையே அமுதமாகச் சமர்ப்பித்தல்.

**லயாங்கபூஜை**

முத்தான்மா சிவத்திநின்றும் ஒதுங்குதல். சங்கற்பம் குரோதம்.

போகாங்க பூஜை

அறுவகைக்குணங்கள் பிராப்தி. அவை 1. எங்கும் நிறைந்து நிற்றல். 2. எல்லோருக்கும் மேம்பட்டவனாக இருத்தல். 3. எல்லாம் தோன்றுதற்கு காரணமாக இருத்தல். 4. எல்லா கிரியைகளையும் செய்வித்தல். 5. எல்லாவற்றையும் பெற்றுக்கொள்பவனாக இருத்தல். 6. எல்லாவற்றிலும் உள்ளும்புறமும் கலந்திருத்தல்

நிராஞ்சனம்

மாயை இரண்டிலும் சிபெருமானுடைய கலப்புத் தன்மையைப் புலப்படுத்தல்.

ரட்சை

திருநீறு சாத்தல் (விக்கின நிவர்த்தியின் பொருட்டாக)

இராசோபசாரங்கள்

1. கண்ணாடி : இச்சாசத்தி வியாபாகம் (பிரபஞ்ச சிருஷ்டி)

2. குடை: சிவ வியாபகத்தில் ஆன்மா வியாப்பியமாகுதல்.

3. சாமரம்: ஆன்மா சாயுச்சிய அனுபவசித்தி.

வெள்ளை விசிறுதல்

ஆன்மவிருத்தியை ஒன்றுபடுத்தல்.

**விசிறி**

ஒன்றுபடுத்திய ஆன்மவிருத்தியை சிவனிடம் சேர்த்தல்.

**ஆத்ம சமர்ப்பணம்**

சர்வார்த்த சித்தி

**பவித்திர தானம்**

மனமொழி மெய்களால் வரும் குற்றம் நீங்குதல்.

**தோத்திரம்**

சிவத்தில் லயமாக்குதல்.

**பிரதட்சிணம்**

சிவபோகத்துள் அழுத்திய ஆன்மாவை மீளாத்தன்மையைப் புலப்படுத்தல்.

**நமஸ்காரம்**

பதப்பிராப்தி

**சண்டேஸ்வர பூஜை**

அபராத மன்னிப்பு கிரியைகளைப் பூரணமாக்குதல்.



## சிவபூஜையில் பயன்பெறும் திருப்பாடல்கள்

### வழிபாட்டிற்கு இறைவன் துணை நிற்கவேண்டும்

(பாடல்)

"வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்றன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் றன்னைச்
சுடர்த்திங்கட் சடையனைத் தொடர்ந்து
நின்றென்
தாயானைத் தவமாய தன்மையானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடற் றிருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே"

*(திருநாவுக்கரசர்)*

### பூதசுத்தி

மண்ணதனில் ஐந்தை மாநீரில் நான்கை
வயங்கெரியின் மூன்றை மாருதத்திரண்டை
விண்ணதனில் ஒன்றை விரிகதிரை
தண்மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க
எண்ணதனில் எழுத்தை ஏழிசையைக் காமன்
எழிலழிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.

**தானசுத்தி** (பூஜை இடத்தைச் சுத்தி செய்தல்)

"தாவி முதல் காவிரி நல்யமுனை கங்கை
சரஸ்வதி பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்
கோவியொடு குமரிவருதீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக் கீழ்க்கோட்டத்தெம் கூத்தனாரே"
*(திருநாவுக்கரசர்)*

**திரவிய சுத்தி** (பூஜைக்குரிய பொருள்களைச் சுத்தி செய்தல்)

"ஆவாகி ஆவினில் ஐந்துமாகி
அறிவாகி அழலாகி அவியுமாகி
நாவாகி நாவுக்கோர் உரையுமாகி
நாதனாய் வேதத்தின் உள்ளோனாகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்றமாகிப்
புக்குளால் வாசமாய் நின்றானாகித்
தேவாதித் தேவர் முதலுமாகிச்
செழுஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்றவாறே"
*(திருநாவுக்கரசர்)*

**மந்திர சுத்தி**

"பேராயிரம் பரவி வானோரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க்கு என்றும்
வாராத செல்வம் வருவிப்பானை
மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத் திண்சிலைக் கைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே"

## அங்கபூஜை

காயமே கோவிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறைய நீரமையவாட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே!

உடம்பெனும் மனையகத்து உள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே.

(திருநாவுக்கரசர்)

## சிவோகம்பாவனை

"வழித்தலைப் படுவான் முயல்கின்றேன்
உன்னைப் போலென்னைப் பாவிக்கமாட்டேன்
சுழித்தலைப்பட்ட நீரதுபோலச்
சுழல்கின்றேன் சுழல்கின்றதென்னுள்ளம்
கழித்தலைப்பட்ட நாயதுபோல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்துநீ அருளாயின செய்யாய்
ஒற்றியூரெனும் ஊருறைவானே" (சுந்தரர்)

## பெட்டகக்கோயில் திறக்க

"பண்ணினேர் மொழியாளுமை பங்கரோ
மண்ணினார் வலஞ்செய் மறைக் காடரோ
கண்ணினால் உமைக்காணக் கதவினைத்
திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே"

(திருநாவுக்கரசர்)

## சுவாமியை ஸ்நான வேதிகையில் எழுந்தருளப் பண்ணல்

"பந்த பாச மறுத்தெனை யாட்கொண்ட
மைந்தனைம் மணவாளனை மாமலர்க்
கந்த நிர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எந்தை ஈசனைக் கண்டினிதாயிற்றே"

## அட்டபுஷ்பம்

"அட்டமாமலர் சூடி யடும்பொடு
வட்டப்புன் சடைமாமறைக் காடரோ
நட்ட மாடியும் நான் மறை பாடியும்
இட்டமாக இருக்கு மிடமீதே"

## தூபதீபம்

எந்தமது சிந்தைபிரியாத பெருமானென இறைஞ்சி
இமையோர்
வந்து துதிசெய்ய வளர் தூபமொடு தீபமலிவாய்மை
யதனால்
அந்தியமர் சந்திபல அருச்சனைகள் செய்ய
அமர்கின்ற அழகன்
சந்தம லிகுந்தள நன்மாதினொடு மேவுபதி
சண்பை நகரே !!

## எண்ணெய்க்காப்பு

"ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர் அந்தணர்
பிரியாத சிற்றம்பலம்
நாடினாய் இடமாநறுங் கொன்றை நயந்தவனே

பாடினாய் மறையோடு பல் கீதமும் பல்சடைப்
பனிகால் கதிர்வெண்டிங்கள்
சூடினாய் அருளாய் சுருங்கவெம் தொல்வினையே

### பஞ்ச கௌவியம்

பாவமும் பழிபற்றற வேண்டுவீர்
ஆவி லஞ்சுகந்தாடும் அவன்கழல்
மேவராய் மிகவும் மகிழ்ந்துள்குமின்
காவலாளன் கலந்தருள் செய்யுமே !

### பாலமுதம்

பாலினால் நறுநெய்யால் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினால் மணமாலை கொணர்ந் தடியார் புரிந்தேத்தச்
சேலினார் வயல் புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்
காலினால் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே !!

### நெய்

நெய்யாடி நின்மலனே நீலகண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே
மையாடுகண் மடவாள் பாகத்தானே
மான்றோ லுடையாய் மகிழ்ந்து நின்றாய்
கொய்யாடு கூவிளங் கொன்றை மாலை
கொண்டடியேன் நானிட்டுக் கூறிநின்று
பொய்யாத சேவடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே !!

## பால்

பாலை யாடுவர் பன்மறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனார்
வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவ ரங்கமே!

## தேன்

செய்யமேனியன் தேனொடு பால்தயிர்
நெய்யதாடிய நீலக்குடி அரன்
மையலாய் மறவா மனத்தார்க் கெலாம்
கையிலா மலகக் கனியொக்குமே.

## கருப்பஞ்சாறு

ஆலைப்படு கரும்பின் சாறுபோல
அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத்தான்காண்
சீலமுடை அடியார் சிந்தையான்காண்
திரிபுரம் மூன்றெரிபடுத்த சிலையினான்காண்
பாலினொடு தயிர்நறு நெய்யாடி னான்காண்
பண்டரங்க வேடன்காண் பலிதேர்வான்காண்
வேலைவிட முண்டமிடற்றினான் காண்
விண்ணிழிதண் வீழி மிழலையானே.

## பல கனிச்சாறு

கனியிலும் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்தார்க் கிடைமருதனே.

## இளநீர்

நெய்யினொடு பாலிளநீரா டினான்காண்
நித்த மணவாளன் எனநிற்கின்றான்காண்
கையில் மழுவாளொடு மானேந்தினான்காண்
காலனுயிர் காலால் கழிவித்தான்காண்
செய்ய திருமேனி வெண்ணீற்றினான்காண்
செஞ்சடைமேல் வெண்மதியம் சேர்த்தினான்காண்
வெய்ய கனல் விளையாட் டாடினான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலையானே.

## நீராட்டல்

தடங்கொண்டதொர் தாமரைப் பொன்முடிதன்மேல்
குடங்கொண்டடியார் குளிர்நீர் சுமந்தாட்டப்
படங் கொண்டதொர்பாம் பரையார்த்தபரமன்
இடங்கொண் டிருந்தான் றன்இடைமரு தீதோ.

## சந்தனக்குழம்பு

தொண்டனேன் பட்டதென்னே தூயகா விரியின் நன்னீர்
கொண்டிருக்கோதி யாட்டிக் குங்குமக்குழம்புசாத்தி
இண்டை கொண்டேறநோக்கி ஈசனை எம்பிரானைக்
கண்டனைக் கண்டிராதே காலத்தைக் கழித்தவாறே.

## தூபம்

தொங்கலுங் கமழ்சாந்து மகிற்புகையுந் தொண்டர் கொண்டு
அங்கையால் தொழுதேத்த அருச்சுனர்க்கன் றருள் செய்தான்

செங்கயல்பாய் வயலுடுத்த செங்காட்டங் குடியதனுள்
கங்கை சேர்வார்சடையான் கணபதீச் சரத்தானே.

**நிறுவுதல்** (ஆவாஹனம்)

என்னிலாரும் எனக் கினியாரில்லை
என்னிலும் இனியான் ஒருவன்உளன்
என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு
என்னுள்ளே நிற்கும் இன்னம்ப ரீசனே !!

**தியானம்** (இறைவன் திருவடிவம் சிந்தித்தல்)

அஞ்சு திருமுகமே நிறங்கள் ஐந்தே
ஐமூன்று திருக்கண்ணே அத்தம்பத்தே
வஞ்ச மழுச்சூலம் வாள் அபயம்வச்சிரம்
வலப்பாலே அமர்ந்து மற்றிடப்பால்
துஞ்சனலும் அங்குசமும் அணியும் பாம்பும்
தோற்கயிறும் உடனுண்டே தோகையுண்டே
பிஞ்சுமதி முடிமேல் கங்கையுண்டே
இப்படி எம்பிரானாரைக் கண்டவாறே .

உச்சிமுகம் ஈசனாம் ஒளிதெளியப் பளிங்கே
உத்தரபூருவ திசையைநோக்கி உறுமுகத்தே
நிச்சயித்த முகத்தின்கீழ் பூர்வதிசை நோக்கி
திகழுமுகந் தற்புருடம் கோங்கலர் போல் நிறமே
அச்சுறுத்தும் அகோரமுகம் மறக்கரிது கராளம்
அவிழ்நாடி வலத்தோளில் தென்னோக்கி அமரும்
செச்சை நிறத்தெரிவை முகமிடந்தோண் மேல்வாமம்
சிறுபுறத்தின் முகஞ்சத்தி யோசாதந் திகழ்வார்.

**அருக்கியம்** (நீர்கொடுத்தல்)

தோடொரு காதனாகியொரு காதிலங்கு சுரிசங்கு
நின்று புரளக்
காடிடமாக நின்று கனலாடு மெந்தை இடமாய
காதல்நகர் தான்
வீடுடன் எய்துவார்கள் விதியென்றுசென்று வெறிநீர்
தெளிப்பவிரலால்
நாடுடனாடு செம்மையொலி வெள்ளமாரும்
நனிபள்ளி போலும் நமர்காள்.

**பரிவட்டம்**

கட்டிட்ட தலைகையேந்திக் கனலெறியாடிச்சீறிச்
சுட்டிட்ட நீறுபூசிச் சுடுபிணக் காடராகி
விட்டிட்ட வேட்கையார்க்கு வேறிருந்தருள்கள் செய்து
பட்டிட்ட உடையராகிப் பருப்பதம் நோக்கினாரே.

**புஷ்பாஞ்சலி** (மலர்தூவுதல்)

நின்போ லமரர்கள் நீண்முடி சாய்ந்து நிமிர்ந்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந்தழைப்பன பாங்கறியா
என்போலிகள் பறித்திட்ட இலையும் முகையும்எல்லாம்
அம்போதெனக் கொள்ளும் அய்யன் அய்யாறன்
அடித்தலமே.

**நிவேதனம் செய்ய**

ஆலந்தானுகந்து அமுதுசெய்தானை ஆதியை அமரர்
தொழுதேத்தும்
சீலந்தான் பெரிதும் உடையானைச் சிந்திப்பாரவர்
சிந்தையுளானை

ஏலவார் குழலாள்உமை நங்கை என்றும் ஏத்திவழிபடப்
பெற்ற
காலகாலனைக் கம்பன் எம்மானைக் காணக்கண்
அடியேன் பெற்றவாறே!

**ஜெபம் பண்ணிச் சாத்த**

இட்டனும் அடியேத்துவார் இகழ்ந்திட்டநாள் மறந்
திட்ட நாள்
கெட்டநாளிவை என்றலாற் கருதேன் கிளர் புனற்
காவிரி
வட்டவாசிகை கொண்டடிதொழுது ஏத்துபாண்டிக்
கொடுமுடி
நட்டவா உனைநான் மறக்கினும் சொல்லுநா
நமச்சிவாயவே!

**தண்டம் பண்ண**

அங்கத்தை மண்ணுக்காக்கி ஆர்வத்தை உனக்கேதந்து
பங்கத்தைப் போகமாற்றி பாவித்தேன் பரமாநின்னைச்
சங்கொத்த மேனிச்செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றா யென்றபோதால் இங்குற்றேன்
என்கண்டாயே.

**ஓமம்**

பூமென் கோதை உமையொரு பாகனை
ஓமம் செய்தும் உணர்மின்கள் உள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்த நந்தீவினை நாசமே.

## பெட்டகக் கோவிலில் எழுந்தருளப் பண்ணல்

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போதும் முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போடு மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே!

சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட்டுறை மைந்தா
இதுநன் கிறைவைத்து அருள்செய்க எனக்குன்
கதவந் திருக்காப்புக் கொள்ளுங் கருத்தாலே.

## சண்டேசுரர் துதி

தழைத்ததோ ராத்தியின்கீழ்த் தாபரமணலாற்கூப்பி
அழைத்தங்கே ஆவின்பாலைக் கறந்துகொண்டாட்டக்
கண்டு
பிழைத்ததன் தாதைதாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோர் அமுதம் ஈந்தார் குறுக்கை வீரட்டனாரே !

## பிழை பொருத்தருள வேண்டல்

கல்லாப் பிழையும் கருதாப்பிழையும் கசிந்துருகி
நில்லாப்பிழையும் நினையாப்பிழையும் நின்ஐந்
தெழுத்தைச்
சொல்லாப்பிழையும் துதியாப்பிழையும் தொழாப்
பிழையும்
எல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே

சிவபூசைக்குரிய தோத்திரப்பாடல்கள் முற்றும்

திருச்சிற்றம்பலம்

---- ❀ ----

உ

குருபாதம்

# சிவார்ச்சனா விதிகள்

தருமையாதீனக் குருமுதல்வர்
**குருஞான சம்பந்தப் பெருமானால்**
இயற்றி அருளப்பெற்றது

*சரசுவதி மகால் நூலகச் சுவடிகளிலிருந்து*
*முதன்முதலாக வெளியிடப்பெறுவது*

திருச்சிற்றம்பலம்

சகமலா தடிமைஇல்லை தானலாற்றுணையுமில்லை
நகமெலாந்தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி
முகமெலாம் கண்ணீர்மல்க முன்பணிந்துஏத்தும்
தொண்டர்
அகமலால் கோவில்இல்லை ஐயன் ஐயாறனார்க்கே!
(திருநாவுக்கரசர்)

திருச்சிற்றம்பலம்

# சிவபூஜைக்கு அங்கமாகிய சூரிய பூஜாவிதி விளக்கம்

**நித்திய கருமம்**

அதிகாலையில் எழுந்திருந்து இயன்ற சுத்தி செய்துகொண்டு திருநீறணிந்து சிவபெருமானைத் தோத்திரம் செய்யவும். விதிப்படி மலஜலங்கழித்து தந்த சுத்தி செய்தல் வேண்டும். பூஜாஸ்தானத்தை கோமயத்தால் மெழுகிக் கோலமிடல் வேண்டும். பூஜாபாத்திரங்களைச் சுத்திசெய்து பூஜா ஸ்தானத்தில் கவிழ்த்து வைத்தல் வேண்டும். தோய்த்துலர்ந்த வஸ்திரங்கள். தலைதுவட்ட உலர்ந்த வஸ்திரம் திருமஞ்சனம் வடிக்கட்ட தூய்மையான வஸ்திரம் இவைகளடங்கிய மடிப்பையும் ஒரு குறுணியளவுக்கு குறையாதுள்ள திருமஞ்சனபாத்திரம் திருநீறு இவைகளோடு பாதரட்சை தரித்து தனக்கு சமீபமுள்ள உத்தமமாகிய புண்ணியநதிகள், புண்ணிய தீர்த்தத் தடாகங்கள் (அல்லது) மத்திமமாகிய ஏரிகுளம் (அல்லது) அதமமாகிய கிணறு அதமாதமமாகிய பாண்ட தீர்த்தம் இவைகளில் இயன்றதொன்றை அடைந்து விதிப்படி ஸ்நானஞ்செய்து உலர்ந்த வஸ்திரம், உத்தரியம், கௌபீனமும் தரித்து அனுஷ்டானமும் முடித்தல் வேண்டும்.

**திருமஞ்சனம்**

பாத்திரத்தை விளக்கி ஜலம்விட்டு “ஓம் ஹம் அஸ்திராய பட்” என்று கொட்டி சுத்தி செய்துகொண்டு பாத்திரத்தில் நாலுவகைச் சுத்திகளையும் செய்து

பரிவட்டத்தால் ஹிருதயாய நம என்று வடித்தெடுத்து வலது கையில் அரைக்குத் தாழாது கொண்டுவந்து முன்னமே சுத்தி செய்யப்பட்டிருக்கின்ற பூஜாஸ்தானத்தின் கீழ்த்திசையில் சிறிது ஜலம் விட்டு வைக்கவும்.

## பூஜாத் திரவியாதி

வில்வம், அறுகு, பத்திர புஷ்பங்கள், அபிஷேகத் திரவியம் முகவாச முதலியவைகளை பூஜாஸ்தானத்தின் கீழ்த்திசையில் வைத்துக்கொண்டு விதிப்படி சிவபெருமானுக்கு சிம்மாசனம் செய்வித்து நிர்மாணித்து வலம் வர வசதியாய் வைத்து சிவபெருமானை எழுந்தருளப் பண்ணிப் பூஜிக்கவும். பூஜாஸ்தானத்திற்கும் தனக்கு மத்தியில் மூன்றங்குல அகலமும் பூஜாஸ்தானம் எவ்வளவு நீளமோ அவ்வளவு நீளமும் உள்ள பலகை வைத்து அதில் கீழ்ப்பாகத்தில் தாமிரத்தால் சூரிய அருக்கியபாத்திரம் அதற்குமேல் அருக்கியாதி தீர்த்தம்விட ஒரு பாத்திரம் சாமான்ய அருக்கிய பாத்திரம், விசேடார்க்கிய பாத்திரம், சங்கபீடத்தில் சங்கம் மணி அட்சதை முதலியனவும் வைத்தல் வேண்டும்.

கீழ்த்திசையில் அபிஷேகம் செய்ய ஸ்நான வேதிகையையும் அதன் தென்பால் திருமஞ்சனம் அபிஷேக திரவியமும் புஷ்பங்களையும் வைக்கவேண்டும். பூஜாஸ்தானத்தில் இந்திராக்கினி திக்கின் (கிழக்கு, தென்கிழக்கு) மத்தியில் தாமிரத்தால் செய்த சூரிய இயந்திரத்தையும் உத்தமமாகிய பசுநெய் அல்லது மத்திமமாகிய எள் நெய்யால் தாமரை நூல் அல்லது பருத்தி நூலிட்டு தீபத்தை ஏற்றி வாயு திக்கில் வைத்து குங்கும கந்தபுஷ்பங்கள் சாத்தி ஓம் ஹாம் மகாலட்சுமியே நம என்று பூஜிக்கவும்.

### பூசகர் ஆசனம்

பூஜாஸ்தானத்தின் தென்பாகத்தில் விதிக்கப்பட்ட ஆசனப்பலகையின் பேரில் குசாசனம் (தருப்பை) சித்திராசனம் (தூயஆடை) கிருஷ்ணாஜினம் (மான்தோல்) வியாக்கிராஜினம் (புலித்தோல்) இவைகளில் இயன்றதொன்றை விரித்து அதில் வடக்குதிக்கை நோக்கி பத்மாசனம் அல்லது சுகாசனத்தில் சரீரத்தை நேரே நிறுத்தி உட்காரவும்.

### தவவேடம் சுத்தி

பவித்திரமணிந்து ஆசமனம் செய்து உஷ்ணீஷம் உத்தரீயம் உபவீதம் விபூதி உருத்திராக்கமாகிய பஞ்சாங்க பூஷணமும் தரித்து தவக்கோலம் பூண்டு சகளிகரணம் பிராணாயாமம் செய்து வேறு சிந்தனையின்றி சிவபெருமானை உஷக்காலத்தில் அன்புடன் பூசித்தல் வேண்டும்.

### கணபதி வணக்கம்

சிகா முத்திரையால் "ஓம் ஹாம் கணபதயே நம:" என்று தலை உச்சியில் இரண்டு பக்கத்திலும் மூன்றுமுறை குட்டிக்கொண்டு கணபதியைத் தியானிக்கவும்.

### குரு வணக்கம்

நமஸ்கார முத்திரையால் சிரசின் மீது ஓம் ஹாம் குருப்பியோ நம: என்று குருவைத் தியானித்து அஞ்சலி பந்தனம் செய்யவும்.

**சங்கற்பம்**

ஓம் சிவ சிவ மமோபாக்த துரிதயக்ஷயத்துவாரா ஸ்ரீபரமேச்வர பிரித்யர்த்தம் சம்போராக்ஞயா பிரவர்த்தமானஸ்ய அத்ய பிரும்மஸ த்விதிய பிரார்த்தே சுவேதவராக கல்ப்பே வைவஸ்வத மந்வந்தரே அஷ்டாவிம்சதிதமே கலியுகே பிரதமபாதே சம்பூத்வீபே பாரதவருஷே பரதக்கண்டே மேரோர் தக்ஷிணபார்ஸ்வே ஹிமசேது மத்யே சகாப்தே அஸ்மின் வர்த்தமான வியவஹாரிகே பிரபவாதி சஷ்டி சம்வத்சராணாம் மத்யே - ஸம்வத்ரே ---அயனே -- ருதௌ -- மாசே - பக்ஷே - நக்ஷத்ரே - திதௌ மம உபாக்த ஸமஸ்த துரிதக்ஷயத்துவாரா ஸ்ரீ பரமேச்வர பிரித்யர்த்தம் பூஜாம் கரிஷ்ய (அல்லது) சிவபெருமானுடைய திவ்யமங்கள வடிவத்தை பூசிக்கின்றேனென்று கருதியேனும் சிவ பூஜையைச் செய்யத் தொடங்கவும்.

**திருமஞ்சன தீர்த்தம்**

விலாமிச்சவேர், வெட்டிவேர், பச்சைக்கற்பூரம், ஏலம், சந்தனம், பன்னீர், கங்கை, பாதிரி முதலிய பரிமளப் பொருள்களை இட்டு "பானு நேத்ராப்யாம் நம" என்று இரண்டு உள்ளங்கைகளில் இரண்டு நடுவில் சுட்டுவிரல்களை மடக்கியும் ஓம் அஸ்திராய் பாத்திரத்தின் மீது ஐந்து இடங்களில் பத்திரம் சந்தன குங்குமமும் சாத்தி தீர்த்தத்தில் நிதிக்ஷணம்(பார்த்தல்) புரோக்ஷணம்(தெளித்தல்) தாடனம் (தட்டுதல்) அப்யுக்ஷணம் (மூடுதல்) தாளத்திரயம் திக்பந்தன அவகுண்டனம் (சுற்றுதல்) தேனு முத்திரை கொடுக்கவும்.

**அருக்கியாதி ஸ்தாபனம்**

எல்லா அருக்கிய பாத்திரங்களிலும் சங்கத்திலும் சிறிது நீரிட்டு "அஸ்திராயபட்" என்று கொட்டி சுத்தி செய்து

அபிஷேக கலசத்தால் திருமஞ்சன தீர்த்தத்தில் "கவசாய நம" என்று எடுத்து இருகரங்களாலும் மூலாதாரத்திலிருந்து விந்து ஸ்தானம் வரையில் தூக்கி அங்கு நின்று அமிர்த தாரையாகப் பெருகுகிறதாகச் சிந்தித்து "ஓம் கம் கஷோல்காய வௌஷட்" என்று சூரியார்க்கியத்திலும் "ஹிருதயாய வௌஷட்" என்று சாமானிய அருக்கியம் சங்கம் இவற்றில் முற்கூறியபடி தனித்தனியே நீரை எடுத்து மலர்களுக்கு அட்சதை முதலானதுகளை இடவும்.

**சூரிய சகளி கரணம்** (அ-சூரிய கர நியாசம்)

"ஓம் அஸ்திராய பட்" என்று வலக்கையால் இடக்கையை மேலும் கீழும் இரண்டு தரமும் இடக்கையால் வலக்கையை மேலும் கீழும் ஒவ்வொரு தரமும் துடைத்து (கரசுத்தி செய்து) 'ஓம் ஹராம் ஹ்ரிம்ஸ' சிவசூரிய வௌஷட் என்று கைகள் அமிர்தத்தால் நனைந்ததாகப் பாவித்துக் கும்பிட்டுக் கைகளை விரித்து சேர்த்து 'ஓம் அம் ஹ்ருதயாய நம' என்று இரண்டு பெருவிரலில் இரண்டு சுட்டுவிரலாலும் 'ஓம் அம் அர்க்காய சிரசே நம' என்று இரண்டு சுட்டுவிரலில் இரண்டு பெருவிரலாலும் 'ஓம் அம் பூர்புவ ஸ்வரோம் ஜ்வாலினி சிகாய நம' என்று இரண்டு மோதிர விரலில் இரண்டு பெருவிரலாலும் 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்றுஇரண்டு நடுவிரலில் இரண்டு பெருவிரலாலும் 'ஓம் பம்பானு நேத்ராப்யாம நம' என்று இரண்டு உள்ளங்கைகளில் இரண்டு நடுவிரல் சுட்டுவிரல்களை மடக்கியும் 'ஓம் அஸ்திராய நம' என்று இரண்டு சுட்டுவிரலில் இரண்டு பெருவிரலாலும் நியாசித்து (தடவி) 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்று இரு கைகளை ஒன்றை ஒன்றினால் சுற்றி (அவகுண்டனம்செய்து) 'ஓம் ஹ்ரம் ஹ்ரிம்ஸ சிவசூர்யாய வௌஷட்' என்று கும்பிடவும், பின்பு

(ஆ-சூரிய அங்க நியாசம்)

'ஓம் ர: அஸ்திராய பட்' என்று இரு கைகளினால் உடலைப் பாவனையாகத் துடைத்து (அங்க சுத்தி செய்து) 'ஓம் ஹ்ராம் ஹ்ரிம்ஸ: சிவசூர்யாய நம' என்று அமிர்தம் உடலில் நனைந்ததாகப் பாவித்துக் கும்பிட்டு 'ஓம் அம் ஹ்ருதயாய நம' என்று வலக்கைப் பெருவிரலோடு கூடிய மோதிர விரலால் மார்பிலும் 'ஓம் அம் அருக்காய சிரசே நம' என்று மேற்படி விரல்களால் சிரசிலும், 'ஓம் அம் புப்புவ: ஸ்வரோம் ஜ்வாலிநி சிகாய நம' என்று மேற்படி விரல்களால் குடுமியிலும் நியாசித்து, 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்று இருகை நீட்டிய சுட்டுவிரல்களால் கழுத்தைச் சுற்றி மார்புக்கு மத்திவரையும் காட்டியும், 'ஓம் பம்பாநு நேத்ராப்யாம் நம' என்று வலக்கை நடுவிரல் சுட்டுவிரல்களை நீட்டி கண்களுக்கு நேராகக்காட்டியும், 'ஓம் ர: அஸ்திராய நம' என்று வலக்கைப் பெருவிரலோடு கூடிய மோதிர விரலால் வலது உள்ளங்கையிலும் நியாசித்து, 'ஓம் ர: அஸ்திராய பட்' என்று வலக்கை நடுவிரல் மூன்றாலும் இடது உள்ளங்கையில் மூன்றுதரம் தட்டி, (தாளத்திரயம்செய்து) 'ஓம் ர: அஸ்திராய பட்' என்று தனக்குக் கீழும் மேலும் எட்டுத்திக்கிலும் வலக்கைப்பெருவிரல் நுனியும் சுட்டுவிரல் நுனியும் சேர்த்துச் சொடித்து (ஒலி எழுப்பித்) திக்குபந்தனம் செய்து 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்று வலக்கை நீட்டிய சுட்டுவிரலால் தன்னை வலமாகச் சுற்றுதலாகிய அவகுண்டனம் செய்து, 'ஓம் ஹ்ராம் ஹரிம் ஸ: சிவசூர்யாய வௌஷட்' என்று இரு கைகளையும் விரித்து தனக்கு நேராகப் பாதமுதல் சிரசுவரைத் தூக்கிக் காட்டுதலாகிய மகா முத்திரையைக் காட்டி தன்னை சிவசூரியனாகப் பாவித்துக்கொள்ளவும்.

**தரிசனார்க்கியம்**

தாமிர மயமான (சூரிய) அருக்கிய வட்டகையில் நீர்விட்டு, அதில் செஞ்சந்தனம் சிறிது கரைத்துச் சிவந்த மலரிட்டு எழுந்து கிழக்கு முகமாக முழங்கால்களைப் பூமியில் ஊன்றிக்கொண்டு இருகைகளாலும் அருக்கிய வட்டகையை எடுத்து, சிரசுவரையும் உயர்த்திக் கொண்டுபோய், 'ஓம் ஹ்ராம் ஹரிம்ஸ: சிவசூர்யாய நம' என்று சூரியனுக்கு எதிரில் தரிசனார்க்கியம் கொடுத்து(விட்டு) மேற்படி மந்திரத்தை செபிக்கவும். பிறகு கிழக்கு நோக்கி உட்காரவும்.

**சூரிய அருக்கியம்**

'ஓம் ர: அஸ்திராய பட்' என்று தாமிர உலோகமான அருக்கிய நீரைவிட்டு அலம்பி வைத்துக்கொண்டு, பிறகு அபிஷேக கலசத்தில் நீர் எடுத்து அதனை இரு கைகளினாலும் நெற்றிவரையும் உயர்த்திக்கொண்டு போய் அக்கலசத்தில் புருவ நடுவிலிருந்து பெருகுகின்ற அமிர்தம் கலந்ததாகப் பாவித்து அதனை இறக்கிக்கொண்டு வந்து தனது முன்னே வைத்திருக்கும் அருக்கிய வட்டகையில் 'ஓம் கம் கஷோல்காய வௌஷட்' என்று ஊற்றி, 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்று அருக்கிய வட்டகையில் செஞ்சந்தனம் சிறிது கரைத்து புஷ்பம் அட்சதை போட்டு சூரிய ஆறு அங்க மந்திரங்களாலும் சூரிய மூலமந்திரத்தாலும் பத்திரம் கிள்ளிப்பூசித்து, 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்று பெருவிரல் மடக்கிய வலக்கையினால் மூடி, முன்படித்த மந்திரங்களால் அபிமந்திரித்து (மானதமாகக் கூறி) 'ஓம் ர: அஸ்திராயபட்' என்று சோடிகா முத்திரையால் அருக்கிய வட்டகைக்குத் திக்குப்பந்தனமும், 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்று நீட்டிய வலக்கை சுட்டுவிரலால் அவகுண்டனமும் (வலமாகச் சுற்றுதலும்) செய்து 'கஷோல்காய வௌஷட்' என்ற தேனு முத்திரை கொடுக்கவும்.

### அருக்கிய ப்ரோட்சணமும் விக்கின நீக்கமும்

முன் பூசித்த அருக்கிய நீரை எடுத்து ஒரு மலரினால் தொட்டு தன்னையும் பூஜாஸ்தானத்தையும் புஷ்பம் முதலிய பூஜாத்திரவியங்களையும் எட்டு இதழ்களையுடைய தாமரைப்பூ வரைந்த தாமிரத்தகட்டை (சூரியத்தகட்டை)யும் 'ஓம் ர: அஸ்திராய பட்' என்று இரு கைகளினால் இரண்டு பக்கத்திலும் நாராசமுத்திரையினால் தெறித்து, அங்குள்ள விக்கினங்களைப் போக்கிச் சூரியனைப் பூஜிக்கவும்.

### சூரிய பூஜா சக்கரம் (தனியாகத் தரப்பெற்றுள்ளது)

### துவார பூஜை

தனக்கு எதிரே ஓர் ஆசனத்தில் சூரியனைப் பூஜிக்க வைத்துள்ள தாமரைப்பூவை வரைந்த தாமிரத்தகட்டிலே 'ஓம் அம் தண்டி[illegible]' என்று சூரியத்[illegible]கட்டில் மேற்குத் துவாரத்தில் [illegible] [illegible]லிலும், [illegible] [illegible]களாய நம' என்று மேற்குத்து[illegible] [illegible]ாலி[illegible], '[illegible] அம் கணபதயே நம' என்று சூரிய[illegible] [illegible] [illegible]ம் அம் குருப்யோ நம' என்று [illegible] [illegible] திக்கிலும் துவார மூர்த்திகளை [illegible].

### சூரிய அஷ்[illegible] [illegible]ஜை

[illegible] [illegible] வரைந்து சூரியத் தக[illegible] [illegible] [illegible]னாய நம' என்று வெளி[illegible] [illegible] [illegible].

1\. [illegible] [illegible] சூரியதகட்டில் அக்னி[illegible] [illegible],

2\. [illegible] [illegible] முறையில் [illegible]

3. 'ஓம் அம் ஆராத்யாய நம' என்று பொன்னிறச் சிங்கத்தையும்,

4. 'ஓம் அம் பரமசுகாய நம' என்று ஈசான மூலையில் பசுமை நிறச் சிங்கத்தையும் தியானித்து அருச்சிக்கவும்.

அதன் பிறகு அந்நான்கு சிங்கங்கள் தாங்கிய வெண்ணிறப் பதுமத்தின் மேல் 'ஓம் அம் பத்மாய நம' 'ஓம் அம் கர்ணிகாயை நம' என்று கர்ணிகை (தாமரைக்கொட்டை) யோடு கூடியதாகிய வெண்ணிறப் பதுமத்தைப் பூஜிக்கவும். பின்னர்,

1. 'ஓம் ராம் தீப்தாயை நம' என்று சூரிய பதுமத்தின் கிழக்கின் இதழிலும்,

2. 'ஓம் ரீம் சூட்டுமாயை நம' என்று தென்கிழக்கு இதழிலும்,

3. 'ஓம் ரும் ருஜாயை நம' என்று தெற்கு இதழிலும்,

4. 'ஓம் ரும் பத்ராய நம' என்று தென்மேற்கு இதழிலும்,

5. 'ஓம் ரேம் விபூத்யை நம' என்று மேற்கு இதழிலும்,

6. 'ஓம் ரைம் விமலாய' நம என்று வடமேற்கு இதழிலும்,

7. 'ஓம் ரோம் அமோகாயை நம' என்று வடக்கு இதழிலும்,

8. ஓம் ரௌம் வித்யுதாயை நம என்று வடகிழக்கு இதழிலும்,

9. ஓம் ஸர்வதோமுக்யை நம என்று கர்ணிகையின் ஈசான பக்கத்திலும் நவ (ஒன்பது) சக்திகளை அருச்சித்து அந்த

நவசக்திகளைச் செந்நிறமாயும், ஒரு கையில் தாமரையும், ஒரு கையில் சாமரமும் உடையவர்களாயும் தியானித்து விஸ்புர முத்திரை காட்டுக.

## சூரியமூர்த்தி பூஜை

'ஓம் அர்க்கரஸநாய நம' என்று சூரிய பதுமத்தின் நடுவே சூரியமூர்த்தியின் ஆசனத்தை பூஜித்து

"தவளாம் பொருஹாருடம் டாடிமீகுஸுமப்ரபம்
ஸ்புரக்த மஹாதேஜா விருத்த மண்டல மத்யகம்
அம்ஸா ஸக்த ஸ்புடச் வேத ஸ்நானம் கரத்வயம்
எகாஸ்யம் சிந்தயேத் பானும் த்விநேத்ரம் ரக்த
வாஸனம்"

இப்பொருளமைந்த தமிழ்ப்பாடல்

"பேசிடு வெண்டாமரைஆ சனனாகிச் சிவந்த
பேரொளிசேர் தருவிருத்த மண்டல மத்தியனாய்
ஆசிறுமா துள்ங்கமலர் போலும் நிறத்தினனாய்
அலர்ந்தனலாய் இருபுயங்கள் அமைந்த
வெண்டாமரையில்
காசறுநா ளம்பிடித்த கையிரண்டினோடி
கருதுமொரு முகமிரண்டு கண்களுடையவனாய்த்
தேகமலி செய்யவுடைதனை உடுத்தோனாகித்
திகழ்சிவ சூரியனைநிதம் சிந்தனை செய்திடுவோம்"

என்று சூரியமூர்த்தியை துதித்து

'ஓம் கம் கஷோல் காய சூரிய மூர்த்தயே நம' என்று சூரிய ஆசனத்தின் மீது மூர்த்தியை வலக்கைப் பெருவிரலிலும் கூடிய மோதிர விரலால் திவ்ய முத்திரையால் நியாசம் செய்.

'ஓம் பம் பானு நேத்ராந்யா நம' என்றும் வலக்கை நடுவிரல் சுட்டி விரல்களை நீட்டி நேத்திரம் கொடுத்து கை நிறைய புஷ்பம் வைத்துக் கும்பிட்டுக்கொண்டு நெற்றி நடுவில் பிரகாசிக்கும் செந்நிற பிந்து தனது புஷ்பாஞ்சலியில் வந்ததாக எண்ணிச் சூரிய பதுமத்தின்மேல், 'ஓம் ஹ்ராம் ஹரிஸ, சிவ சூரிய நம' என்று சூரிய மூலத்தால் புஷ்பத்தைச் சாத்தி 'ஓம் கம் கஷோல்காய நம' என்று ஆவாகன முத்திரையால் ஆவாகனமும், அம்மந்திரத்தினாலேயே ஸ்தாபன முத்திரையால் ஸ்தாபனமும் சந்நிதான முத்திரையால் ஸந்நிதானமும் சந்நிரோதனமும் செய்து 'ஓம் ஹ்ராம் ஹரிம்ஸ: சிவசூர்யாய நம' என்று சூரியமூர்த்திக்கு பிரிதி உண்டாகப் பிம்ப முத்திரையினை காண்பிக்க.

**இருதயாதி நியாசம்**

'ஓம் அம் ஹ்ருதயாய நம' என்று சூரியமூர்த்தியின் இருதயத்தில் பெருவிரலோடு கூடிய சிறுவிரலாலும் 'ஓம் அம் அர்க்கயை சிரசே நம' என்று சூரியமூர்த்தியின் சிரசில் பெருவிரலோடு கூடிய மோதிரவிரலாலும், 'ஓம் அம் பூர்ப்புவ ஸ்வரோம் ஜ்வாலிநி சிகாய நம' என்று சூரியமூர்த்தியின் சிகையில் பெருவிரலோடு கூடிய நடுவிரலாலும், 'ஓம் ஹ்ரும் கவசாய நம' என்று சூரியமூர்த்தியின் கழுத்தைச் சுற்றி மார்பு நடுவில் இருகைகளின் சுட்டுவிரல்களாலும், 'ஓம் ர: அஸ்திராய நம' என்று சூரியமூர்த்தியின் உள்ளங்கைகளில் பெருவிரலோடு கூடிய மோதிர விரலாலும் பாவனையாக நியாசம் செய்து, 'ஓம் ஹ்ராம் ஹ்ரிம்ஸ சிவசூர்யாய நம' என்று உயர்த்திய பெருவிரலையுடைய வலக்கை முஷ்டியினால் ஏகத்துவம்(ஒன்றாய் இருக்கும் தன்மையாக) பாவித்து 'ஓம் ர: அஸ்திராயபட் என்று சோடிகை முத்திரையினால்

சுவாமிக்கு திக்குப்பந்தனமும் 'ஓம் ஹ்ரும் , கவசாய வௌஷட்' நீட்டிய வலக்கைச் சுட்டுவிரலால் சுவாமிக்கு அவகுண்டனமும், 'ஓம் ஹ்ராம் ஹ்ரிம்ஸ சிவசூர்யாய வௌஷட்' என்று சுவாமிக்குத் தேனுமுத்திரையும், மகா முத்திரையும் காண்பிக்கவும்.

**உஷா பிரத்தியுஷா தேவி பூஜை**

சூரியமூர்த்திக்குத் தென்பாகத்திலும், வடபாகத்திலும் முறையே 'ஓம் ஹாம் உஷா தேவ்யை நம' 'ஓம் ஹாம் பிரத்யுஷா தேவ்யை நம' என்று பூஜித்து சந்தன புஷ்பம் சாத்துக.

**பாத்திய ஆசமன அருக்கிய முதலியன**

சூரிய அருக்கிய வட்டகையை எடுத்து இடக்கையில் வைத்துக்கொண்டு மிருகு முத்திரையினாலே 'ஓம் கம் கஷோல் காய நம' என்று சூரியமூர்த்தியின் பாதங்களிலே இரண்டுமுறை பாத்தியமும் 'ஓம் கம் கஷோல் காய ஸ்வதா' என்று சூரியமூர்த்தியின் சிரசிலே மூன்று முறை அருக்கியமும் கொடுக்கவும். பிறகு 'ஓம் கம் கஷோல் காய வௌஷட்' என்று புஷ்பம் அருகு அட்சதை சாத்துக.

**பாவனாபிஷேகம்** (பாவனை-மனத்தினால் நியாசித்தல்))

கையிலே அபிஷேகக் கலசத்தை ஏந்தி எண்ணெய்க் காப்பு மரக்காப்பு, பஞ்சாமிர்தம், பால் , தயிர், தேன், இளநீர், சந்தனம் முதலிய அபிஷேகப் பொருள்களை மனத்தினாலே நினைத்து, 'ஓம் கம் கஷோல் காய ஸ்வாஹா' என்று புறத்தே ஜலம் கொண்டு பாவனாபிஷேகம் செய்யவும்.

'ஓம் கம் கஷோல் காய நம' என்று செஞ்சந்தனம் புஷ்பம் முதலியவற்றை சூரியமூர்த்திக்குச் சாத்தவும். அதன் பின்னர் 'ஓம் ஹ்ராம் ஹ்ரிம்ஸ: சிவசூர்யாய நம' என்று கையில் புஷ்பம் ஏந்தி அஞ்சலியாக மும்முறை சாத்தி 'ஓம் ஹ்ராம் ஹ்ரிம்ஸ: சிவசூர்யாய ஸ்வாஹா' என்று மிருகு முத்திரையினால் ஒருமுறை அருக்கியம் கொடுத்து பத்ம முத்திரை, பிம்பமுத்திரைகளைக் காட்டவும்.

### சூரிய லயாங்க பூஜை

சூரிய மூர்த்தியின் இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்த்திரம் என்ற ஆறு இடங்களிலும் முறையே சூரிய ஷடங்க மந்திரங்களால் அர்ச்சித்து ஆறு அங்க மந்திர தேவதைகளை தியானித்து அவர்களிடம் போகாங்க பூசைசெய்ய அனுமதிக்க வேண்டிப் பெற்றுக்கொள்ளவும்.

### சூரிய போகாங்க பூஜை

சூரியமூர்த்தியின் இருதய முதலிய ஆறு இடங்களிலிருந்து அந்தந்த மந்திர மூர்த்தியைக் கிரகித்து 'ஓம் அம் ஹிருதாய நம' என்று சூரிய பதுமத்தின் அக்கினி தளத்திலும்(இதழிலும்) 'ஓம் அம் அர்காய சிரசே நம' என்று நிருதி தளத்திலும், 'ஓம் அம் புர்புவ ஸ்வரோம ஜ்வாலிநி சிகாய நம' என்று வாயு தளத்திலும் 'ஓம் பம் பாநு நேத்ராப்யாம் நம' என்று சூரியமூர்த்திக்கு நடுவிலும், 'ஓம் ர: அஸ்திராய நம' என்று கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு என்ற நான்கு தளங்களிலும் பூசிக்கவேண்டும்.

இருதயம், சிரசு, சிகை, கவசம் ஆகிய நான்கு மந்திரமூர்த்திக்கு திராசினி முத்திரையும் ஒரு சேரக்காட்டிக் கும்பிடவேண்டும்.

பின்பு பூசித்த முறைப்படியே ஸ்வாஹா அந்தமாக அருக்கியம் கொடுக்கவும்.

**சோமாதி கிரக பூஜை**

'ஓம் கம் சோமாய நம' என்று சூரியபத்ம தளத்தின் கிழக்கு நுனியிலும், 'ஓம் பும் புதாய நம' என்று தெற்கு நுனியிலும், 'ஓம் ப்ரும் பிருஹஸ் பதயே நம' என்று மேற்கு நுனியிலும், 'ஓம் பம் பார்க்கவாய நம' என்று வடக்கு நுனியிலும், 'ஓம் அம் அங்காரகாய நம' என்று தென்கிழக்கு நுனியிலும், 'ஓம் சம் சனைச்சராய நம' என்று தென்கிழக்கு நுனியிலும், 'ஓம் ரம் ராஹவே நம' என்று என்று வடமேற்கு நுனியிலும் 'ஓம் கம் கேதுவே நம' என்று வடகிழக்கு நுனியிலும் பூசித்து, சந்திரன் முதலிய கிரகங்களைத் தியானித்து 'ஸோமதிப்ய ஸ்வாஹா' என்று அருக்கியம் 'அபிஷேகம் செய்து ஸோமாதிப்யோ நம' என்று கந்தப் புஷ்பம் சாத்தி நமஸ்கார முத்திரைக் காண்பித்து (விரல்களை நீட்டி இரண்டு கைகளையும் சேர்த்து வலது பெருவிரல் மேல் இடது பெருவிரலை வைத்துக் காண்பிப்பது) அருக்கியம் கொடுத்து 'ஸபதி வாராய சிவசூர்ய தூபம் ஸ்வாஹா' 'தீபம் ஸ்வாஹா' 'பாயஸ நைவேத்தியம் ஸ்வாஹா' என்று நிவேதித்து, 'ஓம் கம் கஷோல்கர்ய ஸ்வாஹா' என்று கற்பூர தீபம் செய்து தருப்பணம் (கண்ணாடி) குடைசாமரம் விசிறி முதலி உபசாரங்களையும்புஷ்பத்தால் பாவனையாகச் செய்து அப்புஷ்பங்களைச் சாத்தி மீண்டும் 'கஷோல் மந்திரத்தால்' ஆசமனார்க்கியம் கொடுக்கவும்.

**ஜெப சமர்ப்பணம்**

இடக்கையிலே ஒரு பாத்திரத்தின் மேல் புஷ்பம் எடுத்து வைத்துக்கொண்டு அதனை 'ஓம் ர: அஸ்திராயபட்' என்று

அருக்கிய ஜலத்தால் புரோட்சித்து வலக்கையால் மூடி 'ஓம் ஹ்ராம் ஹ்ரிம்ஸ சிவசூர்யாய நம' என்று பத்துதரம் ஜெபித்து அதற்குத் திக்குப்பந்தன அவகுண்டனம் செய்து அப்பாத்திர புஷ்பத்தை வலக்கையில் வாங்கி அதில் அருத்கிய நீர்விட்டு 'ஓம் ஹ்ராம் ஹ்ரிம்ஸ சிவசூர்யாய வெளஷட்' என்று உற்பவ முத்திரையினாலே அந்த அருக்கிய நீரை சூரியமூர்த்தியின் வலது கையில் (எதிரில்) விட்டு புஷ்பத்தைச் சூரியமூர்த்திக்கு சாத்தி பின்பு சூரிய ஷடங்க மந்திரங்களையே செபித்து முன்போல் புஷ்பம் சாத்தவும்.

**சூரியதோத்திரம்**

"தண்டி யாத்யை ஸேவ்ய மாநோ விமலமுக சதுஸ்ஸிம்ஹ
பாதாசஸ்தே.
திப்தாத்யை சக்திஜாலை அருணமணிருசி ஸ்ரீ கஷோல்
கார்க்கமூர்த்தி
ஸ்வாஸ்க ஸ்வாஸ்க க்ரஹிர்க்ஷப்டிமுக பரிவிர்தச்
வேதபத்மாகிருட
ஸ்வேதாப் ஜாம்ஸத் விஹஸ்த: சுபநய நயுக்ள
ஸுர்யோவதாந்த"

இப்பொருள் தரும் தமிழ்ப்பாடல்

"விளங்கு தண்டி முதலோரால் சேவிக்கப் படுவோன்
விமலன் முதல் நாற்சிங்க பதாசனத்தின் மேலோன்
களங்கமிலாத் தித்தைமுதல் சத்திகண் சகிதன்
கருதருண மணி ஒளியன் கடோகத் கான்மமுர்த்தி
துளங்கலில்தன் [illegible] அங்கமெனும் கிராய
தொ[illegible] வேதகஞ்சத்து
இவர்ந்தோன்

வளங்கொள் சுவேதாம்பு சத்தோள் கரன் இருநல்
விழியோன்
வருசிவசூரியன் காக்க மகிழ்ந்தடியேங்களையே"

என்று சூரியமூர்த்தியைத் தோத்திரம் செய்து நமஸ்காரம் பண்ணுக.

'ஓம் கம் க்ஷோல்காய நம' என்று சூரியமூர்த்தியைப் பூசிக்கவும்.

"சூரியமூர்த்தியே ! எனது அபசாரங்களை எல்லாம் பொருத்தருள்க" என்று பிரார்த்திக்கவும். பிறகு

**சூரிய நிரோதார்க்கியம்**

'ஓம் கம் க்ஷோல்காய நிரோதார்க்கியம் சுவாஹா' என்று சூரியார்க்கியத்தினால் நிரோதாருக்கியம் கொடுத்து சூரியமூர்த்தயே, சிவபூஜை முடியும் வரையும் இங்கு அருள் கூர்ந்து எழுந்தருளி இருத்தல் வேண்டும் என்று சூரிய மூர்த்தியை வேண்டிக்கொள்ளவும். பின்பு சிவபூஜை செய்ய ஆரம்பிக்கவும்.



# சிவபூஜை செய்திடும் முறைமைகள்

### சாமானிய அருக்கியம்

சூரியபூஜை முடிந்தவுடன் பிறகு ஆசமனம் செய்து திருநீறு தரித்துக்கொண்டு சகளிகரணம் 'பிராணாயாமம்' செய்து வடக்கு முகமாக இருந்து சாமானிய அருக்கிய பாத்திரத்தை அஸ்திர மந்திரத்தால் சோதித்து, பிந்துஸ்தானத்தில் அமிர்த மயமாக 'இருதயாய வௌஷட்' என்று சுத்தநீரால் நிறைத்து நறுமலர்கள், அறுகு, அட்சதைப்போட்டு, 'ஓம்' என்று ஏழு முறை பூசித்து அபிமந்திரித்து அஸ்திர கவசங்களால் ரட்சாவகுண்டனம் செய்து 'இருதயாய வௌஷட்' என்று தேனுமுத்திரையும் கொடுத்து அந்நீரினாலே மேற்குத் துவாரத்தைப் புரோட்சிக்கவும்.

### துவார பூஜை

நடுவே கர்ப்பக்கிரகமாகவும், அர்த்தமண்டபமாகவும், கிழக்குப்பார்த்த திருவாயிலாகவும் பாவித்து, அத்திர மந்திரத்தால் அந்த வாசலையும் புரோட்சிக்கவேண்டும். அந்த வாசலில் மேல்புறத்தில் தென்பக்கத்தில், பெருத்த வயிறும் கறுத்த நிறமும் மேற்கைகள் இரண்டிலும் கோடாலி ஜெபமாலைகளும் மற்றையக் கைகளில் தோட்டியும், மோதகமும் தரித்திருப்பவராகவும் தியானம் பண்ணுக. 'ஓம் ஹாம் கணபதியே நம' என்று குட்டிக்கொண்டு வழிபடுக.

அதற்கு வடக்கே இடது புறத்தில் வெள்ளை நிறமாய் வெள்ளைப் புடவையுடன் ஜெபமாலை புத்தகங்கள் இரண்டு கைகளிலும் தரித்தவளாய் தெளிவுள்ளவளாய் சரஸ்வதியைத் தியானித்து 'ஓம் ஹாம் சரஸ்வத்யை நம' என்று வழிபடுக. இவர்களிருவருக்கும் நடுவே பொன்னிறமும் வலதுகையில் தாமரைப்பூவும் இடதுகையில் ஸ்ரீபலமும் இரண்டு யானை இரண்டு புறத்திலும் நின்று குடத்தில் அமிர்தத்தினைப் பொழிகின்ற தாரையினாலே நனைகின்றவளாகத் தியானித்து 'ஓம் ஹாம் மகாலட்சுமியை நம' என்று பூசித்திடுக.

கீழ்ப்பாகத்தில் சிவப்புவர்ணம் மூன்று நேத்திரம் ஜடை வலது கையில் ஜெபமாலை இடது கையில் சூலம் இப்படியாக நந்திகேசுவரைத் தியானித்து 'ஓம் ஹாம் நந்தினே' நம என்று பூசித்திடுக

அவருக்கு தெற்கே வெள்ளை நிறமும் மகர வாகனமும் வலது கையிலே நிலோற்பலமும் இடதுகையிலே பூர்ணகும்பமுமாகத் தியானித்து 'கங்காய நம' என்று கங்கையை வழிபடுக.

அதற்கு வடக்குப் பக்கத்தில் கறுத்த நிறமும் மூன்று கண்களும் இடதுகைக் கபாலம் வலதுகைச் சூலமுடைய வராய் எண்ணி 'ஓம் ஹாம் மகா காளாய நம' என்று பூசித்திடுக.

அவருக்கு வடக்குப் பக்கத்தில் பச்சை நிறமும் ஆமை வாகனமும் இடதுகை நீலோற்பலமும் வலதுகை பூர்ணகும்பமுமாகாத் தியானித்து 'ஓம் யமுனாய நம' என்று பூசித்திடுக.

பூஜைக்கு விக்கினம் வராமல் இரட்சித்துக் கொள்ளுங்கள் என்று விண்ணப்பம் செய்தல் வேண்டும்.

### விக்கினோச்சாடனம்

மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கண்களை மேனோக்கி நிரிஷனம் செய்து ஆகாசத்திலுண்டான விக்கினங்களை நீக்கி 'அஸ்திராய உம் பட்' என்று நாராச முத்திரையினாலே புஷ்பத்தை எறிந்து சொர்க்கத்திலுள்ள விக்கினங்களையும் நீக்கி 'சிளம் பாசுபதாஸ்தீய உம் பட்' என்று வலது குதிக்காலடியினால் பூமியில் மூன்று தடவை தட்டி பூமியிலுள்ள விக்கினங்களையும் பூஜாஸ்தானத்தி னின்றும் போக்குதல் வேண்டும்.

### அஸ்திர துவாரபாலகர் பூசை

கீழ்ப்படி நடுவில் (இலட்மிக்கு கிழக்காக ) அக்கினி சுவாலையாகிய நிறமும், நாலுமுகமும், முகங்கள்தோறும் மூன்று கண்களும், சடாமகுடமும், இளம்பிறையும், பிளவுபட்ட பற்களும், இடைவிடாமல் இடிமுழக்கம் போன்ற குரலும், வலதுகையிரண்டிலும் முறையே சூலமும் அபயமும் இடது கை இரண்டிலும் முறையே வேலும் வரதமும் கிழக்கு முகமாக இருக்கிற அஸ்திர துவாரபாலகரை 'ஓம் ஹாம் ஹஸ்திர துவாராய நம' என்று பூஜித்து பின்பு கவாடங்களில் வலமிடமாக வந்து 'ஓம் ஹாம் விமலாய நந்தினே, ஓம் ஹாம் சுவாகவே நம' என்று நந்தியைப் பூஜித்துப் பின்பு பிரதட்சணமாக வந்ததாக நினைந்து நிருதி திக்கில் வாஸ்துபதியை அன்னவாகனமும் பொன்னிறமாய் தாடி மீசைகளுடனே நான்கு முகமும் மேல் வலது கையில் ஜெபமாலை இடது கையில் தண்டாயுதமும் இடதுகையில் சுருக்கும் வலது கையில் கமண்டலமுமாய்த் தியானித்து 'ஓம் ஹாம் வாஸ்வதிபதயே நம பீர்மணே நம' என்று பூஜிக்கவும். பின்பு அந்தத் திக்கில் துவாரத்திற்குத் தென்புறமாக

மேற்குமுகமாக 'ஓம் ஹாம் நந்திகேஸ்வராய நம' என்று தியானித்துப் பூசிக்கவும்.

**ஸ்நபனம்**

ஸ்நபனத்தின் பொருட்டு அஸ்திரத்தால் சுத்தி செய்யப்பெற்ற பரிவட்டத்தால் இருதயத்தால் நான்குவித சோதனைகளையும் செய்து திருமஞ்சனக் குடத்தையும் அதில் திருமஞ்சனத் திரவியங்களைப் பொடி பண்ணிப்போட்டு புஷ்பாதி பூஜைக்குரிய உபகரணங்களையும் உண்டாக்கிக்கொண்டு பிறகு தருப்பாசனம் முதலிய ஆசனங்களிலே வடக்குமுகமாக சுகாசனத்தில் உட்கார்ந்துகொள்ளவும்.

**பூஜாமண்டபத்து பூஜை**

பூஜா மண்டபத்தை சோடிகா முத்திரையால் அஸ்திராய பட் என்று திக்குப்பந்தனமும் அதீக்கண முத்திரையால் கவசாய வௌஷட் என்று அவகுண்டனமும் செய்து மூன்று அகழ்களும் மதிள்களும் மண்டபத்தைச் சுற்றி உண்டானதாகப் பாவிக்கவும்.

**பூதசுத்தி**

பிராணாயாமம் கரநியாசம் செய்துகொண்டு இரண்டு கால்களின் பெருவிரல்கள் தொடங்கி இடுப்பளவு இரண்டு உருவமுடையதாகவும் அதற்குமேல் பிர்மரந்திரம் வரையில் ஒரே உருவமுடையதாகவும் ஹிருதயம், கழுத்து, தாலு, புருவ மத்தி, பிர்மரந்திரம் இந்த அஞ்சு ஸ்தானங்களிலும் மூலாதாரத்திலும் நின்றெழுந்த இடபிங்கலைகளினாலே கத்தரிகை போலப் பின்னலுற்று இருப்பதாகவும் அந்த அஞ்சு

தானங்களிலும் கீழ்நோக்கி இருக்கின்ற அந்த தாமரை முகுளங்களையுடையதாகவும் உள்த் துளையுடனே கூடின ரூபமாகவும் இருக்கின்ற சுழுமுனா நாடியைத் தியானித்து அந்தச் சுழுமுனா நாடிக்குள்ளும் புறம்பும் அமுததாரையை வருஷிக்கிற பரமவியோம ரூபிணி சத்திவியாபகமாகவும், அந்த நாடியின் நடுவே ஊங்காரம் கனல் போலச் ஜொலியா நிற்கிறதாகவும் சிந்தித்து வாயுவை இடது நாசியிலே பூரித்துக் கும்பித்து ஊங்காரத்தின் மேலே சித்தம் வைத்து வாயுவை மேனோக்கி நடத்திக்கொண்டு வருகிற அவதாரத்திலே அஸ்திராய உம் பட் என்று இடைவிடாது உச்சரித்து அஞ்சு தாமரைகளிலும் சோடிகா முத்திரையினாலே தெளித்து கீழ்நோக்கிய தாமரை முட்டுக்களை மேல்நோக்கியதாகவும், மலர்ந்ததாகவும் பண்ணி வாயுவைத் திரும்ப வலது நாசியினால் வெளியே விடவும். மீளவும் வாயுவைப் பூரித்து இருதய கமலத்தில் வசிப்பவனும் நட்சத்திரம் போலப் பிரகாசிப்பவனும் ஆத்மபீஜமாகிய ஹகாரஸ் வருபவனும் நாமையனுமான ஆத்மாவை ஊங்காரத்தின் மேல் வைத்து ஹகார வடிவாயும் ஊங்காரத்தின் மீது வீற்றிருப்பதாயும் புரியட்டக சரீரத்திலே மூடப்பட்டதாகவும் சூட்சுமமாயும் பிந்து வடிவுடையதாகவும் தனிமையாயும் நிராமயனாயும் இருக்கிறவனாகவும் ஆத்மாவைத் தியானித்து கும்பகம் செய்து வாயுவை மேல்நோக்கி இழுத்து ஸம்ஹார முத்திரையினாலே ஹிருதய கமலத்தினின்றும் கிரகித்து ஓம் ஹூம் ஹாம் ஹூம் ஆத்மனே நம என்று மேலே ஏற்றி இத்தேகத்தில் திரும்பப் போகம் பூசிக்க வருபவனாய்ப் பாவித்து துவாத சாந்தத்திலிருக்கும் சிவனிடத்தில் சேர்க்கவும்.

### சூக்கும தேகசுத்தி

இவ்வாறு பிற வடிவினால் சிவனிடம் சேர்ந்த ஆன்மாவானது சூக்குமதேகசுத்தியின் பொருட்டு சத்தமும்

பரிசமும் சதுர்முகனிடத்திலும் ரசம், விஷ்ணுவினிடத்திலும், ரூபமும் கந்தமும், உருத்திரனிடத்திலும், புத்தியும் ஆங்காரமும், மகேஸ்வரனிடத்திலும், மனம் விந்து சதாசிவனிடத்திலும் ஆக ஒடுக்கிக்கொள்ளவேண்டும்.

அது எவ்வாறெனில், கந்தத்தில் பிருதிவியும் ரசத்தில் ஜலமும் ரூபத்தில் அக்கினியும் ஸ்பரிசத்தில் வாயுவும் சப்தத்தில் ஆகாசமும் இந்தத் தன் மாத்திரைகளை தாமஸ அஹங்காரத்திலும், வாக்கு, பாதம், பாயுறு உபத்தங்கள் ராஜச அகங்காரத்திலும், சுரோதரம், துவக்கு, சட்சு, ஜிஹ்வா கிராணங்களும் மனசும் சாத்வீக அகங்காரத்திலும் அவ்வகங்காரமாவது புத்தியிலும் அந்தப்புத்தியாவது குணங்களிலும் அந்தக் குணத்துவமானது பிரஹ்ருதியிலும் அந்தப் பிரஹ்ருதியும் இராகவித்தைகளும் கலையிலும் புருஷ தத்துவம் காலதத்துவம் நியதிதத்துவம் கலை இவைகள் மாயையிலும் இவ்வாறு லயத்தை அமைந்ததாக பாவித்து சுத்த வித்தியாதத்துவம் ஈஸ்வர தத்துவத்திலும் அது சதாசிவ தத்துவத்திலும் அது சத்தி தத்துவத்திலும் அது சிவ தத்துவத்திலும் அதுவும் சுத்த விகாரமான பிந்துவில் லயத்தை அடைந்ததாக பாவிக்கவேண்டும்.

### ஸ்தூல தேகசுத்தி - நிவர்த்திகலா சுத்தி

இனி ஸ்தூல தேகசுத்தி செய்யும் முறை. நன்றாக நிமிர்ந்துகொண்டு வலக்கையில் புஷ்பமெடுத்துக்கொண்டு கும்பக முத்திரையும், பிரிதிவி மண்டலம் பொன்னிறம், கடினம், வஜ்ர ரேகை அடையாளம், ஹ்லாம் பீஜம் சத்தியோசாதம் ஆதிதேவதை பிர்மா காரணேஸ்வரன் இவைகளையுடைத்தாய் நிவர்த்திகலா ரூபமாய் நாற்கோணமாய் பாதமுதற் சிரசு மட்டும் வியாபித்திருக்கு ம்

பிரிதிவி தத்துவத்தை இடது நாசியால் மூச்சை இழுத்து ஹ்லாம், ஹ்லாம், ஹ்லாம், ஹ்லாம், ஹ்லாம் நிவர்த்திகலாய உம்பட் என்று ஐந்து மாத்திரை கும்பகம் செய்து 'பிரதி தத்துவம் கோதயாமி' என்று சோதிக்கப் பெற்றதாகவும். அதில் உள்ள சப்த, ரூப, ஸ்பர்ச, ரச, கந்த கலா குணங்கள் நாசமடைந்ததாகவும் பாவித்து, மூச்சை வலது நாசியின் வழியால் விடவேண்டும். பிருதிவி மண்டலத்தை பிருதிவிக்கு விருத்தமான வரவினாலே பிருதிவியை நாசம் செய்ததாக சிந்திக்கவும். இது நிவர்த்தி கலாசுத்தி.

### பிரதிஷ்டா கலாசுத்தி

பிறகு முன்போல பூரகம் செய்து நாபி முதல் வியாபித்துள்ள அப்பு மண்டலம் நெகிழ்ச்சிக்குணம் மூன்றாம்பிறைச் சந்திரன் போன்ற ரூபம், சாந்தம், வெள்ளை நிறம் பத்மரேகை அடையாளம், 'ஹ்ரீம்' என்கிற பீஜாட்சரம் வாமதேவனாதிபதி; விஷ்ணுகாரணேஸ்வரன் பிரதிஷ்ட கலாரூபமாக விளங்குகின்ற பிரதிஷ்டாகலையைத் தியானித்து ஓம் ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம் பிரதிஷ்டாகலாய உம்பட் என்று நான்கு மாத்திரை கும்பகம் செய்து அப்பு தத்துவம் சோதயாமி என்று அப்பு தத்துவம் சோதிக்கப்பட்டதாயும் அதிலுள்ள ரசரூப ஸ்பரிச சப்த குணங்கள் நாசமடைந்ததாகவும் தியானித்து முன்போல ரேசகமார்க்கமாக காற்றை விடவும். ஜலதத்துவத்தை தனக்கு விருத்தமான அக்கினியால் சூழப்பட்டதாயும் அக்கினியின் வடிவமுடையதாகவும் சிந்திக்கவேண்டும். இது அப்பு தத்துவசோதனம்.

### வித்தியாகலா சுத்தி

மீண்டும் முன்போலப் பூரகம் செய்து ஹிருதய முதல் வியாபித்துள்ள அக்கினி மண்டலம் முக்கோணம் சிவப்பு

நிறம் சுடுகை ஸ்வஸ்திக் அடையாளம் ஹ்ரும் என்னும் பீஜாக்ஷரம் அகோரமதி தேவதை உருத்திரன் காரணேஸ்வரன் வித்தியாகலா ரூபம் நினைத்து 'ஓம் ஹ்ரும் ஓம் ஹ்ரும் வித்தியாகலாய ஹூம் பட்' என்று மூன்று மாத்திரை காலம் கும்பகம் செய்து தேயுதத்துவம் சோதயாமி என்று தேயு தத்துவம் சோதிக்கப்பெற்றதாயும் அதிலுள்ள குணங்களான ரூப பரிச சுத்த குணங்கள் நாசமடைந்ததாகவும் கருதி முன்போலக் காற்றை விடவேண்டும். அக்கினியைத் தனக்கு விருத்தமான ஜலத்தினால் சூழப்பெற்றதாயும் நினைக்க வேண்டும். இது அக்கினி தத்துவ சோதனம்.

**சாந்திகலா சுத்தி**

திரும்பவும் வாயுவைப் பூரகம் செய்து கண்ட முதல் வியாபித்துள்ள வாயு தத்துவத்தையும் வாயுமண்டலம், அறுகோணம், ஆறு புள்ளிகள், அடையாளம், கருப்புநிறம், கலித்தல் ஹைம் பீசாட்ஷம், தத்புருஷனாதி தேவதை, ஈஸ்வரன் காரணேஸ்வரன் சாந்திகலாரூபம் இவற்றை எண்ணி ஓம் ஹைம் ஓம் ஹைம் சாந்திகலாய ஹூம்பட் என்று இரண்டு மாத்திரைகள் கும்பகம் செய்து வாயு தத்துவம் சோதிக்கப்பெற்றதாகவும், அதிலுள்ள சப்தரிச குணங்கள் நாசமடைந்ததாகவும் கருதி மெதுவாக மூச்சை வெளியில் விடவும். வாயுவை அதற்கு விருத்தமான பிருதிவியினாலே அவ்வாயுவை நாசம் பண்ணுக. இது வாயு தத்துவ சோதனம்.

**சாந்தியாதித கலா சுத்தி**

பிறகு முன் போலப் பூரகம் செய்து புருவ நடு முதல் துவாத சாந்தம் வரையில் வியாபித்துள்ள ஆகாய தத்துவத்தை

ஆகாசமண்டலம் வட்டவடிவம் படிக நிறம் சூன்யம் விந்து சந்தியினால் அலங்கிருதம் 'ஹௌம்' என்கிற பீஜாட்சரம் ஈசானன் அதிபதி சதாசிவம், காரணேஸ்வரன் சாந்தியாதித சொரூபமாக தியானித்து 'ஓம் ஹெம் சாந்தியாதிகலாய ஹூம்பட்' என்று ஒருமுறை தீர்க்கமாகக் கும்பகம் செய்து ஆகாசத் தத்துவம் சோதயாமி என்று ஆகாச தத்துவம் சோதிக்கப் பெற்றதாயும் அதிலுள்ள அநித்திய அவ்வியாக அக தத்துவம் முதலிய ரூபங்களை விட்டு நித்தியமாயும் வியாபகமாயும் சுத்தமாயும் நிர்மலமாயுமுள்ள பரமரகசிய சொரூபம் நிற்பதாகவும் தியானித்து மூச்சை நிருத்தி ரேசகம் செய்யவேண்டும். பின்னர் பரமாகாசரூபமான இந்த சரீரத்தை வலதுகால் பெருவிரலிலுள்ள காலாக்கினியை 'ஓம் ஹும் அஸ்திராயபட்' என்ற மந்திரத்தால் எழுப்பி உடம்பு முழுவதும் தகனம் செய்யப்பட்டதாகக் கருதவேண்டும். இவ்வாறு தஹிக்கப்பட்ட உடல் எரிந்த சாம்பற் கயிறு போல இருப்பதாய் பாவித்து அதன்மீது 'ஓம் ஹாம் சக்தியே வௌஷட்' என்ற மந்திரோர்ச்சாரணத்தால் சத்தியின் திருவருளால் அமிருதமழைபொழிந்து குற்றமற்ற படிகமயமான திவ்ய சரீரம் வந்ததாய் பாவிக்க வேண்டும்.

### அங்க நியாசங்கள்-கண்டபங்கி நியாசம்

திவ்ய முத்திரையால் தன் ஹிருதயத்தில் 'ஓம் ஹாம் சிவாசனாய நம' என்று நியாசித்து சிவாசனமாகிய மந்திராசனம் கற்பித்து மீண்டும் அவ்விடத்தில் அம்முத்திரையாலேயே 'ஓம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம' என்று நியாசித்து சிவமூர்த்தி எழுந்தருளியுள்ளதாகப் பாவித்து நியாசித்து 'ஈசானமூர்த்தாய நம' என்று பெருவிரல் சுட்டுவிரல் நுனியால் சிரசிலும் 'தத்புருஷவக்த்ராய நம'

என்று சுட்டுவிரல் பெருவிரல் நுனியாலே நெற்றியிலும் 'அகோர ஹிருதாய நம' என்று நடுவில் பெருவிரல் நுனியால் இருதயத்திலும், 'வாம தேவ ஹ்ருதயாய நம' என்று கட்டை விரல் அணிவிரல் நுனியால் நாபியிலும் 'சத்தியோஜாத மூர்த்தயே நம' என்று சிறுவிரல் பெருவிரல் சேர்ந்த நுனியால் வலம் முழந்தாட்களிலும் நியாசம் செய்தல் வேண்டும்.

**முண்டபங்கி நியாசம்(தொடுதல்)**

ஈசான மூர்த்தாய நம, ஊர்த்துவ சிரசு
தத்புருஷமூர்த்தாய நம, பூர்வ சிரசு,
அகோர மூர்த்தாய நம, தக்ஷிண சிரசு
வாமதேவ மூர்த்தாய நம, வடக்கு சிரசு,
சத்தியோஜாதமூர்த்தாய நம, மேற்கு சிரசு

இவைகளில் அந்தந்த விரல்களால் முன்போல முறையே நியாசம் செய்தல் வேண்டும்.

**வக்தர நியாசம்**

'ஈசான ஊர்த்துவ வக்தராய நம' என்று ஊர்த்துவ முகத்திலும் (ஈசான முகம்) 'தத்புருஷ பூர்வ வக்தராய நம' என்று கிழக்கு முகத்திலும் 'அகோர தக்ஷண வக்தராய நம' என்று தெற்கு முகத்திலும், 'வாமதேவாய உத்திரவக்தராய நம' என்று வடக்கு முகத்திலும், 'சத்யோஜாதாய பச்சிம வக்தராய நம' என்று மேற்கு முகத்திலும் முன்னர் கூறியவாறு அந்தந்த விரல்களால் தன் முகங்களில் நியாசம் செய்தல் வேண்டும்.

**அந்தரி யாகம்** (அகப்பூசை)

தம்முடைய இருதய கமலத்தை எட்டிதழ்த் தாமரை யாகக் கருதி, அதில் திவ்ய இரத்தின மயமான சிவலிங்கம் எழுந்தருளி இருப்பதாகப் பாவித்து, சிவனை அர்ச்சிப்பதற்கு உபயோகமான சகல திரவியங்களையும் மனத்தால் சேகரித்து புறப்பூசை செய்வது போல அகத்திலும் மனத்தால் சிவபூஜை செய்து,

தாமத, ராசச, சாத்விக, குணரூபமாகிய கறுப்பு, சிவப்பு, வெண்மையாகிய மண்டலத்துக்கு மேலே இருக்கிற நாபிதானத்து சிரசுக்கு எட்டங்குலமாகிய நாளத்துடனே கூடிய எட்டிதழ் வெண்தாமரையாகிய இருதய கமலத்தில் ஜோதிமயமாகிய ஞானாங்கத்திலே துவாத சாந்தத்திலும் சிவனை ஆவாகனம் பண்ணி ஷமையாகிய பாத்திய ஆசமனார்க்கியத்தினாலும் விந்துதானத்தின் அமுதமாகிய திருமஞ்சனத்தினாலும் வைராக்கியமாகிய சந்தனத்தினாலும் சித்த சைதனியமாகிய ஆபரணத்தினாலும் அதோஷங்க ளாகிய புஷ்பங்களாலும் ஆவிக்கை, பிர்மச்சார்யம், பொறுமை, தயை, ஞானம், தவசு, சத்தியம், குருசேவை இந்த எட்டு புஷ்பத்தினாலும் மனதாகிய பாத்திரத்தில் பிராணவாயுவினாலே புதைக்கப்பட்ட ஆங்காரமாகிய தூபத்தினாலே அபிமானமாகிய தீபத்தினாலும் ஞானாமிர்தமாகிய நைவேத்தியத்தினாலும் சுழுமுனா நாடியாகிய மந்திர ஜெபதோத்திரத்தினாலும் பூசிக்கவும்.

அன்றியிலே சதாசிவத்தியானத் திருமேனிகளை மேற் சொல்லப்படும் பிரகாரத்தினாலே புஷ்பம் முதலிய சர்வத் திரவியங்களையும் மனசிலே உண்டாக்கிக்கொண்டு உள்ளே

இருதய கமலத்தில் சர்வ உபசாரத்துடனே பூசிப்பான் நாபி குண்டத்திலே தானே உண்டாக்கிய அக்கினியிலே இருதய கமலத்திலே நின்று கோடி சூரியபிரகாசமாய் சுழுமுனா நாடி வழியாக மேல்நோக்கி துவாத சாந்த பரியந்தமும் சென்று விளங்கி நிற்கிற ஞானாக்கினியைக் கொண்டுவந்து வைக்கவே கர்மங்களும் அருகுமாம். ஆதலாலே ஞானாக்கினியை வைத்து அத்திரமந்திரத்தினாலே ஜொலிப்பித்து விந்து தானத்தில் அமுதமாகிற நெய்யினாலே ஹோமம் பண்ணி நாமகர்ணம் பண்ணி பருதியிலே பிர்மா விஷ்ணு உத்திரன் அனந்தன் இவர்களை பூசித்து சிவாக்னி இருதயத்திலே சிவனைப்பூஜித்து நைவேத்திய சமயத்திலே மூல மந்திரத்தாலே ஹோமம் பண்ணி அருக்கு கருவத்தை அமுதமாகிற ஆஸ்யத்தினாலே (நெய்) நிறைத்து அதனாலே பூர்ணாகுதி பண்ணிப் பூசையை முடித்து இருதய கமலத்திலே எழுந்தருளி இருக்கிற சிவனிடத்திலே அக்கினியிற் சிவனை யோஜிப்பித்து (ஒடுக்கி) பூராதியான மந்திரங்களாலே ஹோமம் பண்ணி அக்கினியையும் பிர்மாதிகளையும் நிரோதித்து இருதய கமலத்திலே சிவனை அர்ச்சித்து பாராமுக அருக்கியம் கொடுத்துப் பூசையை முடித்துப் பின்பு விந்துதானத்திலே எங்குமாக விளங்கி நிற்கிற நட்சத்திரசாரம் போன்ற ஈஸ்வரனைத் தியானம் பண்ணி புரம்பேயும் எழுந்தருளி என்பால் பூசைகொண்டருள வேண்டுமென்று பிரார்த்தித்து அனுமதி பண்ணிக்கொண்டு அந்தரியாக பூசையை முடிக்கவும்.

### பூஜாஸ்தான சுத்தி

இனி புறப்பூசை கூறப்படுகின்றது. பூஜா ஸ்தானத்தில் மூலமந்திரத்தால் நிரீக்ஷணமும் அஸ்திரத்தால் தாளத்திரயமும் திக்குப்பந்தனமும் பண்ணி அவ்விடமுள்ள

விக்கினங்களைப் போக்கி அக்கினி நிறமான மூன்று கோட்டைகள் (மதில்) உண்டானதாகவும் கவசத்தினாலே அவகுண்டனம் பண்ணி மூன்று அகழ்கள் உண்டானதாகப் பாவித்து 'ஓம் ஹம் ஹரம் சக்தியே வௌஷட்' என்று மூன்று அகழ்கள் உண்டான தாகவும் பாவித்து 'ஓம் ஹாம் ஹெம் சக்தியே வௌஷட்' என்று தேனு முத்திரை கொடுத்து சத்தியாகிறவளை மேலும் கீழும் உண்டானதாகப் பாவிக்கவும். இது தானசுத்தி.

**சங்கப்பூசை**

சங்கத்தில் 'ஓம் நம' என்று ஏழுமுறை அருச்சித்து சங்கமுத்திரையில் மூடி 'ஓம் நம' என்று ஏழு முறை அபிமந்திரித்து தேனு முத்திரையும் சங்க முத்திரையும் காட்டுக இது சிவபெருமானுக்கு மேன்மையான அபிஷேக தீர்த்தமாகும். பஞ்சகவ்யம், பஞ்சாமிருதம், பழபஞ்சாமிருதம் முதலிய அபிஷேகத் திரவியங்களை விதிப்படி கூட்டிக்கொள்ளவும்.

**திரவிய சுத்தி**

சுவர்ணாதிகளால் செய்யப்பட்ட பாத்திரங்களை அத்திர மந்திரத்தினாலே கழுவி சுத்த ஜலத்தினாலே விந்துத்தானத்தில் அமிர்ததாரை மயமாக வௌஷட் அந்தமான இருதயத்தினாலே பூசித்து வெண்கடுகு, சந்தனம், அருகு, விலாமிச்சை நாலும்போட்டு ஷடங்கள் கொண்டு அருச்சித்து, அபிமந்திரித்து, திக்குபந்தனம், அவகுண்டனம், தேனுமுத்திரையும் கொடுக்கவும். இது பாத்தயமாகும்.

இனி ஆசமன பாத்திரத்தை முன்பு போல பூசித்து குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம், கிராம்பு, சாதிக்காய், வாலரிசி,

ஏலம் ஆறும் போட்டு பதினொரு மந்திரத்தால் பூசித்து அபிமந்திரித்து திக்குப்பந்தனாதி பண்ணவும்.

பின்பு விசேட அருக்கியத்தை முன்பு போலப் பூசித்து பால், தருப்பை, எள்ளு, அரிசி, நெல், வாலரிசி, அருகு, வெண்கடுகு இவை எட்டும் போட்டு சிவாசனம் சிவமூர்த்தி மந்திரத்தாலும் ஈசான மூர்த்தாய நம, தத்புருஷவக்தராய நம, அகோர ஹிருதயாய நம, வாமதேவ குஹ்யாய நம, சத்யோஜாதாய நம, ஓம் ஹாம் வித்யாதே ஹாய நம, ஓம் ஹாம் சிவாய நம, ஓம் இருதயாய நம, ஓம் சிரசாய நம, சிகாய நம, கவசாய நம, அஸ்திராய நம, ஓம் சிவாய நம, என்று மீளவும் மூல மந்திரத்தால் அருச்சித்து அபிமந்திரித்து திக்குபந்தனாதி பண்ணி இந்த அருக்கிய பாத்திரத்து கலசத்தினாலே தன்னை அத்திரத்தால் புரோட்சித்துக் கொண்டு புட்பம் முதலாகிய பூசோபகரணத்திரவியம் எல்லாவற்றையும் அத்திரத்தால் புரோட்சித்து கவசத்தால் அப்பியுக்ஷணம் பண்ணி திருவொற்றாடையை பின்பு திருமேனிமேல் மந்திரத்தாலும், சத்தியோஜாத மந்திரத்தாலும் திருப்பரி வட்டத்தை வாமத்தினாலும் திருவாபரணத்தை அகோரத்தாலும் நெய்யை சிகையினாலும் தேனை கவசத்தினாலும் புஷ்பத்தை ஈசானத்தாலும், சந்தனக் குழம்பை அத்திரத்தினாலும் மற்றுமுள்ள திரவியத்தை எல்லாம் காயத்திரியினாலும் அபிமந்திரித்துக் கவசத்தினாலும் அவகுண்டனம் பண்ணி இருதயத்தினாலே தேனுமுத்திரை கொடுத்துப் பின்பு குடத்துத் திருமஞ்சனத்திற்குள்ளே விசேடாருக்கிய ஜலத்திலே ஒரு புஷ்பத்தைத் தோய்த்துக் குடத்துத் திருமஞ்சனத்திற்குள்ளே போட்டு அந்தக் குடத்தைக் கவசத்தாலே அவகுண்டனம் பண்ணி அமிர்திக்ஷணம் பண்ணி பின்பு பஞ்சகவ்வியமும் விதப்படி தாபித்து அப்படியே பஞ்சாமிர்தமும் கற்பித்து ஓம்

ஹாம் திபன கலசமும் தாபித்து வைத்துக்கொள்ளவேண்டும். இது திரவிய சுத்தி.

**ஆத்ம சுத்தி**

ஓம் ஹாம் சிவசானாய நம என்று தன் ஆசனத்தின் கீழ் அருச்சித்து ஆசனங்கற்பித்து ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம என்று மார்பில் மூர்த்தியைப் பூசித்து ஓம் ஹாம் நேத்ரோப்பியோ நம என்று சுழுமுனா ஸ்தானத்தில் நெற்றியில் சந்தனத்தால் விருத்தாகாரமாய் பித்துமாத்திரமாய்த் திலகமிட்டு 'சிவாய நம' என்று புஷ்பத்தை சிரசில் அருச்சிக்கவும். (இவ்வாறு பூசித்துத் தன்னை (ஆத்மாவை) சிவமயமானதாகப் பாவிக்கவும்) இஃது ஆத்ம சுத்தி.

**மந்திர சுத்தி**

பூசைக்கு உபயோகமில்லாத விஷயங்களில் மெளன மடைந்து இருதயத்தினாலே அஞ்சலி பண்ணிக்கொண்டு மூல மந்திரத்தை பீஜத்துடன் புலுதமாகத் துவாதசாந்தமளவும் பஞ்சப்பிரம மந்திரங்களை பீஜத்துடன் பிரமந்திரமளவாகவும் ஷடங்க மந்திரங்களை பீஜத்துடன் விந்து ஸ்தானமளவாகவும் ஹீர்ஸ்வரமாகவும் மானசமாக உச்சரித்து மந்திர சுத்தி செய்யவும்.

**ஷடுத்தாசனம்**

ஸ்நான வேதிகையில் பரிவட்டம் விரித்து அல்லது பாத்திரம் வைத்து அதன்மேல் விசேஷ அருக்கிய ஜலத்தால் புரோஷித்து 'அநந்தாசனாய நம' என்று மத்தியிலும் 'தன்மாய நம' என அக்கினி திக்கிலும் 'ஓம் ஞானாய நம' என

நிருதியிலும் 'வைராக்ய நம' என வாயுவிலும் 'ஐஸ்வர்யாய நம' என ஈசானத்திலும், 'பதுமாய நம' என நடுவிலும் ஓம் ஹாம் என்ற பீஜத்துடன் அருச்சிக்கவும்.

### இலிங்க சுத்தி

சுவாமி எழுந்தருளி இருக்கும் பெட்டகக் கோயிலாகிய கருப்பக்கிருகத்தைக் காவல் புரிந்திருக்கும் வீமருத்திரரை 'ஓம் ஹாம் வீமருத்திராய நம' என்று அருசித்து. அவரைத் துவாரத்தின் வலது பாரிசத்தில் போயிருக்கத் தக்கதாகப் பிரார்த்தித்து, சுவாமி எழுந்தருளி இருக்கும் பெட்டகக் கோவிலினைத் திறந்து ஏ சர்வலோக சாண்யாய கைலாசபதே (அவரவர்கள் பூஜிக்கும் சுவாமியின் நாமகரணத்தைக் கூறி) உமக்கு நமஸ்காரம். ஸ்நானம் செய்வதற்கும் என்னை ரட்சிப்பதற்கும் எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்து, சிவலிங்கத்தை இரு கைகளாலும் சிறிது நிர்மால்யத்துடன் எடுத்து ஸ்நானவேதிகையில் எழுந்தருளப்பண்ணி 'தன் மகேசாய வித்மஹே வாக்விசுத்தாய தீமஹி தன்னோசிவப்பிரசோதயாத்' என்னும் சிவ காயத்திரியால் அருச்சித்து (ஆசனம் மூர்த்தி மூலத்தாலும் அருச்சிக்கலாம். சத்தியோசாத முதல் ஈசான முகமுள்ள முகங்களில் மூலத்தால் சுலாகரந்தமாக சாமானிய அருக்கியமும் தூபதீபமும் கொடுத்து (நிர்மால்யம் கழித்தல்) வலதுகை, கனிஷ்டை, அணிவிரல்களின் மத்தியில் ஒரு புஷ்பமிருக்க முன் செய்திருக்கும் பூசையின் மேல் பிடித்து பஞ்சப்பிரம மந்திரங்களைச் சத்தியோசாத முதல் ஜெபித்து அங்குஷ்டம் தர்ச்சனி விரல்களால் அஸ்த்ராய பட் என்று சாத்தி, நிர்மாலியத்தைக் கழித்து இடுக்கிய புஷ்பத்தை உடன் திருமுடியில் 'இருதயாய நம' என்று சாத்தி, நிர்மாலியத்தை சண்டாத்தமாக (சண்டிகேசுவரருக்காக) ஈசானியத்தில் 'இருதயாய நம' என்று வைத்து கரசுத்தி செய்யவும்.

அஸ்திராய சுவாகா என்று லிங்கத்திலும் 'ஓம் க்லீம் பாசுபத சாஸ்திராய உம்பட் சுவாகா' என்று பீடத்திலும் திருமஞ்சன தீர்த்தத்தாலும் 'இருதயாய சுவாகா' என்று சாமானிய அருக்கியத்தால் லிங்கத்திலும் அபிஷேகம் செய்து 'கவசாய வெளஷட்' என்று குச்சுப்புல் சாத்தி முன்பு சாத்திய சந்தனக்காப்பு முதலியவைகளைப் போக்கி 'ஆதருயாய சுவாகா' என்று திருமஞ்சனத்தால் அபிஷேகித்து அஷ்டபுஷ்பம் சாத்தவும்.

'ஓம் சிவாசனாய நம' 'சிவமூர்த்தியே நம' 'சிவாய நம' 'இருதயாய நம' 'சிரசே நம' 'சிகாய நம' 'கவசாய நம' 'அஸ்திராய நம' என்று அஷ்ட புஷ்ப மந்திரங்களால் அருச்சித்து சாமானிய அருக்கிய தூபம் கொடுக்கவும்.

**அபிஷேகம்** (திருமுழுக்கு)

அபிஷேக கலசத்தை இடது கரத்தில் வைத்து அதன் வாயில் வலது கையை சங்கமுத்திரையால் மூடி லிங்கத்தின் சிரசிலிருந்து இரண்டங்குல உயரத்தினின்றும் பசுவின் நுனிக்கொம்பின் அளவு சிறுக விழும்படி ஒவ்வொரு திரவியத்தையும் 'ஓம் ஹாம் ஹௌம் சிவாய சுவாகா' என்று அபிஷேகம் செய்து ஒவ்வொன்றுக்குப் பின்னும் திருமஞ்சன தீர்த்தத்தாலும் அபிஷேகம் செய்யவும்.

கந்தத்தைலம் அல்லது எண்ணைக்காப்பு சத்தியோ சாதத்தால் ஈசான முதலாகப்பண்ணி அஸ்திர மந்திரத்தால் பச்சைக்கற்பூரப் பொடிகளினாலே மறதிச்சு(நிரப்பி) இருதய மந்திரத்தால் சுத்தோதகம் ஆடியருளப்பண்ணி நெல்லிக்காப்பு சத்தியோசாதத்தாலாட்டி சுத்ததேகம் சூட்டி மஞ்சட்காப்பு வாமத்தாலசட்டி இருதயத்தால் சுத்தோகம் (சுத்தமான

தண்ணீர்) ஆட்டி வெண்கடுகு உப்பு பருத்திக்கொட்டை முதலான திரவியங்களை பிடித்துக் கவசத்தால் சுற்றி அட்டபுட்பஞ்சாத்தி பஞ்சகவ்வியம் மூலத்தாலாடி யருளப்பண்ணி இருதயத்தால் சுத்தோதகம் ஆட்டிப் பின்பு பஞ்சாமிர்த அபிஷேகமும் பண்ணி பாலை ஈசானத்தாலும் தயிரை தத்புருஷத்தினாலும் நெய்யை அகோரத்தாலும் தேனை வாமதேவ மந்திரத்தாலும் கற்பூரங்கலந்த இளவெந்நீராலும் இரச பஞ்சாமிர்தம், பழ பஞ்சாமிர்தம் இவற்றை சத்தியோசாதத்தால் கருப்பஞ்சாறு அல்லது சர்க்கரை கரைத்த குழம்பு இவற்றை அபிஷேகித்து இவ்வாறு தனித்தனியே ஆடியருளப்பண்ணி சுத்த நீரால் ஆட்டி தூபதீபம் கொடுத்து அட்டபுஷ்பம் சாத்திப் பின்பு நெய் அகோரத்தாலாட்டி இளவெந்நீராட்டி வில்வநீர் மறதிச்சு கற்பூரப்பொடி நிமிர்ந்து சுத்தோதகத்தாலாட்டி தூபதீபங் கொடுத்து பாலை ஈசானத்தாலும் தயிரைத் தத்புருஷத்தாலும் தேனை வாமதேவத்தாலும் சர்க்கரை கருப்பஞ்சாறை சத்தியோசாதத்தினாலும் இடையிடையே சுத்தோதகமாட்டி தூபதீபங்கொடுத்து அஷ்டபுஷ்பம் சாத்திப் பின்பு தேங்காய்த் துருவல், வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம் தனித்தனியே இருதயத்தாலாட்டி சுத்தோதகம் இருதயத்தால் இடையிடையே ஆட்டி தூபதீபங் கொடுத்து அட்டபுஷ்பம் சாத்தி நாரத்தம்பழம், எலுமிச்சம்பழச்சாறு, தமரத்தம்பழம், கொளஞ்சிப்பழச்சாறு, கொடிமாதுளம்பழச்சாறு, மாதளம்பழச்சாறு, தேமாங்கனிச்சாறு இருதயத்தால் தானாட்டி இடையிடையே சுத்தோதகமாட்டி தூபதீங் கொடுத்து அட்டபுஷ்பஞ்சாத்தி பச்சை இளநீர் செவ்விளநீர் கௌரி இளநீர் இருதயத்தால் ஆட்டியருளப்பண்ணி சுத்தோதகமாட்டி தூபதீபங்கொடுத்து அஷ்டபுஷ்பம் சாத்தி அன்னாபிஷேகம் மேலாகிய சம்பாவரிசி வடித்து இருதயத்தாலபிஷேகம் பண்ணி தூபதீபங் கொடுத்து பத்துக்

கறியும் நெய்யும் சம்பா அன்னமுமாக நிவேதித்து வேண்டின மாத்திரம் அபிஷேகம் பண்ணி அஷ்டபுஷ்பம் சாத்தி கவசத்தால் குச்சிப்புல் சாத்தி சுத்தோதகமாட்டி அஷ்டபுஷ்பம் சாத்தி பதாகை முத்திரையினாலே மூலமந்திரத்தினால் அருச்சித்து ஆடியருளப்பண்ணி பதினோரு மந்திரமும் கலா சாந்தமுமாக ஆடியருளப்பண்ணி சகஸ்ரதாரையினாலே ரெத்தினம் தருப்பை சோகிருங்கம் கெந்தோதகம் புஷ்பதோதகம் ஆஹரணகிருதி இவற்றை பதமந்திரம் உச்சரித்து ஆடியருளப்பண்ணி சந்தனக் குழம்பு, குங்குமக்குழம்பு, மூலத்தால் அபிஷேகம் பண்ணி அஷ்ட புஷ்பம் சாத்தி தூபதீபம் கொடுத்து அலங்காரத் தளிகை நிவேதித்துத் தூபதீபம் கொடுத்து சுத்தோதகமாட்டி அஷ்டபுஷ்பம்சாத்தி விபூதி அபிஷேகித்து அபிஷேக காலங்களில் ஒருக்காலும் வெறுந் திருமுடியாயிராமல் ஒரு புஷ்பம் சாத்திப் பனிநீர் இருதயத்தால் ஆட்டி இடம்புரிச்சங்கு, வலம்புரிச்சங்கு, விசேடார்க்கியம் இவைகளை ஆட்டி ஸ்தாபிக்கப்பட்ட கலசநீரை இருதயத்தால் ஆட்டி ஆசனமூர்த்தி மூலத்தாருக்கருச்சிக்கவும். இவைகளில் இயன்ற வரையில் அபிஷேகம் வரிசைக்கிரமமாகச் செய்து கவசாய வெளஷட் என்று தோய்த்துலர்ந்த வெள்ளை வஸ்திரத்தினால் திருவொத்தாடை மெல்லெனச் சாத்தி பீதாம்பரம் கந்தம் புஷ்பம் ஆபரணம் யக்நோபவீதம் உருத்திராட்சம் முதலியவைகள் சாத்தி மூலத்தால் விபூதி சாத்தி மூலம் உச்சரித்து பூஜாஸ்தானத்தில் சிவலிங்கத்தை கோமுகை வடதிசையில் இருக்கும்படி எழுந்தருளச் செய்து மூலத்தாலருச்சிக்கவேண்டும்.

**அனுக்ஞை குருபந்தி பூஜை**

பீடத்தின் வடக்கு வரிசையில் வாயுதிக்கிலிருந்து வரிசைக்கிரமமாகவும் கீழ்த்திசையாகவும் தென்முகமாகவும்

ஒவ்வொருவருக்கும் 'ஓம் ஹாம்' என்ற பீஜத்துடன் கணபதியே நம, மகாலட்சுமியே நம, துவாரத்தின் கிழக்கே சதாசிவ குருவே நம, ஆனந்த குரவே நம, ஸ்ரீகண்ட குருவே நம, அம்பிகா குரவே நம, ஸ்கந்த குரவே நம, பிர்மகுரவே நம, விஷ்ணுகுரவே நம என்று ஒவ்வொருவரையும் தியானித்து அருச்சித்து கெந்த புஷ்ப அருக்கிய தூபதீபங்களால் பூஜித்து அஞ்சாயஸ்தனாய் மகாகணபதியால் தொடங்யிருக்கும் சிவபூஜையை விக்கினமின்றி நிறைவேற்றித்தர வேண்டுமென்று சிவனை வழிபடுவதற்குரிய திரவியங்களை மிகுதியாகச் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து, வாரீர் கணபதி மகாலெட்சுமி சத்தகுருமார்களே தேவரீர் அனைவரும் கிடைத்த திரவியங்களை வைத்துக்கொண்டு அடியேனை சிவபூஜை செய்ய அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துப் பின்வருமாறு கணேச கமலே ஸ்வாமி பாதுகே மாம் ஜெகத்குரு யஜந்த மனுஜாந்தயதா ஸம்பந்த காரகமா எனத் தோத்தரித்து அவர்கள் அனுமதி கொடுத்ததாக பாவித்து மணியை அமிர்தகுண்டலிசத்தியை நம என்று பூசித்து அஸ்திரமந்திரத்தால் ஒருமுறை மணியடித்து பூசை செய்யத் தொடங்கவேண்டும்.

**சிவாசன பூஜை**

சத்தியாதி சத்திபரியந்தம் அருச்சிக்கும்படி பின் ஸ்வாமி பீடத்தின் கீழ் மத்தியில் ஓம் ஹாம் யோக பீடாசனாய நம என்று அருச்சித்து பிருதிவிதத்துவ முதல் சங்கார தத்துவமளவும் வியாபகமாவதாகப் பாவித்து 'கூர்மாசனத்திலிருப்பவளாய், வெள்ளைநிறமுடையவளாய், சிரசிலே அங்குராகாரமுடையவராய் வரதம் அபயம் பாசம் அங்குச முடையவளாய்' தியானித்து ஆதார சத்தியே நம என்று பூசிக்கவும்.

பிரம மூலையிலே பூமியே கிழங்காகவும் பஞ்ச கலைகளும் கொம்பாகவும் பாவனையே முள்ளாகவும் ஊர்த்துவ கலை பரியந்தமாகிய நாளத்துடனே அசுத்த மாயையே பத்மமாகவும் அநேக இதழ்களுடையதாகவும் தியானித்து ஓம் ஹாம் அனந்தாசனாய நம என்று அருச்சித்து அந்த ஆசனத்திலே அனந்தன் வெள்ளை நிறமாக இருக்கிறதாகப் பாவித்து ஓம் ஹாம் அனந்தாய நம என்று பூஜித்து ஆதார சத்தி முதல் இவ்வளவும் அனந்தாசனத்தைப் பூசிக்க.

அதன்மேல் தனது ஸாமர்த்திய ரூபங்களை விசாரித்து விசித்திர ஸிம்ஹ ரூபங்களாகவும் ஒன்றுக்கொன்று பின்புறம் சேர்ந்ததாகவும் கிருதயுகம் திரேதாயுதம் துவாபரயுகம் கலியுகம் நான்கும் சிவாசனத்தை அக்கினி நிருதி வாயு ஈசான மூலைகளில் வெள்ளை சிவப்பு பொன்னிறம் கறுப்பு நிறங்களுள்ள சிம்மங்களாய் தாங்குகிறதாகப் பாவித்து ஓம் ஹாம் தர்மாய நம, ஓம் ஹாம் ஞானாய நம, ஓம் ஹாம் வைராக்கியாய நம, ஓம் ஹாம் ஐஸ்வர்யாய நம என்று அருச்சிக்கவும்.

கிழக்கு சிம்மம் - வெண் கறுப்பு

தெற்கு சிம்மம் - வெண்சிகப்பு

மேற்கு சிம்மம் - சிவப்புக்கலந்த பொன்னிறம்

வடக்கு சிம்மம் - பொன்னிறங்கலந்த கறுப்பு

அனந்தேசுரருக்கு ஒத்த பலவான்களாகவும் தியானிக்கவும்.

இல்லாவிடில் படிக நிறமும் மூன்று கண்களுமுள்ள சிம்மங்கள் அசைவற்ற கைகள் கிரக கழுத்து இவைகளால் ஆசனத்தைத் தாங்கிக்கொண்டு தேகம் நரரூபமதாய்த்

தியானித்து புத்திகுணக தர்ம முதலியவற்றை ஓம் அதர்மாயை நம அஞ்ஞானாய நம ஓம் ஹாம் அவைராக்கியாய நம அனைகலரியாய நம என்று பூசிக்கவும். இராகதத்துவம் தொடங்கி காலதத்துவமளவும் வியாபிதமான இவர்களை நாலு திக்கிலும் பூசித்து பின்பு மேகலையிலே அசுத்தமாயா சொரூபமாய சிவப்பு நிறமாக இருக்கிற அதச்சதனத்தை நிருதிக் கோணத்திலே 'ஓம் ஹாம் அதச்சதனாய நம' என்று அருச்சித்து மேலபீடத்தில் சுத்தமாயா சொரூபமாயிருக்கின்ற ஊர்த்துவசதனத்தை சுத்தவித்தையின் கீழ் ஈசானத்தில் ஓம் ஹாம் ஊர்த்துவச்சதனாய நம என்று பூஜிக்கவும்.

அதன் நடுவே மாணிக்க நிறமான கிழங்கும் நீல வர்ணமான காம்பும் பவளம் போன்ற முளையும் வெள்ளி போன்ற சிலையும் பொன் போன்ற இதழ்களும் நுனிகளிலே முத்துவரிசைகள் போலிருப்பதாய்த் தியானித்து ஓம் ஹாம் கந்தாய நம, ஓம் ஹாம் பீஜாய நம, ஓம் ஹாம் அங்குராய நம ஓம் ஹாம் நாளாய நம என்று பூசித்து, இதற்குமேல் வட்டத்தினடியில் எட்டுத்தளமும் வித்தியேசுர சொரூபமாக பாவித்து அருச்சித்து அதன் பீடத்தில் ஓம் ஹாம் கேசரப்பியோ நம என்று வழிபடுக.

நடுவில் உருக்கின பொன்னிறமாய் ஐம்பத்தோரு அட்சரங்களும் அந்தப் பத்மத்தின் கருணிகையில் விரைகளாகவும் அறுபத்துநான்கு கலா சாஸ்திரங்களும் சுற்றிலும் தொங்குகின்ற குச்சுக்களாகவும் பாவித்து ஓம் ஹாம் கர்ணிகாய நம, ஓம் ஹாம் பீஜேப்பியோ நம என்று பத்மரூபத்தைப் பாவித்து ஓம் ஹாம் பத்மாய நம என்று அருச்சிக்கவும். இல்லாவிடில் சகல ரூபத்தையும் பத்மத்தின் கருணிகையில் அருச்சிக்கவும்.

கிழக்கு முதலான எட்டு இதழ்களிலும் அஷ்ட வித்தியேஸ்வரர்களுடைய சத்திகள் ரூபமாய் சிவசத்திகளே வாமாதி அஷ்டசத்திகளாயும் இலிங்கத்தின் அடியிலே கருணிகையில் சிவசத்தியே மனோன்மணியாகவும் சூரிய காந்தியாய் மூன்று கண்களும் நான்கு திருத்தோள்களும் ஜடை ரூபமான கிரீடமும் மூன்றாம்பிறைச் சந்திரனும் உடையவர்களாய் சர்வாபரண பூஷிதர்களாய் ஒரு கையில் சாமரம். ஒரு கையில் வரதம், ஒரு கையில் அபயம், ஒருகை சிம்மாசனத்தில் தாங்குகின்ற பத்மம் போன்ற கையை உடையவர்களாய் கர்ணிகையில் பால் நிறமான மனோன்மணியையும் தியானிக்கவும்.

'ஓம் ஹாம் வாமாயை நம, ஓம் ஹாம் ஜ்யேஷ்டாய நம, ஓம் ஹாம் ரௌத்திரியே நம, ஓம் ஹாம் காளியை நம, ஓம் ஹாம் கலவிகரண்யை நம, ஓம் ஹாம் பலவிகரண்யை நம, ஓம் ஹாம் பலப்பிரதின்யை நம, ஓம் ஹாம் ஸர்வபூத தன்மையை நம, ஓம் ஹாம் மனோன்மணியை நம' என்று அருச்சிக்கவும்.

தாமரை இலையில் ஓம் ஹாம் ஸௌர்ய மண்டலாய நம என்று அருச்சித்து ஸௌர்ய மண்டலம் பொன்னிறமாய் கலந்த வெண்ணிறமாகவும் அந்த மண்டலாதிபதியான பிர்மா நான்கு முகமும் பொன்னிறமாகவும் நான்கு கைகளிலும் சுருக்கு, தண்டம், ஜபமாலை, தருப்பையுமுடையவராய் ஸௌர்ய மண்டலத்திலிருக்கிறவராகத் தியானிக்கவும்.

ஓம் ஹாம் ஸௌர்ய மண்டலாதிபதியே ப்ரஹ்மணே நம என்று அருச்சித்து சோமமண்டலம் வெள்ளை நிறம் அந்த சந்திரமண்டலாதிபதியான விஷ்ணு நான்கு புஜங்களும்

வனமாலையும் சங்கு சக்கரம் கதை பத்மம் இவைகளை நான்கு கையிலும் உடையவராய் நீலமேகம் போன்றவராய் சோமமண்டலத்திலிருக்கிறவராகத் தியானிக்கவும். இப்படித் தியானித்து ஓம் ஹாம் சோமமண்டலாதிபதியே விஷ்ணுவே நம என்று அருச்சிக்கவும்.

கருணிகையின் நுனியில் ஓம் ஹாம் அக்கினி மண்டலாய நம என்று அக்கினி மண்டலம் சிவப்பு வர்ணமாகவும் அந்த மண்டலாதிபதியான உருத்திரன் வெள்ளை நிறமும் நீலகண்டமும் மூன்று கண்களும் வியர்க்கி திரன முத்திரையும் அக்கினியும் ஞானமுத்திரையும் சூலமும் நான்கு கைகளிலும் உடையவராய் ஸர்வாலங்காரங்களும் உடையவராய் ஸர்ப்பராஜனைப் பூணூலாகவும் மூன்றாம்பிறைச் சந்திரனைச் சிரசிலே உடையவராகவும் தியானித்து 'ஓம் ஹாம் அக்கினி மண்டலாதிபதியே உருத்திராய நம' என்று அருச்சிக்கவும்.

கருணிகையின் நடுவே பால் சமுத்திரம்போல் வெள்ளை நிறமும் குடிலாத்மிகமுமான சத்திமண்டலத்தைத் தியானித்து சத்தி மண்டலத்தில் 'ஓம் ஹாம் சத்திமண்டலாய நம' என்று அருச்சித்து சத்திமண்டலத்திலிருக்கின்ற ஈஸ்வரனை வெள்ளை நிறமாகவும் ஸர்ப்பத்தை பூணூலாக உடையவராகவும் அர்த்த சந்திரனைச் சிரசிலே உடையவராகவும் மூன்று கண்களையுடையவராகவும் கத்தி, சூலம், பாணம், ஜெபமாலை, அபயம், வரதம், கமண்டலம், பத்மம், ஸம்ஹ சர்மம், கஜ சர்மம் இவைகளை வல இடக்கிரமமாய்க் கைகளில் உடையவராகவும் தியானித்து ஓம் ஹாம் சத்தி மண்டலாதிபதியே ஈஸ்வராய நம என்று அருச்சிக்கவும்.

அதன்மேல் பூமி முதல் குடிலை வரை வியாபித்திருக்கின்ற ஆசனத்தை இவ்வாறு பாவித்து 'ஓம் ஹாம் சிவாசனாய நம' என்று பீடத்தின்மேல் அருச்சித்து பீடலிங்கத்தில் 'ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம' என்று அருச்சிக்கவும்.

இவ்வாறு சிவபெருமான் எழுந்தருளியிருப்பதற்கு நாற்பது மந்திரகணங்களையும் பூசித்தல் வேண்டும். இவ்வளவும் விமலாசனம். இவ்வாறு தனித்தனியே பூஜிப்பதற்கு இயலாதவர்கள் சாங்கோபாங்கமாக சிவாசனத்தையும் பாவனைசெய்து 'ஓம் ஹாம் சிவாசனாய நம' என்று பூஜை செய்யவேண்டும்.

**சிவமூர்த்தி நிவேசனம்**

அதன்மேல் பூமி முதல் குடிலை வரை வியாபித்திருக்கின்ற ஆசனத்தை இவ்வாறு பாவித்து 'ஓம் ஹாம் சிவாசனாய நம' என்று பீடத்தின்மேல் அருச்சித்து அதன்மேல் சிவமூர்த்தியை தேஜோ சொரூபமாய் தண்டாகாரமாய் பிரியாமலிருக்க அவயவங்களுடையவராய் சிவதத்துவ ஸ்வரூபமாகப் பரந்து வியாபகமாய் பாவித்து லிங்க விளிம்பில் அருச்சிக்கவும்.

**தண்டபங்கி நியாசம்** (சர்வ அங்கங்களையும் தொடுதல்)

மேலே கண்ட தண்டகார தேஜோமய இலிங்க மூர்த்தியில் 1. முஷ்டியுடன் கூடின கட்டைவிரல் நுனியால் 'ஈசான மூர்த்தாய நம' என்று சிரசிலும், 2. கட்டை விரல் சம்பந்தித்த சுட்டுவிரல் நுனியால் 'தத்புருஷ வக்தராய நம' என்று முகத்திலும் நெற்றியிலும், 3. கட்டை விரல்

சம்பந்தித்த நடுவிரல் நுனியால் 'அகோதர ஹிருதயாய நம' என்று மார்பிலும் 4. கட்டைவிரல் சம்பந்தித்த அணிவிரல் நுனியால் 'வாமதேவ குஹ்யாய நம' என்று குஹ்யத்திலும் (கொப்புழி) 5. கட்டைவிரல் சம்பந்தித்த சிறுவிரல் நுனியால் 'சத்தியோசாத மூர்த்தயே நம' என்று பாதங்களிலும் அதனதன் பீஜத்துடன் உச்சரித்து நியாசங்கள் செய்யவும்.

**முண்டபங்கி நியாசம்**

ஈசாநாய ஊர்த்துவ வக்த்ாய நம, தத்புருஷபூர்வவக்தராய நம, அகோராய தக்ஷிண வக்தராய நம, வாமதேவாய உத்திர வக்தராய நம, சத்தியோசாதாய பச்சிம வக்தராய நம என்று ஊர்த்துவம் கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்னும் ஸ்தானங்களிலுள்ள முகங்களில் தண்டபங்கியில் கூறியவாறு அந்தந்த விரல்களால் நியாசம் செய்யவும்.

**வத்ரபங்கி நியாசம்**

முன்புபோல் ஊர்த்துவம் முதலிய ஐந்து முகங்களிலும் முறையே ஓம் ஹோம் ஈசான வக்தராய நம என்று பெருவிரலாலும், ஓம் ஹோம் தத்புருஷ வக்தராய நம என்று சுட்டுவிரலாலும், ஓம் ஹோம் அகோர வக்தராய நம என்று நடுவிரலாலும், ஓம் ஹாம் வாமதேவ வக்தராய நம என்று மோதிர விரலாலும், ஓம் ஹம் சத்தியோஜாத வக்தராய நம என்று சுண்டுவிரலாலும் நியாசம் செய்க.

**கலாபங்கி நியாசம்**

ஊர்த்துவம் முதலிய ஐந்து முகங்களிலும் முறையே 'ஓம் ஹம் சாந்தியாதீத கலாய நம' என்று சுண்டுவிரலாலும்

'ஓம் ஹைம் சாந்திகலாய நம' என்று மோதிர விரலாலும் 'ஓம் ஹ்ரும் வித்யாகலாய நம' என்று நடுவிரலாலும் 'ஓம் ஹ்ரீம் பிரதிஷ்டாகலாய நம' என்று சுட்டுவிரலாலும் 'ஓம் ஹ்லாம் நிவர்த்திகலாய நம' என்று பெருவிரலாலும் நியாசம் செய்தல் வேண்டும். இவ்வாறே அட்சர நியாசம் ஸ்ரீகண்ட நியாசம் மற்ற நியாசங்களையும் சௌகரியமானால் முப்பத்தெட்டுக் கலைகளையும் அந்தத்தானங்களில் நியாசம் செய்யவும்.

ஈசானம்-சிரசு, தத்புருஷம்-முகம், அகோரம் - ஹிருதயம், வாமதேவம்-குஹ்யம், சத்யோசாதம்-சர்வாங்கம் கலாபேதத்துடன் கற்பிக்கவும். அஃதாவது-

| | |
|---|---|
| சசின்யை நம | - ஊர்த்துவ சிரசு |
| அங்கதாயை நம | - கிழக்கு சிரசு |
| இஷ்டாயை நம | - தெற்குச் சிரசு |
| மரிசயே நம | - வடக்குச் சிரசு |
| ஸ்வாவின்மை நம | - மேற்குச் சிரசு |
| சாந்தியாதிதாய நம | - ஊர்த்துவமுகம் |
| சாந்தயே நம | - கிழக்கு முகம் |
| வித்யாயை நம | - தெற்கு முகம் |
| பிரதிஷ்டாயை நம | - வடக்கு முகம் |
| நிவர்த்தயே நம | - மேற்கு முகம் |
| தமஜே நம | - ஹ்ருதயம் |
| மோஹாயை நம | - கழுத்து |
| க்ஷயாயை நம | - வலதுதோள் |
| நிஷ்டாயை நம | - இடதுதோள் |
| ம்ருதயவே நம | - தொப்புள் |
| மாயாயை நம | - வயிறு |
| பயாயை நம | - முதுகு |
| ஜராயை நம | - மார்பு |

| | |
|---|---|
| ரஜயேநம | - குய்யம் |
| ரக்ஷாய நம | - சின்னம் |
| ரத்யை நம | - வலது தொடை |
| பால்யை நம | - இடது தொடை |
| காம்யாயை நம | - வலது முழங்கால் |
| ஸமயமன்யை நம | - இடது முழங்கால் |
| கிரியாயை நம | - வலது கணுக்கால் |
| புத்யாயை நம | - இடது கணுக்கால் |
| கார்யாயை நம | - வலது குதம் |
| தாத்ரியை நம | - இடது குதம் |
| ப்ராம்மன்யை நம | - இடுப்பு |
| மோஹின்யை நம | - வலது பக்கம் |
| பவாயை நம | - இடது பக்கம் |
| ஸித்யாயை நம | - வலது பாதம் |
| விருத்தியை நம | - இடது பாதம் |
| த்வித்யை நம | - வலது உள்ளங்கை |
| லக்ஷ்ம்யை | - இடது உள்ளங்கை |
| மேதாயை நம | - மூக்கு |
| காந்த்யை நம | - சிரசு |
| ஸ்வதாயை | - வலதுகை |
| திருத்யை நம | - இடது கை |

இப்படி முப்பத்தெட்டு ஸ்தானங்களை ஸ்வத்திக ஸ்வரூபமாக நியாசம் செய்யலாம்.

**வித்தியா தேகம்**

இந்த ஸகலரூப நியாசங்களாலே கைகால்கள் நிஷ்காலிங்கத்திற்கு உண்டானதாகவும் ஆதாரசத்தி முதல் குடிலைசத்தி பரியந்தம் மந்திரத்தினாலே உண்டான

சிம்மாசனத்தில் இருப்பவராகவும் படிக நிறமாகவும் முப்பத்திரண்டு லட்சணங்களும் அமைந்துள்ளவராகவும் பாவிக்கவும்.

இப்படிச் சிவனைத் தியானித்து பத்மாசனமும் ஐந்து முகங்களும் முகங்கள் தோறும் இச்சா ஞானக்கிரியை களாகவும் சோம சூரியாக்னிகளாகவும் உள்ள விசாலம் பொருந்திய மூன்று கண்களும் ஈசான முகமும் வெள்ளை நிறம் தத்புருஷ முகம் பொன்னிறம் ஸத்யோஜாதமுகம் மிகவும் வெண்மை நிறமாகவும் ஸர்ப்பத்தை பூணூலாகவும் உபசாந்தமான குணமுடையவராகவும் சடாமகுடமும் அர்த்தசந்திரனும் திருமேனியெல்லாம் பால் நிறமும் பதினாறு வயசுமுடையதாய் சர்வாபரணராய் சத்தி சுத்தி சூலம் கட்டுவாங்கம் பத்மம் வலது கைகளிலும் டமருகம் பீஜபூரகம் நாகம் ஜெபமாலை நீலோத்பலம் இவைகளை இடது கைகளில் உடையவராகவும்.

### நேத்திர நியாசம்

வித்தியாதேகத்தைத் தியானித்து ஓம் ஹௌம் நேத்திரப்யோ நம என்று ஐந்து முகங்களிலும் நடு மூன்று விரலாலும் நேத்திரம் கொடுக்கவும்.

### சிவ ஆவாகனம்

சரீரத்தைச் செவ்வையாக நிறுத்தி பஞ்சேந்திரியங்களின் வியாப்பகத்தைத் தடுத்து கைகளில் புஷ்பங்களை நிறைத்து அஞ்சலி செய்து தன்னுடைய மூலாதாரத்தில் வைத்து அதில் பற்றிய மனமுடையனாய் இடநாடியில் வாயுவைப் பூரித்து சோடசகலையுடன் கூடிய மூல மந்திரத்தை துவாதசாந்தமளவாக உச்சரித்து தன்னுடைய சரீரத்திலுள்ள மூலாதாரத்திலிருக்கும் மந்திரமயமான பரமசிவனுடைய

தேஜசை ஆகர்ஷணம் செய்து கிரமமாக உயரக்கொணர்ந்து , இருதயஸ்தானத்தில் சற்று நின்று மூல மந்திரத்தில் அகாரத்தைவிட்டு அதனால் பிரமத்தியானம் செய்து மேல் கண்டஸ்தானத்தில் நின்று உகாரத்தைவிட்டு விஷ்ணுத்தியானம் செய்து மேல் தாலு ஸ்தானத்தில் நின்று மகாரத்தைவிட்டு உருத்திரத் தியானம் செய்து, மேல்புருவ நடுவில் விந்துஸ்தானத்தில் நின்று விந்துவைவிட்டு ஈஸ்வரத்தியானம் செய்து மேல்பிரமரந்திரத்தில் நின்று நாதத்தைவிட்டு சதாசிவத்தியானம் செய்து மேல் சப்த ஸ்தானமாகிய துவாதசாந்தத்தில் நின்று உன்மனியந்தத்தில் அநேக கோடி சூரியப்பிரகாசமாய் விளங்கும் பரமசிவனிடத்தில் மூலாதாரத்தில் இருந்து கொண்டுவந்த மந்திரப்பூர்வமான சோதியைச் சேர்த்து ஆன்மாவும் சோதி ரூபமாகிய சிவமும் இரண்டறக்கலந்து கோடி சூரியப்பிரகாசமாக விளங்கியதாகச் சிந்தித்து இடைவிடாது அமிர்தத்தை பெருக்கும் விந்து ரூபமான ஜோதியை (புஷ்பாஞ்சலியுடன்) கீழே கொணர்ந்து புருவ மத்தியிலிருக்கும் விந்துஸ்தானத்தில் சற்று நேரம் நின்று சகல வடிவம் கொண்டு ஆயிரம் சரத்காலச்சந்திரன் போலப் பிரகாசிக்கிறதாகப் பாவித்து பின்பு புஷ்பாஞ்சலியை இருதய ஸ்தானத்தில் இறக்கி முன் இடநாடியில் வாயுவைப் பூரித்து கும்பித்ததை (உள்ளே நிறுத்தியதை) பிங்கலநாடியால் வாயுவை ரேசகம் செய்து (வெளியேவிட்டு) வாயுவுடன் பரமசிவனுடைய ஜோதியை புஷ்பாஞ்சலியின் நடுவே அடைந்ததாகப் பாவனை செய்தவாரே பின்பு மேல்பக்கமுள்ள சத்தியோசாத முகத்தின் சிரசில் ஆவாகன முத்திரையால் சற்றுப் பரிசித்து சத்தியோசாத மூர்த்தியே நம என்று ஆவாசித்து ( அதாவது அஞ்சலியாகப் பிடித்த

புஷ்பத்தை இருகைகளாலும் விரித்துச் சாத்துவது) வாமதேவகுஹ்யாய நம என்று ஸ்தாபன முத்திரையால் வடபக்கமுள்ள வாமதேவ முகத்தின் சிரசில் ஸ்தாபனமும், அஹோர ஹிருதயாய நம என்று சன்னிதான முத்திரையால் தென்பக்கமுள்ள அகோரமுகத்தின் சிரசில் சன்னிதானமும் தத்புருஷ வக்தராய நம என்று கீழ்பக்கமுள்ள தத்புருஷ முகத்தில் சிரசில் சன்னிரோதன முத்திரையால் சன்னிரோதனமும் செய்து,

" ஸ்வாக தந்தே மகாதேவேதி விஞ்ஞாப்பிய
வத்ஸ ஸ்வாந்தமிதி தேவே நோக்தம் விபாவ்ய "

" ஸ்வாமித் ஸர்வ ஜகந்நாத யாவத் பூஜாவ ஸாநகம்
தாவத் ஸப்பிரிதிபாவேத லிங்கேஸ்மித் சந்நிதிபவா "

மகாதேவா ! சுகமாக எழுந்தருளி இருக்கிறீரா என விஞ்ஞாபித்து குழந்தாய் நீ விருத்தியடையக்கடவாய், நாம் சுகமாக எழுந்தருளியிருக்கிறோமென உத்திரமளித்ததாகப் பாவித்தல் வேண்டும். ஸ்வாமி பூஜை முடியும் வரையில் தேவரீர் கருணையுடன் பிரீதியாக இந்த இலிங்கத்தின் சாந்நித்தியமாக இருந்து என்னால் செய்யப்படும் பூஜையை அங்கீகரிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்து அவ்வாறே அனுமதித்த தாகவும் சிந்துத்து ஈசான மூர்த்தாய ஸ்வாகா என்று ஈசான முடிக்கு சுவாகத அருக்கியம் கொடுக்கவும். காளகர்ணிக இலிங்க நமஸ்கார முத்திரை கொடுக்கவும்

(இருதய மந்திரத்தால் இலிங்கத்தின் பிரமரந்திரத்தில் ஆவாகன முதலியவை செய்யலாமென்று சில ஆகமங்கள் கூறுகின்றன.)

**சிவ அங்க நியாசம்**

ஈஸ்வரனுடைய அங்கங்களில் அங்குஷ்டத்தோடு கூடிய கனிஷ்டை விரலால் இருதயாய நம என்று இருதயத்திலும் சிரசே நம என்று அணிவிரலால் சிரசிலும் 'சிவாய நம' என்று மத்திமை விரலால் சிகையிலும் 'கவசாய நம' என்று இருகை தர்ஜனி விரல்களால் ஸ்தானங்கள் மத்தி வரையிலும் 'அஸ்திராய நம' என்று அணிவிரல்களால் கரங்கள் இரண்டிலும் பீஜத்துடன் நியாசம் செய்தல் வேண்டும்.

**ஏகத்துவம்**

புஷ்பாஞ்சலியை சிவாய நம என்று சிரசில் சாத்தி

**அஷ்ட முத்திரை**

அஸ்திராய பட் என்று திக்குபந்தனமும் 'கவசாய வெளஷட்' என்று அவகுண்டனமும் மூலமந்திரத்தால் தேனுமுத்திரையும் மகாமுத்திரை, கர்ணிகா முத்திரை, இலிங்க முத்திரை, நமஸ்கார முத்திரை, பஞ்சமுக முத்திரையும் கொடுக்கவும்.

**பாத்திய ஆசமன அருக்கியம்**

அருக்கிய பாத்திரத்தை இடது கையில் சுவாமியின் பாதத்திற்கு நேரே வைத்துக்கொண்டு அருக்கியத்தில் ஒரு புஷ்பம் தோய்த்து மிருகமுக முத்திரையால் சிவாய நம என்று வலது இடது திருவடிகளில் ஒவ்வொருதரம் பாத்தியமும் அருக்கியத்தை சற்று உயர்த்தி முகத்துக்கு நேராக ஈசான முதல் ஐந்து திருமுகங்களிலும் சிவாய சுவாகா என்று தனித்தனியே மூன்றுதரம் ஆசமனமும் சற்று உயர்த்தி சிரசுக்கு நேராக

'சிவாய சுவாகா' என்று ஈசான முதல் ஐந்து சிரசுகளிலும் தனித்தனியே ஒவ்வொருதரமும் அருக்கியம் கொடுக்க வேண்டும்.

**புஷ்பதானம்**

நறுமணமுள்ள புஷ்பம் அறுகு அட்சதைகளை அஞ்சலியாகக்கொண்டு சிவாய வௌஷட் என்று முடியில் சாத்தி தூபதீப ஆசமன அருக்கியமும் கொடுக்கவும்.

**பாவனாபிஷேகம்**

இடதுகையில் லிங்கபீடத்தை அசையாது பிடித்துக்கொண்டு வலதுகையால் ஒரு புஷ்பம் பிடித்து முன்னர் அருச்சித்த புஷ்பத்தை அஸ்திராய பட் என்று கழித்து உடன் வலது கைப்புஷ்பத்தை சாத்தி கரசுத்தி செய்து பின்பு முன்பு போல அருக்கிய ஆசமனமும் கொடுத்து, திருவடி விளக்கி எண்ணெயிட்டு அரைப்புத் தேய்த்து ஸ்நான முதலியவைகளை பாவனையாகச்செய்து விசேஷ அருக்கியத்தால் அபிஷேகம் செய்து பாத்திய அருக்கிய ஆசமனம் கொடுத்து, திருவொற்றாடையிட்டு பின்பு வாமதேவத்தால் பொன்னரைஞாணும், வெண்பட்டினாலே கௌபீனமும், நல்ல பீதாம்பரப்பட்டினாலே உடை உத்தரியமும் சாத்தவேண்டும். இருதயத்தால் யக்ஞோபவீதமும் அணிவித்தல் வேண்டும். மூலமந்திரத்தால் அக்ரு, கற்பூரம், குங்குமப்பூ, கோரோஜனை கூட்டிப் பனிநீர் விட்டுச்சேர்த்த சந்தனமும், முழுக்காப்பாகச்சாத்தி இரத்தினக் குண்டலம், கிரீடம், கங்கை, பிறை முதலாக பாதாந்த பரியத்திற்கு உண்டான சர்வாபரணங்களினாலே அலங்கிருதமாகச் சாத்தி சுகந்த புஷ்பத்தோடு ஆசமன அருக்கியம் கொடுக்கவும்.

**தத்துவத்திரயம்**

சரீரத்தினாலும் வாக்கினாலும் மனசினாலும் உண்டாகிய பாவநிவர்த்தியின் பொருட்டு ஓம் ஹாம் ஹெளம் ஆன்மதத்துவாதிபதியே நம, ஓம் ஹாம் ஹெளம் வித்தியா தத்துவாதிபதியே நம, ஓம் ஹாம் ஹெளம் சிவதத்துவாதிபதியே நம என்று அருச்சித்து, இண்டை திருத்தோடு முதலான திருமாலைகளும் சாத்தி, புட்பு வகையால் பலவகையும் சாத்தி, அலங்கிருதம் பண்ணி, தூபதீபம் கொடுத்து மனோரத முத்திரை மூலத்தால் கொடுக்கவும்.

**லயாங்க பூஜை**

பதினொரு மந்திரங்களாலும் லயாங்க பூஜை செய்து போகாங்க பூஜை செய்யப் பிரார்த்தித்து உத்தரவு பெற்று 'ஓம் ஹாம் ஹெளம் சிவாய நம' என்று மூலத்தால் பூஜிக்கவும்.

**போகாங்க பூஜை (அல்லது) முதல் ஆவரண பூஜை**

ஆவரண பூஜை அனுமதி பெற்று, பஞ்ச சிரசுகளிலிருந்து ஈசானத்தைக் கிரகித்து ஈசான மூர்த்தாய நம என்று ஈசானத் திக்கிலும் பஞ்சமுகங்களினின்று தத்புருஷத்தைக் கிரகித்து 'தத்புருஷ வக்தராய நம' என்று பூர்வ திக்கிலும் இருதயத்தினின்றும் அகோரத்தைக் கிரகித்து 'அகோர இருதயாய நம' என்று தெற்குத்தளத்திலும் குய்யத்தில் நின்று 'வாமதேவ குஹ்யாய நம' என்று வடக்குத் திக்கிலும், சிவனுடைய பாதாதியான அங்கங்களினின்றும் சத்தியோஜாத மூர்த்தியைக் கிரகித்து 'சத்தியோஜாத மூர்த்தியே நம' என்று மேற்குத் தளத்திலும் எல்லா நேத்திரங்களிலிருந்தும் நேத்திரங்களைக் கிரகித்து

'நேத்ரப்யோ நம' என்று ஈசானத்திலும் (அதாவது) ஈசான மூர்த்திக்கு வடக்கிலும் சர்வாங்கமாயிருக்கிற ஹிருதயத்தை ஹிருதயத்தில் கிரகித்து 'இருதயாய நம' என்று அக்கினித் திக்கிலும் ஒருவராதினமுமின்றி விசித்ர ரூபமான சிகையில் சிகையைக் கிரகித்து 'சிகாய நம' என்று நிருதி திக்கிலும், பிறரால் போதிக்கப்படாத தேஜோ ரூபமான கவசத்தை சர்வாங்கத்தில் கிரகித்து 'கவசாய நம' என்று வாயுதளத்திலும், பராக்கிரம ரூபமான கரங்களில் கொண்ட அஸ்திரங்களில் கிரகித்து 'அஸ்திராய நம' என்று கிழக்கு முதலாக நாலுதிக்கிலும், தத்புருஷாதிகளுக்கு இடது பக்கமாகவும் அந்தந்த ஸ்தானத்தில் பத்திகத்தைக்காட்டி அங்குச முத்திரையால் இழுத்துப் பூசிக்கவும்.

இவர்களுக்கு சிவபதத்தில் சிவனைப் போல ஆவாகன ஸ்தாபன சன்னிதான சன்னிரோதன பாத்திய ஆசமன அருக்கிய கந்தபுஷ்பங்களால் அஷ்டசமஸ்காரமும் செய்து பூசிக்கவும். பிரித்துப் பூசித்த ஈசான மூர்த்தியில் தேனு, தத்புருஷமூர்த்தியில் பத்மம் , அகோரமூர்த்தியில் திரிசூலம், வாமதேவ மூர்த்தியில் மகரம், சத்தியோஜாத மூர்த்தியில் சுருக்கு, முத்திரைகளும் 'இருதயாதி நம' என்று தனித்தனியாகக் கொடுத்து சிவாய நம என்று ஸ்வாமிக்குப் புஷ்பாஞ்சலி செய்து மகா முத்திரைகொடுத்து, இந்தப் பதினொரு பெயர்களையும் சிவனுடனே ஏகீபாவமாக இருப்பவர்களாகப் பாவித்து தூபதீப ஆசமனார்க்கியம் கொடுக்கவும்.

### இரண்டாம் ஆவரண பூஜை

இரண்டாம் ஆவரணம் பூஜிக்கும்படி கிழக்குத் திக்கு முதல் அனந்தாதி எட்டுப்பெயரையும் தியானித்து 'ஓம் ஹாம்

அனந்தாய நம, ஓம் ஹாம் சிவோத்தமாய நம, ஓம் ஹாம் ஏகருத்திராய நம, ஓம் ஹாம் ஸ்ரீகண்டாய நம, ஓம் ஹாம் சூக்ஷ்மாய நம, ஓம் ஹாம் ஏகநேத்ராய நம, ஓம் ஹாம் சிகண்டினே நம' என்று பூஜித்து இவர்களுக்கு காளகர்ணிகை முத்திரையும் இருதயத்தால் கொடுத்தல் வேண்டும்.

### மூன்றாம் ஆவரண பூஜை

மூன்றாமாவரண பூஜை கிழக்கு முதலாக எட்டுத் திக்கிலும் "ஓம் ஹாம் நந்தினே நம, ஓம் ஹாம் மஹா காளாய நம, ஓம் ஹாம் பிருங்கிணே நம, ஓம் ஹாம் கணபதியே நம, ஓம் ஹாம் விருஷபாய நம, ஓம் ஹாம் ஸ்கந்தாய நம, ஓம் ஹாம் தேவ்யை நம, ஓம் ஹாம் சண்டாய நம" இவர்கள் எட்டுபேருக்கும் கருணிகை முத்திரை கொடுத்தல் வேண்டும்.

### நான்காம் ஆவரண பூஜை

நாலாமாவரணம் பூசிக்கும்படி கிழக்கு முதலாக ஈசான மீறாக இலிங்கபீடத்தினடியில் தியானத்துடனே 'ஓம் ஹாம் இந்திராய நம, ஓம் ஹாம் அக்கினியே நம, ஓம் ஹாம் யமாயை நம, ஓம் ஹாம் நிருதியே நம, ஓம் ஹாம் வருணாய நம, ஓம் ஹாம் வாயுவே நம, ஓம் ஹாம் குபேராய நம, ஓம் ஹாம் ஈசானாய நம, ஓம் ஹாம் பிர்மணே நம, நிருதி திக்கில் ஓம் ஹாம் விஷ்ணுவே நம' என்று மலர் சாத்தி இந்தப் பத்துபேருக்கும் இருதயத்தால் திரிசூல முத்திரை கொடுத்தல் வேண்டும்.

### ஐந்தாம் ஆவரண பூஜை

கிழக்கு முதலாக எட்டுத்திக்கிலும் 'ஓம் ஹாம் வச்சிராய நம, ஓம் ஹாம் சத்தியே நம, ஓம் ஹாம் தண்டாய நம, ஓம்

ஹாம் கட்சாய நம, ஓம் ஹாம் பாசாய நம, ஓம் ஹாம் துவஜாய நம, ஓம் ஹாம் கதாய நம, ஓம் ஹாம் சூலாய நம, ஓம் ஹாம் பத்மாயை நம, ஓம் ஹாம் சக்ராய நம, இந்தப் பத்துப்பேருக்கும் திரிசூல முத்திரையும் இருதயத்தால் கொடுத்து பஞ்சாவரணபூசையை முடித்துக்கொள்க.

இந்தப் பஞ்சாவரண பூசை மகாலிங்கத்திற்கே உரிய க்ஷணிகலிங்கத்திற்கு முதல் ஆவரணபூஜை செய்தால் போதும்.

**மனோன்மணி பூசை**

சுவாமிக்கு ஈசான திக்கில் ஒரு பாத்திரம் வைத்து அதில் 'ஓம் ஹ்ரீம் மனோன்மணியாசனாய நம, ஓம் ஹ்ரீம் மனோன்மணிமூர்த்தியே நம, ஓம் ஹ்ரீம் மனோன்மணியை நம' என்று அருச்சித்துப் பின் சிவனுக்குச் செய்யும் நைவேத்தியத்தை தேவி கையில் கொடுத்து தேவி நிவேதிக்கிறதாகப் பாவித்துச் செய்யவும்.

**நைவேத்தியம்**

மூலத்தால் சிவனை அருச்சித்து மகாமுத்திரையையும் கொடுத்து மகா நெய்வேத்தியம் பண்ணும்படி தன் சத்திக்கீடாகக் கூடிய அன்னம் விதிப்படியுண்டான கறியமுது அறுவகைச்சுவையுடன் கூடின எல்லாப் பதார்த்தங்களும் நெய்யும் பண்ணி வாசனை கூட்டிய பானீயம், தேங்காய்ப் பழம் முதலியவற்றையும் சொர்ணம் முதலிய பாத்திரங்களில் தத்புருஷ முகத்திற்கு முன்பாக வைத்து புஷ்பங்கள் சாத்தி நிரிட்சனாதி சுத்தி பண்ணி திக்குப்பந்தனாதி செய்து அவகுண்டனம் தேனு முத்திரை மகா முத்திரை கொடுத்து

அங்குஷ்டம் மத்தி அனாமிகை விரல்களினாலே நைவேத்தியம் பண்ணவும். அஸ்திராயபட் என்று பரிசேஷமும், இடதுகையால் பூஜாஸ்தானத்தைப் பரிசித்துக்கொண்டு இருதயாய சுவாகா என்று ஆவோசனமும் கொடுக்கவும். போகங்களுக்கு தனித்தனியே வைத்து அந்த அந்த மந்திரங்களால் நிவேதிக்கவும் (அல்லது) ஏக பாத்திரத்தில் ஓம் ஹாம் சிவாய சுவாகா என்றும் நைவேத்தியம் சுவாகா என்றும் பின்பு ஆவரண மூர்த்திகளுக்கு தனித்தனியே நிவேதனம் பண்ணவும். மனோன்மணி முதலிய சத்திகளுக்குத் தனித்தனியே நிவேதிக்கவும் அல்லது மகேஸ்வரர்களுக்கெல்லாம் ஒரு பாத்திரமும் சத்திகளுக்கு ஒரு பாத்திரமாக நைவேத்தியம் செய்யவும்.

ஈசான முதலாகிய பஞ்சமுகங்களுக்கு முகவாச முதலிய கொடுத்தல் எப்படி என்னில் தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கற்பூரம், கிராம்பு, தேன், சர்க்கரை இவையெல்லாம் கூட்டி ஒரு கழஞ்சளவு உருண்டைபண்ணி நிவேதிக்கவும்.

கொட்டைப்பாக்கு சீவல் அரி, பிளவு வெள்ளை, வெற்றிலை கற்பூர சகிதமான சுண்ணாம்புங்கூட்டி நிவேதித்து ஆசமன அருக்கியம் கொடுத்தல் வேண்டும்.

**தூபம்**

விதிப்படியுள்ள தூப பாத்திரத்தின் சுத்தமான தணலுடன் கூடிய அக்கினியால் நிரப்பி அதில் சாம்பிராணி முதலிய பொருளை நிரிட்சணாதி நான்கு சுத்திகளும் செய்து புஷ்பத்தாலருச்சித்து தூப முத்திரைகாட்டி வலது கையிலெடுத்து இடது கையால் மணியை எடுத்து 'அஸ்திராய பட்' என்று அடித்துக்கொண்டே ஈஸ்வரனுடைய

நாசியின் சமீபத்தில் 'சிவாய தூபம் ஸ்வாகா' என்று காட்டி உயரத்தூக்கி கிரீட ம் முதல் பாதம் வரையில் மூக்காற் சுற்றிக் கீழே வைத்து கரசுத்தி செய்யவும்.

**தீபம்**

தீபக்காலில் பசுநெய் அல்லது எள் எண்ணெயால் நிரப்பி தாமரை நூல் அல்லது பருத்தி நூலால் திரியிட்டு தீபத்தை ஏற்றி நான்கு சுத்திகளும் செய்து புட்பத்தாலருச்சித்து தீப முத்திரை காட்டி வலது கையால் எடுத்து அஸ்திராயபட் என்று மணியடித்துக்கொண்டு தீபத்தை உயரத் தூக்கி சிவாய தீபம் சுவாகா என்று நேத்திரங்களில் சமர்ப்பித்து கிரீடம் முதல் பாதம் வரையில் சுற்றி கீழே வைத்து கரசுத்தி செய்யவும் அஞ்சடுக்கு, ஏழடுக்கு, ஒன்பதடுக்கு முதலாகிய புஷ்ப தீபங்களையும் நிரிட்சணாதி சுத்தி பண்ணி அத்திரத்தினாலே புரோட்சித்து அத்திரத்தால் அந்த அக்கினியை தன்னியத்தை வாங்கி தன்னிடத்தில் விந்துலாக்கினியுடன் கூட்டி சிவாக்கியாகப் பாவித்து திரும்பக்கொண்டுபோய் வைத்து புட்சாவகுண்டனமும் கொடுத்து மூன்று, அஞ்சு, ஏழு, ஒன்பது அடுக்கையும் சரஸ்வதி இச்சானக்கிரியை பஞ்சகலை சப்தமாதாக்கள் நவசத்தி ஆகியவர்கள் கையில் கொடுத்து பணிமாறப் பண்ணுகிறதாகத் தன்கையில் வாங்கி 'சிவாய தீபம் சுவாகா' என்று தூக்கி மூக்காறபண்ணி நாகதீபம், இடபதீபம் புருஷாமிருக தீபம் முதலியவைகளைக் கொடுக்கவும்.

**பவித்ரதானம்** (புஷ்பாஞ்சலி)

பின்னர் அந்தத் தினத்தில் மனம் வாக்குக் காயங்களால் செய்யப்பெறும் குற்றங்கள் நீக்குதற்பொருட்டும் அருகு

அட்சதை வில்வம் முதலிய புஷ்பங்களை அஞ்சலி பந்தமாகக்கொண்டு சந்தோஷமுள்ள உமையவளோடு உட்கார்ந்துகொண்டிருக்கிற சத்திஸ்வரூபமான சதாசிவரைத் தியானித்து, 'ஓம் ஹாம் ஸர்வதத்துவாதிபதியே சிவாய நம' என்று அந்த பரமசிவத்தின் சிரசில் கர்மங்களைப் பூர்த்தி செய்விக்கின்ற பவித்திரத்தை புஷ்பாஞ்சலியைச் சாத்தவும்.

**ஆராத்திரிகம்**

பின்பு நிரோஜனம் பண்ணும்படி ஒரு பாத்திரத்திலே அருகு, புஷ்பம், பருத்திக்கொட்டை, வேப்பிலை முதலாகிய திரவியங்களை வைத்து அதைக் கையிலே எடுத்து 'ஓம் கவசாய சுவாகா' என்று மூக்காற் சுற்றிப் பின்பு கற்பூர ஆராதிக முதலாக அஞ்சு தட்டிலே கற்பூரத்தை வைத்து கற்பூரத்தை வைத்து ஏற்றி நாற்சுற்றி செய்து 'கவசாய சுவாகா' என்று பாதாதி மூர்த்தாந்தமாக மூன்றுதரம் மேலும் கீழும் பணிமாறப் பண்ணி கரசுத்தி செய்யவும்.

**பஸ்மதாரணம்**

பரிமளம் கட்டின வெம்மையான பஸ்மத்தை மிருக முத்திரையாலருச்சித்து 'கவசாய சுவாகா' என்று மும்முறை திருமுடியைச்சுற்றி எறிந்து திருஷ்டி கலந்து அங்குட்டம் அநாமிகையினாலே மீட்கும் பஸ்மத்தை எறிந்து ஈசான முதல் ஐந்து திருமுகங்களின்புருவ மத்தியிலே மந்திரத்தால் திலகமாகத் தரித்து கரசுத்தி செய்யவும்.

**சோடசம்**

பின்பு கண்ணாடி, குடை, சாமரம், ஆலவட்டம், விசிறி முதலியவைகளை ஈசானாதி மந்திரங்களினாலே இயற்றி, இடையிடையே ஆசமனார்க்கியம் கொடுத்து அனந்தாதி

ஆவரண தேவதைகளாலே தோத்திரம் பண்ணப்பட்டு சந்துஷ்டமான சிவனைத் தியானம் பண்ணி சோடச கலாப் பிரசாத உச்சாடன சகிதமாக மூலமந்திரத்தினாலே புஷ்பாஞ்சனம் செய்து மகாமுத்திரை ஐம்முக முத்திரை மூலத்தாற்குறித்து சிவனைப் பிரார்த்திக்கவும்.

### ஜெபதானம்

அறுகு, அட்சதை, புஷ்பமெடுத்து இடதுகையில் வைத்துக்கொண்டு இருதயாய நம என்று ஒரு புஷ்பத்தால் ஜெபமாலையைப் பூஜித்து, வலது கையாலெடுத்து, பிரச்சின்னபடத்தால் மூடி மூலமந்திரத்தை நூற்றெட்டு முறை ஜெபித்து ஜெபமாலையை வைத்துவிட்டு வணங்கி இடதுகைப் புஷ்பத்தை வலது கையால் மூடி 'அஸ்திராய நம' 'கவசாய நம' 'இருதயாய நம' 'கவசாய நம' 'அஸ்திராய நம' என்று சம்புடமாகச் செய்து திக்குப்பந்தனம் ஆவகுண்டனம் செய்து வலது முழங்காலைப் பூமியிலூன்றி புஷ்பத்தை வலதுகையில் வாங்கி இருதயத்தில் வைத்து பூர்ணசந்திரனுக்குச் சமமான ஜெபம் அந்த புஷ்பத்திலிருப்பதாக தியானம் செய்து விசேஷாருக்கிய ஜலம்விட்டு உற்பவ முத்திரையாகப் பிடித்து இடதுகையில் பூஜாஸ்தானத்தை பரிசித்துக்கொண்டு,

### சுலோகம்

ஓம் ஹாம் குஹ்யாதி குஹ்ய கோப்தாத்வப க்ருஹா
ணாஸ்மத் கிருதம்ஜெபம்
ஸ்த்திர் பவது மேயதநத்வத ப்ரஸாதாத் த்வயிஸ்திதே
ஓம் ஹாம் யத்கிஞ்சித் கர்ம ஹேதேவ ஸதாஸுக்ருத
துஷ்க்ருதம்

தந்மே சிவபத ஸ்தஸ்ய புஷ்க்ஷய க்ஷபய சங்கர
ஓம் ஹாம் சிவோதாதா சிவோபோக்தா சிவஸர்வமிதம் ஜெகத்
சிவோயஜதி ஸர்வக்தாய: சிவஸ்ஸோஹமேவது

**மேற்கண்ட சுலோகங்களின் பொருள்**

நீர் அதி ரகஸ்யமானவர், ரட்சிக்கின்றவர், என்னால் செய்யப்பெற்ற ஜெபத்தைப் பெற்றுக்கொள்ளும்; இதனால் உன்னுடைய அனுக்கிரகத்தால் எனக்கு சித்தியாகட்டும். ஓ தேவனே சங்கரனே புண்ணிய பாபரூபமான கிஞ்சித்கர்மம் என்னால் செய்யப்பட்டதோ அதனைச் சர்வகாலமும் நம் பாதத்தில் அன்புடைய என்பொருட்டு முறையே புரியும் போக்கடியும் சிவமே கொடுப்பவர் சிவமே, பூஜைகொள்பவரும் சிவமே, நானும் சிவசொரூபம்.

இவ்வாறு சொல்லி ஓம் ஹாம் ஹௌம் சிவாயவௌஷட் என்று உத்பவ முத்திரையால் சுவாமியின் வலது கையில் விட்டுப் புஷ்பத்தை ஓம் ஹௌம் சிவாய நம என்று சுவாமிக்குச் சாத்தவும்.

**காமிய மந்திரபூஜை**

காமிய மந்திரம் பூசிப்பவர் அதன் பொருட்டு சுவாமியை அருச்சித்து விஞ்ஞாபனம் செய்து அனுக்ஞை பெற்று ஸ்வாமியின் பத்மாசனத்தின் வலது பக்கத்தில் கிழக்கே ஸ்திரீ ரூபமான கௌரி முதலான மந்திரங்களையும், மேற்கே புருஷ ரூபமான மிருத்யஞ்சயாதி மந்திரங்களையும் ஸ்திரி புருஷ ரூபங்களான உமாமகேஸ்வராதி மந்திரங்களை சுவாமிக்கெதிரேயும் அருச்சிக்கவும்.

அவ்விடத்தில் ஸ்வாகாந்தமான பிரணவத்தோடு ஆசன மூர்த்திகளையும் அருச்சித்து ஹிருதய மந்திரத்துடன் அவரவர் மந்திரங்களால் ஆவாகனம் செய்து பாத்ய ஆசமனார்க்கியம் கொடுத்து ஆயிரத்தெட்டு (அல்லது) நூற்றெட்டு (அல்லது) சத்திவரையானாலும் ஜபித்து ஹிருதயத்தால் சம்புடீகரணம் அஸ்திரத்தால் ரட்சை கவசத்தால் அவகுண்டனம் செய்து காமிய மந்திர பிரியரான சிவத்திற்கு அற்பிதம் செய்யவும்.

அல்லது ஆவரண பூஜையான பின் காமிய மந்திரங்களைப் பூஜித்து மூலமந்திர ஜபமான பின் காமியமந்திரம் ஜெபம் செய்து முன்போலத் தத்தம் செய்யவேண்டும்.

## குருபீடாதி பூஜை

சுவாமிக்கு அக்கினி திக்கில் பத்திராசனமிட்டு ஷடுத்தாசனம் பூஜித்து அதில் குருவை 'ஓம் ஹாம் சிவகுரு ஆசனாய நம, ஓம் ஹாம் சிவகுரு மூர்த்தயே நம, ஓம் ஹாம் சிவகுருவே நம' என்று அருச்சித்து 'ஓம் ஹாம்சிவகுருவே ஓம் ஹாம் சிவகுருவே' என்று அருச்சித்து 'ஓம் ஹாம் சிவகுருவே சிவாய நம' என்று சிவத்தை அதில் ஆவாகனம் செய்து சிவகுருவே நம என்று பாத்தியமும் சிவகுருவே சுவதா என்று ஆசமனமும் சிவகுருவே ஸ்வாகா என்று அருக்கியமும் கொடுத்து கந்தபுஷ்பம் சாத்தி அஞ்சலி பந்தனம் செய்தல் வேண்டும்.

## வித்தியாபீட பூஜாதிபதி

சுவாமிக்கு மேற்கே 'ஓம் ஹாம் ஹெம் யோக பீடாய நம' என்று அருச்சித்து சிவனுக்கு மூலத்தால் புஷ்பாஞ்சலி செய்து எழுந்திருத்தல் வேண்டும்.

பின் பூமியிலே சத்தப்படாமற் பயந்து மெத்தென நடந்து ஐந்து அல்லது மூன்று பிரதட்சணம் பண்ணி பூமியில் சத்தப்படாமல் பயந்து சாஷ்டாங்கமாகத் தெண்டாகரமாகிய நமஸ்காரம் பண்ணி அஷ்டாங்கமாவது தலை, கை இரண்டு, கன்னம் இரண்டு, முகவாய், இரண்டுபுஜம் இந்த எட்டும் படிய வணங்குவது. பஞ்சாங்கமாவது தலை, கை இரண்டு, முழந்தாளிரண்டு இந்த அஞ்சும் இப்படிப் பூமியிலே பட வணங்குவது. இவ்வாறு நமஸ்கரித்து ஆனந்த தீர்த்தனம் செய்திடல் வேண்டும்.

**இஷ்டகாமிய விண்ணப்பம்**

'ஏ ! கிருபாநிதியே சரணம் ! சரணம் ! தேவரீரைப் பக்தி சிரத்தையோடு வழுவாது பூசை செய்து வரல் வேண்டும். அடியேன் சிவசாயுச்சியமடையவேண்டும். சர்வ அபிஷ்டத் தையும் தந்து எனக்குப் பிரசன்னமாகவேண்டும்' என்றும் இன்னும் அவரவர்களை மனோபீஷ்டத்தையும் பிரார்த்தனை செய்யவும்.

**இரண்டாவதுகால பூஜை**

இரண்டாவது காலம் கிரமப்படி பூஜை செய்ய இயலாதவர்கள் 'ஓம் ஹாம் சிவாசநாய நம' ''ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தாய நம' 'ஓம் ஹௌம் சிவாய நம ஈசான மூர்த்தாய நம' 'தத்புருஷவக்தராய நம' 'அகோர ஹிருதாய நம' 'ஹிருதயாய நம' 'வாமதேவ குஹ்யாய நம' 'ஸத்யோ ஜாதமூர்த்தயே நம' 'நேத்ரப்பியோ நம ஹிருதாய நம' 'சிரஸே நம' 'சிகாய நம' 'கவசாய நம' 'அஸ்திராய நம' என்று போகாங்க ஸ்தானங்களில் பூஜித்து அருக்கியம்

முதலியவை கொடுக்கவும். (ஆசாரிய புருஷர்கள் நான்கு காலம் பூஜை செய்யவேண்டும்)

**நித்யாக்கினி காரியவிதி**

நித்யாக்கினி காரியத்தில் அதிகாரமுடைய ஆசாரிய புருடர்கள் அக்கினி காரியம் செய்யப்பிரார்த்தித்து அனுமதி பெற்று பூஜாஸ்தானத்திற்கு அக்கினி திக்கில் குண்டமாகிலும் வேதியாகிலும் உண்டாக்கிக்கொண்டு அதற்கு கிழக்கு முகமேனும் வடக்கு முகமேனும் இருந்து குண்டத்துக்கு 'ஓம் ஹாம் சிவாய நம' என்று நிரிக்ஷணமும் 'அஸ்திராய ஹூம் பட்' என்று புரோட்சணமும் தர்ப்பையினாலே தாடனமும் கவசாய வௌஷட் என்று அப்புக்ஷணமும் குண்டத்துக்குப் பள்ளம் வெட்டுகளையும் (கனன) குண்டத்துக்கு மண்ணைத் தோண்டுகையும் (அவகிரண) மண்ணைப் பூரிக்கையும் (பூசன) மண்ணை நிரவுகையும் (ஸமிகரண) ஜலம் தெளிக்கையும் (ஸோன) குட்டனஞ் செய்கையும் (சூட்டன) பெருக்குகையும் (ஸம்மார்ஜன) மெழுகையும் (ஸமாலோபன்) அஸ்திரத்தால் தருப்பையால் செய்து குண்ட மத்தியில் மேற்கிலிருந்து கிழக்காக மூன்றுகோடும் தெற்கிலிருந்து வடக்காக ஒருகோடும் தருப்பையினாலே இழுக்கவும், வடக்கு முகமாக இருப்பானானால் வித்தியாசமாகச் செய்ய 'கவசாய வௌஷட்' என்று அப்புட்சனம் செய்து சர்வசமஸ்காரங்களும் ஆனதாகப் பாவித்தல் வேண்டும். குண்டத்தில் கூர்ச்சத்தை வைத்து சமத்துவம் அமைத்து 'ஓம் ஹாம் வாகீஸ்வரியை நம'

சுலோகம்

'தேவி மாவாஹயேத் வித்யாம் விதிவத் விஸ்வமாதாம்'
'ஸ்யாமாம் ம்ருதுமதிம் த்யாத் வாஸத்வா ஸோமால்ய பூஷணாம்'

'பிரஸன்ன வதநாம் பத்மபத்ராப நயா நத்ரயாம்'
'யௌவன வயசாய ரூபமதியாய வஸ்திரம் மாலை'

### இதன்பொருள்

பூஷணங்களுடனே நல்லமுகமும் தாமரை இதழை ஒத்த மூன்று கண்களுக்கு லோகமாதா எழுந்தருள வேண்டும் என்று தியானித்தல் வேண்டும். பிறகு வாகீஸ்வரரை ஓம் ஹாம் வாகிசுவராய நம என பூஜிக்கலாம்.

### சுலோகம்

"வாகீஸ்வரந்து ரக்தாபம் த்ரிநேத்ரஞ்ச சதுர்புஜம்
அபயம் வரதோ பேதம் பாஸ சூல கராத்விதம்"

### இதன்பொருள்

ரக்த வர்ணமும் முக்கண்ணும் அபய வரதங்களோடு பாச சூலங்களையுடைய நான்கு அஸ்தங்கள் உடையவராகப் பூஜித்துத் தியானித்து "ஓம் ஹாம் வாகீசுவரி வாகி சுவராப்பியாம் நம" என்று பூஜித்து அருக்கியம் முதலியவை கொடுத்தல் வேண்டும். அவர்கள் சேர்ந்திருப்பதாகப் பாவித்தல் வேண்டும்.

பிறகு அரளிக்கட்டையிலேனும் சூரியகாந்தத்திலேனும் பரிசுத்தமான வீட்டிலேனும் உண்டான அக்கினியைச் சுத்த பாத்திரத்தில் கொண்டுவந்து வைத்து கொஞ்சம் அக்கினியை எடுத்து 'அஸ்திராய நம' என்று ராக்ஷதர் பொருட்டு நிருதி திக்கில் போட்டு நிரிக்ஷணம், புரோக்ஷணம், தாடன, அப்யுக்ஷணம் என்னும் நான்கு சமஸ்காரங்களையும் முன்போல் செய்து 'ஓம் ஹம் ஹாம் அக்கினி மூர்த்தயே நம'

என்று சம்ஹார முத்திரையால் அக்கினியைக் கிரகித்து இடையினாற் பூரகத்தினால் இருதயத்துள் கொண்டுபோய் கும்பகத்தினால் ஜடராக்கினியோடும் பிந்து வக்கினியோடும் சேர்த்து மூன்றையும் ஒன்றாக்கி ரேசகத்தினால் வெளியில் கொண்டுவந்து 'ஓம் ஹ்ரும் அக்கினி சைதன்யாய நம' என்று அக்கினி பீஜத்தை உத்பவ முத்திரையால் பாத்திரத்தில் வைத்து ஸம்ஹிதா மந்திரங்களால் பூஜித்து பரமேஸ்வரனது சுக்கிலமாகப் பாவித்து அதை வாகீசுவரரால் வாகீஸ்வரியின் கருப்ப நாடியில் விடப்பட்டதாகப் பாவித்து 'ஓம் ஹௌம் சிவாய நம' என்று தனக்கு எதிர்முகமாகக் குண்டத்தில் வைத்து அதை, 'ஹிருதயாய நம' என்று ஒன்றாகச் சேர்த்துதேவிக்கு வஸ்திரதானமும் சௌசம் ஆசமனம் இவைகளின் பொருட்டு 'ஓம் ஹாம் ஹிருதயாய நம' என்று ஜலபிந்துவைக் கொடுத்து ஸத்யோஜாதம் முதலிய ஐந்து பிரம மந்திரங்களாலும் பூஜித்து 'ஓம் ஹௌம் சிவாய ஸ்வாஹா' என்று ஐந்து ஆஹுதி செய்து குண்டத்துக்கு கிழக்கு, மேற்கு, வடக்கு இத்திக்குகளில் முறையே 'ஓம் ஹாம் பிரஹ்மணே நம' 'ஓம் ஹாம் விஷ்ணவே நம' 'ஓம் ஹாம் ருத்திராய நம' 'ஓம் ஹாம் அனந்தாய நம' என்றும் கிழக்கு முதல் ஈசானம் வரையில் இந்திராதிகளையும் பூஜித்து அக்கினி சிசுவை ரக்ஷிக்கும் பொருட்டு விக்ஞாபித்து 'ஓம் ஹாம் சிவாக்னிய த்வம் ஹுதாசந' என்று அக்கினிக்கு நாமகரணம் செய்து வாகீஸ்வரிகளை விஸர்ஜனம் செய்யவும்.

பின்பு அக்கினியின் ஹிருதய பத்மத்தில் இலிங்கத்திலிருந்து சிவத்தை ஆவாஹித்து முன்போல் பூஜித்து நைவேத்திய சமயத்தில் எள்ளு முதலியவைகளினால் 'ஓம் ஹௌம் சிவாய ஸ்வாகா' என்று நூறு அல்லது ஐம்பது

இருபது பத்து ஆஹுதி செய்து பிர்ம மந்திரம் அங்க மந்திரங்களுக்கு அதில் பத்தில் ஒரு பங்கும் ஆஹுதி செய்து 'ஓம் ஹௌம் சிவாய வௌஷட்' என்று பூர்ணாகுதி செய்து நைவேத்தியத்திற்காகக் கருவை (அன்னத்தை) ஆஹுதி செய்து 'ஓம் ஹௌம், சிவாய ஸ்வாகா' என்று ஆசனம், சந்தனம், தாம்பூலம் கொடுத்து தர்பையை அத்தீயால் கொளுத்தி, அந்த பஸ்மத்தினால் நெற்றியில் திலகம் வைத்து அஷ்டபுஷ்பம் சாத்தி 'ஓம் ஹௌம் சிவாய ஸ்வாஹா' என்று பராமுகார்க்கியம் கொடுத்து அத்தீயினிலிருக்கும் மந்திரங்களைச் சிவத்தில் யோஜித்து சிவத்தை மூர்த்தியால் (இலிங்கத்தில்) யோஜிக்கவும். (யோஜித்தல் -ஒடுக்குதல்)

பின்பு ஓம் பூஸ்வாஹா ஓம் பூவஸ்வாஹா என்று நான்கு ஆஹுதி செய்து பிரஹ்மாக்களுக்குப் பலி கொடுத்து அக்கனியை நமஸ்கரித்து ஹீதம் 'புத்வா உபாம்' என்று சொல்லி ஓம் ஹ்ரௌம் ஹ்ரும் சிவ சத்யே நம என்று அக்கினியை ஹிருதயத்தால் யோஜித்து பிரஹ்மாதிகளையும் இந்திராதிகளையும் அனந்தர் முதலாக ஹிருதயத்தில் யோஜிக்கவும். (ஒடுக்கவும்)

### அந்தர்பலி பஹீர்பலி விதி

தனக்குத் தெற்கில் இரண்டு மண்டலம் செய்து ஒன்றில் கிழக்கு தெற்கு மேற்கு வடக்குகளில் முறையே 'ஓம் ஹாம் ருத்ரேப்பியோ நம' 'ஓம் ஹாம் மாத்ருப்யோ நம' 'ஓம் ஹாம் கணேப்பியோ நம' 'ஓம் ஹாம் யக்ஷேப்பியோ நம' என்றும் ஈசானம் அக்கினி நிருதி வாயு திக்கில் முறையே 'ஓம் ஹாம் குருப்பியோ நம' 'ஓம் ஹாம் அசுரேப்பியோ நம' 'ஓம் ஹாம்

ராக்ஷஸேப்யோ நம' 'ஓம் ஹாம் நாஹேப்யோ நம' என்று மண்டலமத்தியில் ஈசானம் அக்கினி நிருதி திக்கில் முறையே 'ஓம் ஹாம் நக்ஷத்திரப்யோ நம' 'ஓம் ஹாம் ராசிப்யோ நம' 'ஓம் ஹாம் விவேகப்பியோ நம' என்றும் மேற்கிற்கும் வாயு திக்கிற்கும் நடுவில் 'ஓம் ஹாம் க்ஷேத்திரபாலாய நம' என்று பூஜித்து 'ஓம் ஹாம் ருத்ரோப்பியோ ஸ்வாகா' என்று ஸ்வாஹாந்தமாக முறையே பலியும் அருக்கியமும் கொடுக்கவும்.

இரண்டாவது மண்டலத்தில் கிழக்கு முதல் ஈசான திக்கு வரையில் முறையே 'ஓம் ஹாம் இந்திராய நம' 'ஓம் ஹாம் அக்கினியே நம' 'ஓம் ஹாம் யமாய நம' 'ஓம் ஹாம் நிருதியே நம' 'ஓம் ஹாம் வருணாய நம' 'ஓம் ஹாம் வாயுவே நம' 'ஓம் ஹாம் குபேராய நம' 'ஓம் ஹாம் ஈசாநாய நம' என்றும் ஈசானத்திற்குத் தெற்கில் 'ஓம் ஹாம் பிரஹ்மனே நம' நிருதிக்கு வடக்கில் 'ஓம் ஹாம் விஷ்ணவே நம' மண்டலமத்தியில் 'ஓம் ஹாம் நிலோஹிதாய நம' என்றும் பூஜித்து ஸ்வாகாந்தமாகப் பலியும் அருக்கியமும் கொடுத்து மண்டலத்துக்கு வெளியில் 'ஓம் ஹாம் வாயசாதிப்ய ஸமயபேதிப் யஸ்வாஹா' 'ஓம் ஹாம் அக்கினி யாதிப்ய ஸ்வாஹா' 'ஓம் ஹாம் ஸர்வேப்யோ கிருக வாஸ்து தேவேப்பிய ஸ்வாஹா' என்றும் பலிகொடுத்து அனைவரையும் விஸர்ஜநம் செய்யவும் அல்லது அடியில் கண்டபடி சுருக்கமாக பலி கொடுக்கவும். அதாவது :-

ஓம் ஹாம் யேருத்ரா ரெவித்ர கர்மணோ ருத்ரஸ்தாத
நிவாஸீத
ஸௌம்யா சைவது யேகேகித் ஸௌஷமிய
நாதநிவாஸிதா
மாதரோ ரௌத்ர ருபாக்க கணாநாம் நிபாசயே
வித்தபூதாஸ்ததா சாந்யே திக்விதிக்ஷ ஸடாமாஸ்ருதா

ஸர்வே ஸீத்தித மதஸ பிரதிக் குஹ்ணந்த்விமாம் பளம்
ஸித்திம் ஜுஷந்து நம: க்ஷிப்ரம் பவேப்ய பரந்துமாம் ஸதா

இந்தப்பிரகாரம் சமஷ்டியாகப் பலிகொடுத்து பலிதேவர்களை ஹீருதயாயநம: என்று ஹிருதயத்தில் யோஜிக்கவும்.

**இந்த சுருக்கபலி சுலோகத்தின் பொருள் :-**

உத்திர ஸ்தானத்தில் வசிப்பவர்களாயும் ரௌத்ரத் தன்மையை உடையவர்களாயுமுள்ள உருத்திரர்களே ஸௌம்ய ஸ்தான வாகிகளாயும் ஸௌமியத் தன்மையுடைய உருத்திரரின் தேவிகளே சுணாதிபர்களே திக்கு விதிக்குகளை அடைந்திருக்கின்ற விக்கினரூபிகளே யாவரும் நல்ல மனதுடையவர்களாய் இப்பலியைக் கிரகித்தல் வேண்டும். பயத்தில் நின்று காப்பாற்றுதல் வேண்டும். இவ்வாறு பலிகொடுத்தல் வேண்டும்.

பின்பு ஸ்தோத்திர நமஸ்காரம் செய்து ஸ்வாமியிடத்துக்குச்சென்று,

"யத்கிருதம் யத்கரிஷ்யாமி தத்ஸர்வம் ஸுக்ருதம் தவ
விஸ்வ கோப்தா த்வமேவாத்ர நாந்யோ நாதோஹிமே சிவீ"

நான் எதைச் செய்கின்றேனோ எதைச் செய்யப் போகின்றனோ அவையாவத் கிருத்யம் உம்முடையதே உலகத்தை ரட்சிட்பவராகிய நீரே எனக்கு நாதன் ஓ பரமசிவமே வேறு எஜமானன் இல்லை என்று விக்ஞாபித்து பூஜை ஹோமம் முதலிய புண்ணிய பலத்தை "ஓம் ஹௌம் சிவாயஸ்வாஹா" என்று சுவாமியின் வரதஹஸ்தத்தில் அருப்பணம் செய்யவும்.

அக்கினி காரியம் செய்ய முடியாதவர்கள் அதற்குப் பதிலாக கையில் புஸ்பம் வைத்து மூலமந்திரம் நூற்றெட்டுத்தரமும் ஸம்ஹிதா மந்திரம் இயன்ற வரையிலும் ஜபித்து முன்போல் ஸ்வாமியின் வலது கையிலிட்டு சிவாயநம என்று சாத்தவும்.

அக்கினி காரியத்தில் அதிகாரமில்லாதவர்கள் (ஆசாரியரல்லாதார்) சிவாசனாயநம, சிவமூர்த்தயே நம, ஹிருதயாய நம, சிரஸே நம , சிகாயை நம, கவசாய நம, அஸ்த்ராய நம என்று பூஜித்து அருக்கியம் கொடுக்கவும்.

## 67. அட்ட புஷ்பவிதி

முன்போல் 'சிவாசனாய நம', 'சிவமூர்த்தயே நம', 'சிவாய நம', 'ஹிருதயாய நம', 'சிரசே நம', 'சிகாய நம', 'கவசாய நம', 'அஸ்த்ராய நம' என்று பூஜித்து பஞ்சமுகி முத்திரை காண்பித்து ஸ்வாமிக்கு மேற்கு வடக்கு தெற்கு கிழக்கு சிரசு இந்த ஐந்து இடங்களிலும் 'ஸத்யோஜாத மூர்த்தயே நம' என்றும் 'சிவாய நம' என்றும் பூஜித்து பூஜித்தபடி அருக்கியம் கொடுக்கவும். காமிய மந்திரங்களை அதனதன் ஆலயங்களில் (ஒடுக்கி) யோஜித்து அருக்கியம் கொடுக்கவும்.

## 68. சிவ பூஜா சமர்ப்பணம் (சிவ பூசை நிறைவு)

சத்தியோ சாத முதலாக ஐந்து சிரசுகளிலும்மூலத்தாலருச்சித்து அந்தக் கிரமத்தில் அருக்கியம் கொடுத்தபின் சுவாமியின் நாம கரணத்தால் அருச்சித்து அருக்கியம் கொடுத்தல் வேண்டும். முதலாவரணத்தில் அருச்சித்த போகாங்கஸ்தானங்களில் அஸ்திர முதல் ஈசான மீறாக பிரதிலோமக்கிரமமாக அருச்சித்து சர்வேப்பியோ பிர்மாஸ்கேப்பியோ என்று அருக்கியம் கொடுத்தல் வேண்டும். இருகைகளிலுள்ள கட்டைவிரல் சுட்டுவிரல் களின் நுனிகளில் புஷ்பமெடுத்து நாராசமுத்திரையால் 'அஸ்த்திராய உம்பட்' என்று உயரே தெறித்து போகாங்க மந்திரங்களை எழுப்பி எல்லோரும் ஒருமிக்க வந்ததாகப் பாவித்து 'ஓம் ஹாம் ஹம் ஹாம், சிவமூர்த்தயே நம' என்று திவ்ய முத்திரையாக இலிங்கத்தில் யோஜித்து (ஒடுக்கி) மூர்த்தி மந்திரங்களையும் பீடத்தில் 'ஓம் ஹாம் சிவாசனாய நம' என்று அருச்சித்தல் வேண்டும்.

பின்பு சிவனை மூலமந்திரத்தால் அருச்சித்து 'ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய சுவாகா' என்று பராமுக அருக்கியம் கொடுத்தல் வேண்டும். 'என்னால் செய்யப்பட்ட பூஜையிலுள்ள குற்றங்களைப் பொறுத்து சிவ பூஜா பலனைத் தரவேண்டு' மென்று பிரார்த்தித்தல் வேண்டும். 'சுவாமி கிருபை செய்து இப்போது இஷ்டப்பிரகாரம் யதாஸ்தானம் எழுந்தருளியிருந்து நாளைய தினம் நான் பூஜை செய்யும் காலத்தில் எழுந்தருளி வந்து இரட்சித்தருள வேண்டும்' என்று பிராத்தித்தல் வேண்டும்.

பின்பு மூலத்தால் சிவனை அருச்சித்து திக்குப் பந்தன அவகுண்டன தேனு மகா முத்திரைகளும் மந்திர பூர்வமாகக் கொடுத்தல் வேண்டும். பத்மபீடத்தினின்றும் சிவலிங்கத்தை எழுந்தருள கவசாய வௌஷட் என்று வெண்பட்டு முதலியவைகளால் மூடி பெட்டகக்கோவிலில் எழுந்தருளி உன்னத ஸ்தானத்தில் வைத்தல் வேண்டும். பெட்டகக்கோயிலாகிய கருப்பக்கிரகத்துக்கு இரட்சார்த்தமாக (முன் வலது பாலிருக்கப் பிரார்தித்து பீமருத்திரத்தை தியானித்து 'ஓம் ஹாம் விமருத்திராய நம' என்றருச்சித்து கெர்ப்பக்கிரகத்தைக் காக்க என்று சிவாக்ஞையை தெரிவிக்கவும்.

க்ஷணிகலிங்க பூசையுடையவர்கள் 'ஓம் ஹாம் சிவாய அஸ்திராய பட்' என்று ஒரு பத்திரத்தை இரண்டாகக் கிள்ளி சுவாமிக்கு இரண்டு பக்கத்திலும் தெளித்து 'ஓம் ஹாம், ஹம், ஹாம் சிவமூர்த்தயே நம' என்று மூர்த்தியில் யோஜித்து (ஒடுக்கி) சிவாய நம என்று பூஜித்து சிவாய ஸ்வாஹா என்று பாராமுக அருக்கியம் கொடுத்து, என்னால் கொடுக்கப்பட்ட சிரமத்தைப் பொறுத்துக் கொள்ளுக என்று பிரார்த்தித்து திக்குபத்தனம் அவகுண்டனம் செய்து தேனு முத்திரைகொடுத்து புஷ்பத்தோடு ஓம் ஹாம் சிவாய ஹிருதாய நம என்று ஹிருதயத்தில் ஒடுக்கவும்.

## 69. தேசிகாதி விசர்ச்சனம்

மனோன்மணி சிவகுரு வித்தியாபீடம் யோகபீடம் வாஸ்துபதி, சப்தகுரு, மகாலெட்சுமி, கணபதி சர்வேப்பியே துவார பாலேப்பியோ என்று யாவருக்கும் கலாகாந்தமாக சாமான்யத்தால் பராமுக அருக்கியம் கொடுத்து அஸ்திராயபட் என்று நாராச முத்திரையால் இருதயாய நம என்று இருதயத்தால் ஒருக்கிக்கொள்ள வேண்டும்.

## 70. சூரிய விசர்ச்சனம்

சூரியருக்கியத்தில் 'ஓம் ஹம், கஷோல்காய சுவாகா' என்று சூரியனுக்கு 'பராமுக அருக்கியம்' கொடுத்து சக்வோபசாரங்களையும் பொறுத்தருள வேண்டு மென்று பிரார்த்தித்து 'ஓம் ஹெ அஸ்திராய உம்பட்' என்று நாராச முத்திரையால் புஷ்ப மெடுத்து எறிந்து மந்திரங்களை எழுப்பி ஓம் ஹ்ராம் ஹ்ரீம் சதாசிவ சூரியமூர்த்தியே நம என்று ஹிருதய அண்டரிக மத்தியஸ்தான சிவசூரியனிடத்திலே யோஜித்துக் கொள்ளவும்.

## 71. சண்டேசுரர் பூஜா விதி

ஈசான திக்கில் சுத்த பூமியில் அடுத்த சந்திராகிருதியில் மண்டலமிட்டு ஷடுத்தாஜனம் பூஜித்து ஓம் ஹாம் சண்டாஸநாய நம ஹூம் பண்ணம் ஓம் ஹாம் சண்டமூர்த்தியே ஹூம் பண்ணம் என்று அருச்சிக்கவும்.

## 72. ஆதிச்சண்டர்தியானம்

உருத்திராக்கினியில் உற்பவித்தவராயும் மைநிற முடையவராயும் பயங்கரராயும் சூலம் உளி ஆயுதங்களை உடையவராகவும் உருத்திர சம்பந்தராயும் நான்கு முகங்களையும் நான்கு புஜங்களையும் உடையவராயும் அக்னிஜ்வாலா முகராயும் சிவந்த பன்னிரண்டு கண்களையுடையவராயும் ஜடா மகுடத்தில் மூன்றாம் பிறைச் சந்திரனை தரித்தவராயும் ஸர்ப்பகனை முடையவராயும் நாகயக்ஞோபவிதமுடையவராயும்

உருத்திராட்ச மாலையும் கமண்டல முடையவராயும் வெண்டாமரையாசன முடைய வராயும் பக்தியானரின் கஷ்டத்தைப் போக்குபவராயும் உள்ள சண்டேசுரரை இவ்வாறு தியானிக்க வேண்டும்.

'ஓம் ஹாம் சண்ட நேத்ரப்பியோ ஹூம் பண்ணம்' என்று நியசித்து 'ஓம் ஹாம் த்வநிச் சண்டேஸ்வராய ஹூம் பண்ணம்' என்று ஆவாஹித்து 'ஓம் ஹாம் சண்டஹிருதாய ஹூம் பண்ணம் ஓம் ஹாம் சண்ட சிரஸே ஹூம் பண்ணம், ஓம் ஹாம் சண்ட சிகாயை ஹூம் பண்ணம், ஓம் ஹாம் சண்ட கவசாய ஹூம் பண்ணம், ஓம் ஹாம் கண்ட அஸ்த்திராய ஹூம் பண்ணம்' அங்க மந்திரங்களால் சகளிகரணம் செய்து பூஜிக்க வேண்டும்.

ஆஸனமூர்த்தி மூலத்தாலாவது கேவல மூலத்தாலாவது ஆவாஹித்து, அருச்சித்து அருக்கிய நைவேத்தியம் கொடுத்து பூர்வ நிர்மாலியத்தைக் கொடுத்து, அருக்கியம் கொடுத்து, நிர்மாலியமான அமுது கறியமுது பானிய முதலான அமுது செய்யப்பண்ணித்தூப தீபங்கொடுத்து சிவாக்ஞையால் உமக்கு கொடுக்கப்பட்டது என்று விக்ஞாபித்துச் சத்தி மாத்திரம் ஜபித்து நிவேதித்து,

ஓ சண்டேசரே ! இந்தக் கிரியையெல்லாம் உம்முடைய ஆக்ஞையினால் என்னால் செய்யப்பட்டது. குறைவு அதிகமிவைகள் என்னால் தெரியாமல் செய்தால் அவையெல்லாம் எனக்கும் பரிபூரணமாகட்டும் என்று சொல்லி பாராமுக அருக்கியம் கொடுத்து அங்கங்களை எழுப்பி மூர்த்தியிலே மூர்த்தி மந்திரத்தால் நியசித்து இடையினாலே பூரகஞ் செய்து மூலத்தால் ஸம்ஹார முத்திரையால் தன்னுடைய இருதயத்தில் ஒடுக்கவும்.

### *73. அருக்கியாதி விசர்ச்சனம்*

அருக்கிய பாத்திரங்கள் சங்கம் திருமஞ்சன பாத்திரங்களில் 'ஓம் ஹம் அஸ்திராய பட்' என்று தனித்தனி பத்திரம் சாத்தி கவசாய நம என்று சங்கார முத்திரையால்

இருதயத்தில் ஒடுக்கிக் கொள்ளவும், பின்னர் நிர்மாலியம் கழித்து பூஜா பீடத்தைச் சுத்தி செய்து சிரசில் புரோட்சித்து அருக்கியாதி பாத்திரங்களிலுள்ள மீந்த ஜலத்தையும் சிரசில் புரோட்சித்துக்கொள்ளவும்.

## 74. அகோர மந்திர ஜெபம்

கைகால் சுத்தம் செய்து ஆசமனம் பண்ணி விபூதி தரித்து ஸகளீகரணம் செய்து சமஸ்த பூஜா பலமும் கிடைக்கும் பொருட்டு அகோர மந்திரத்தை இருபத்தோரு தரம் ஜபிக்கவும்.

## 75. கபில பூஜா விதி

ஒரு பத்திரத்தை ஆசனமாக வைத்து அதில் ஓம் கபிலே நந்தே நம, ஓம் கபிலே பத்ரே நம, ஓம் கபிலே சுசிலே நம, ஓம் கபிலே சுரபே நம, ஓம் கபிலே சுமனசே நம என்று பூஜித்து அருக்கியம் கொடுத்து சுத்த புஷ்பாதிகளால் அருச்சிக்க வேண்டும்.

### சுலோகம்

அமிர்த மதநோத் பன்னேஸுரபே லோகதாரிணி
இமம் கிராஸம் க்ருஹாணத்வம் இதமமேவ்ரத முத்தமம்

### பொருள்

அமிர்தம் கடைகையில் உற்பத்தியானவளே உலகத்தை இரட்சிக்கின்ற காமதேனுவே இந்தப்புல்லை வாங்கிக்கொண்டு காப்பற்றம்மா. இது என்னுடைய உத்தமமான விரதம் என்று அறுகை ஆகாரமாகக் கொடுத்து அருக்கியம் கொடுத்து ஹிருதயாய நம என்று ஒடுக்கவும். பின்பு நமஸ்கரித்து சிவாலய சேவை பண்ணி இல்லத்திலே வந்து சிவாலய திருமுறை பாராயணம் பண்ணுக.

### போஜன விதி

பின்பு தன்னுடைய இல்லத்தில் பூமியிலே மெழுகிச் சுத்தமான போஜன இடத்திற்குச் சென்றடைந்து கிழக்கு

முகமாக இரண்டு காலும் முடக்கிக்கொண்டு இருந்து இடது முழந்தாளிலே இடது கரம் ஊன்றிக்கொண்டு சதுரமான மெழுக்கினாலே இடம் பெற்ற விதிப்படி கதலியாகிய பரிகலத்தைத் திருத்தி நெய்யினாலே புரோட்சித்து சுத்தி பண்ணி அன்னமும் கறியமுதும் பரிமாறின பின்பு செம்புச்சலத்திற்கு நிரிட்சனாதி சுத்தி பண்ணி வலது கையை செம்பின் மேல் வைத்து மிருத்தியஞ்சய மந்திரத்தினாற் ஜெபித்து ஜலத்தை வாங்கிக்கவசத்தால் பரிகலத்தில் அன்னத்தைக் குழைத்து அந்திர மந்திரமுச்சரித்து அனாமிகையால் அன்னத்தைப் புரோட்சித்து "மிருத்துஜயாய வெளஷட்" என்று ஏழுருச் ஜெபித்து வேறு பாத்திரங்களில் சிறிது அன்னம் எடுத்து வைத்துச் சிவனுக்கும் குருவுக்கும் நிவேதித்து வலதுபுறத்திலே மண்டலமிட்டுச் சிறிது அன்னம் எடுத்து வைத்துச் சிவனுக்கும் குருவுக்கும் வைத்து சலத்தை வாங்கி வலது கையிற் சிறுவிரலாலே விபூயிட்டு அச் ஜலத்தினாலே வளைத்துக்கட்டி ஓம் ஹாம் நாக கூர்ம கிருகர தேவதத்த தனஞ்ஜயேப்பியோ உபப் பிராணவாயுப்யா ஸ்வாஹா என்று பூமியிலே இடப்பட்ட அன்னத்திலே நாகாதிவாயுக்களுக்கு நிவேதனம் செய்து முகுதி ஜலத்தை அமிர்தோபஸ்த்ரணமஸ் என்று ப்ராசனம் செய்க. இல்லாவிடில் ஈசானத்தால் ஜலம் கொண்டு வட்டமிட்டுத் தத்புருஷத்தால் உட்கொண்டு அஸ்திரத்தால் உதராக்கினியைச் ஜொலிப்பித்து அதிலே

"ஓம் ஹாம் பிராணாய ஸ்வாஹா
ஓம் ஹாம் அபாநாய ஸ்வாஹா
ஓம் ஹாம் வியாநாய ஸ்வாஹா
ஓம் ஹாம் உதாநாய ஸ்வாஹா
ஓம் ஹாம் ஸமாநாய ஸ்வாஹா"

என்று ஹோமம் செய்து பூமியிலிருக்கிற பாத்திரத்தில் ஐந்து பிராணாகுதி செய்து பிறகு யதேஷ்டமாகப் புசிக்க. அந்தச் சமயத்தில் அன்னத்தில் ஈ, நகம், முடிகள் இருந்தால்

அத்துடனே கொஞ்சம் அன்னம் எடுத்து அப்புறம்போட்டுக் கையலம்பி விபூதி தெளித்துப் பூசிக்கவும்.

உள்ளி, வெள்ளுள்ளி, செம்முருங்கை, அத்திக்காய், வள்ளி, பசளை, கோவை, வெண்கத்திரி, கொம்மட்டிக்காய், எண்ணைப்பிண்ணாக்கு, இந்துப்பு இவைகளையெல்லாம் விலக்கி அதிட்சாரான முதலியோர் பாராமல், பன்றி முதலிய மிருகங்கள் பாராமல், நடுவே உப்பு, நெய் விடுவித்துக் கொள்ளாமல், கையினால் உப்பு முதலானது பரிமாறாமல், அகப்பையினாலே பரிமாறச் சொல்லி உபயோகமில்லாத வார்த்தைகள் பேசாமல், நடுவே ஜலபானம் பண்ணாமல் மிதமாய் புசிக்கவேண்டியது.

திருப்தியாய் போஜனம் செய்த பிறகு கையலம்பாமல் "அமிர்தாபிதாநமஸி யாலாதல் தத்புருஷத்தினாலாதல்" என்று ஜலபானம் செய்து கையலம்பி ஆசமனம் செய்து வலக்கையிலே ஜலத்தை விட்டு முஷ்டி பாதனமாகப் பிடித்துக் கைப்பெருவிரலால் "ஓம் ஹாம் காலாக்னி உருத்திராய ஸ்வாஹா" என்று விடவும்.

பிறகு விபூதி தூளிதஞ் செய்து கரநியாசம் அங்க நியாசம் செய்து பரிகை முத்திரை காட்டி வாமதேவத்தால் உதரத்தை ஒன்பது தரம் தடவி அகோரத்தை ஏழு உரு ஜெபம் செய்து தாம்பூலம் போட்டுக்கொள்க. அன்னியரில்லத்தில் போஜனம் செய்தால் அன்னத்தைச் சிவகாயத்திரியால் பூஜிக்கவும்.

போஜன விதி முற்றும்

★★★★★

## பஞ்ச கவ்வியம்

பஞ்ச கவ்வியம் தாபிக்கும்படி அமுதுபடி பரப்பி ஆறங்குலப் பிரமாணமாக ஒன்பது கோட்டம் பண்ணி வடக்கே நுனி கிழக்கே நுனியாக நன்நான்கு தர்ப்பையாக ரேகை வழியே பரப்பிப் பாத்திரங்களைப் புருஷத்தால் புரோட்சித்து கவசத்தால் அவகுண்டனம் பண்ணி நடுக்கோட்டம் சிவத்துவ கோட்டம் சுப்ரதிப பாத்திரமும் பூசித்து சிவப்புப் பசுவின் பாலை ஈசானத்தால் வார்த்து அருச்சித்து ஒருகால் அபிமந்திரித்து கிழக்குக் கோட்டம் சதாசிவ தத்துவக்கோட்டம் சுகாந்த பாத்திரம் பூசித்து வெள்ளைப் பசுவினது தயிர் தற்புருஷத்தால் வார்த்து இரண்டு தடவை அருச்சித்து இரண்டு தடவை அபிமந்திரிக்கவும். தெற்குக் கோட்டம் வித்தியாதத்துவக் கோட்டம் தேஜோமயபாத்திரத்தில் கபிலைப்பசுவின் நெய் அகோரத்தால் வார்த்து மூன்று தடவை அருச்சித்து மூன்று தடவை வழிபட்டு வடக்குக் கோட்டம் புருஷதத்துவக் கோட்டம் ரக்தோதக பாத்திரம் நீலப்பசுவின் கோமூத்திரம் வாமத்தால் வார்த்து நாலுதரம் அபிமந்திரித்து அருச்சித்து மேற்குக் கோட்டம் கால தத்துவக்கோட்டம் அமிர்த்தமாக பாத்திரம் சிவப்புப் பசுவின் கோமயம் அங்குஷ்டப் பிரமாணம் கரைத்து சத்தியோஜாதத்தில் பார்த்து ஐந்து தடவை அருச்சித்து, ஐந்து தடவை அபிமந்திரித்து ஈசானத்தில் பிரக்கிருதி கோட்டம் அவ்விக்ர பாத்திரம் பூஜித்து குசோதகம் மூலத்தால் வார்த்து பதினாறு தடவை அருச்சித்து இப்படியே அபிமந்திரித்து அக்கினிக்கோட்டம் பாவித்து மாவை விளாம்பழம் பிரமாணம் இருதயத்தால் வைத்து ஒரு விசை அருச்சித்து அபிமந்திரித்து நிருதிக்கோட்டம் அப்யுக்த கோட்டம் பூஜித்து விளாம்பழம் பிரமாணம் நெல்லிக்காப்பு சிரசே நம என்று வைத்து அருச்சித்து அபிமந்திரித்துப் பின்பு வாயுகோட்டம் பூஜித்து வாழைப்பழமளவும் மஞ்சட்காப்புக் கவசத்தால் வைத்து ஒரு தடவை அருச்சித்து அபிமந்திரித்து பின்பு கோமய

முதலாக விபரீதமாக மூலத்தால் நேராகக் கூட்டிக் குசோதகத்தை நடுப்பாலிற் கூட்டி மீளவும் மறு தருப்பை கூட்டி வைத்துக்கொண்டு வலக்கையாலே மூடி மூலத்தையும் பதினோரு மந்திரத்தையும், ஜெபித்துத் திக்குபந்தனம் அவகுண்டனம் தேனு முத்திரை கொடுத்து அபிஷேகக் காலத்தில் அபிஷேகம் செய்யவும். பிராயச்சித்தமாகிய நூற்றெட்டு மூலம் செபிக்கவும். மாக்காப்பு நெல்லிக்காப்பு மஞ்சள்காப்புத் தனித்தனியே வைத்து அபிஷேகம் செய்யவும். பஞ்சகவ்யம் உள்ளே கொள்ள வேண்டியவர் உபவாசமிருந்து கிழக்கு மூலமாக ஓங்காராதி மூலமான மந்திரத்தினால் சத்தப்படாமற் கொள்ளவும்.

## பஞ்சாமிர்தம்

பஞ்சாமிர்தம் நாபிக்கும்படிப் புதுக்கோட்டம் பண்ணி கோட்டபாகும் இந்தப்படி பூஜித்து நடுக்கட்டத்தின் கிழக்கே தயிர் தெற்கே நெய் வடக்கே தேன் மேற்கே சருக்கரை அல்லாதிருந்தால் கருப்பஞ்சாறு கூட்டவும், அக்கினி கோட்ட முதலாக நாலு கோஷ்டத்திலும் வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம், சந்தனக் குழம்பு வைத்து முன்பு பஞ்சகவ்வியத்துக்குச் சொன்ன பிரகாரம் அருச்சித்து அபிமந்திரித்துத் திக்குப்பந்தனம் அவகுண்டனம் தேனு முத்திரை தூப தீபங் கொடுத்து இவைகளைத் தனித்தனியே அபிஷேகம் பண்ணவும்.

முற்றும்

## அட்டபுட்பம்

அட்ட புஷ்பஞ் சாத்தும்படி வில்வத்தைக் கண்டத்தில் சிவாதனத்தால் சாத்தி திருமுகத்தில் தாமரைப் பூவை சிவமூர்த்தியினாலே சாத்தி திருமுடியில் எருக்கம்பூ மூலத்தால் சாத்தி மார்பிலே நந்தியாவட்டத்தை

இருதயத்தால் சாத்தி உந்தியிலே பாதிரியைச் சிரசினாலே சாத்தி அரையிலே அலரிப்பூவைக் கவசத்தால் சாத்தி சிகையினால் முழந்தாளில் செண்பகப்பூவைச் சாத்தி பாதத்திலே நிலத்தை அத்திரத்தால் சாத்திடவும்.

---

பெருவேதனை யுறுங் காயத்தை விட்டு நின்பின்தொடர
வருவேனெனவும் மறுத்தனையே அந்தவாக்குக் கஞ்சி
திருவே கமலையில் ஞானப் பிரகாச சிதம்பரசற்
குருவே உனைப்பிரிந் தின்னாளில் இருக்கவும் கூடியதே

ஒருக்கோ லிருந்திரு வாரூர் சிமளந்தெ னொடரக்
கருக்கோல மாற்றிய ஞானப்பிரகாசனக் குனையெல்லாம்
உருக்கோலங் கொண்ட திருஞானசம்பந்தன் உள்ளந்தனைத்
திருக்கோயி லாகுமென்றே புகுந்தான் அன்பர் சீர்பெறவே

இறக்கும் சிறுகுடித்துச்சீலை நச்சி என்றால் உலகில்
துறக்கும் துயரம் கொடுதழல் விரிதுலையாத இன்பம்
பிறக்கும்.............................................. கடை
சிறக்கும் கமலையில் ஞானப்பரகாசன்றன் சேவடியே

தானென வரக்கண்டும் கைப்பாணி வாங்கியும் தாரணியுள்
நானே வளர்த்துத் திரிவதல்லால் உண்மையாம் சிவத்தில்
யானே இருக்க இருப்பதெந் நாட்சொல் உளத்தில்
தேனே கமலையில் ஞானப் பிரகாச சிதம்பரனே

அருளே வடிவாகி அம்மை பொற்பாதம்
குருவரு ளதனால் குறித்துமா தவர்க்கு

புத்தியும் அவித்தையும் போதஞ் சனமும்
சத்திய மாகப் பலித்திடும் நன்றாக

ஞானப் பிரகாசன் அமல பாதம்
ஊனப் பிரகாசம் ஒழிக்கும் உத்தமற்கே

******

உ

குருபாதம்

# சிவபூஜை அகவல்

பூசைத் திருவகவல்

திருவாரூர்

திருவருள் திருஞானப்பிரகாச பட்டாரகர் அருளியது

காப்பு

ஓசை சிவாகமத்தி லுள்ளபடி கண்டமைத்த
பூசைத் திருவகவல் போற்றவே - யாசில்
பொருள்நயமும் சொல்நயமும் போதத் துணங்கும்
கருணைபொழி வாரணமே காப்பு

## சூரிய பூசை

### பூசைக்குரிய பொருள் தயாரித்தல்

திருவுறு செல்வமும் சிறந்தமெய்ப் புகழும்
பெருகுமெய்ஞ் ஞானமும் பெற்றிட வேண்டிப்
புத்திசேர் சூரிய பூசை புரிவோர்
அத்திர பஞ்சரத் தகத்தின னாக
மண்முத லாக மாயையீ றாக 5

எண்ணுதத் துவமனைத்து இகலறக் கடந்தே
மிக்குள சுத்த வித்தையின் வடிவெனத்
தக்கதோர் பூசைத் தானத் தடைந்தே
கூறும் கரணம் குறைவற அமைத்தபின்

**சூரிய சகளீகரணம்**

**அங்கநியாசம் கரநியாசங்களைச் செய்து தன்னைச் சூரியனாகப் பாவிப்பது**

**சூரிய கரநியாசம்**

பூருவ முகமுறப் பூசை செய்யும்படி 10
அத்திர மந்திரத்து அங்கை புறங்கைகள்

சுத்திசெய் தத்தத் துணைதன்னைக் கூட்டி
மருவிய சூரிய மந்திர மதனால்
பெருவிரல் இரண்டும் பிணிக்க வுள்வைத்து
இதயமந்திரங்கொண் டிணைப்பெரு விரல்களை 15

விதமுறு தர்ச்சனி விரல்களால் ஊன்றிச்
சிறுவிரல் முதலாய்ச் சிரஞ்சிகை கவசம்
உறுவிரல் மூன்றினும் உறப்பெரு விரலால்
நிசித்த வதற்பின் நேத்திர மதனால்
வசித்திரு தர்ச்சனி மந்திர மடக்குப் 20

பெருவிரல் இணையாற் பிறங்குதர்ச் சனிகளை
மருவிய வத்திர மந்திரத் தியற்றி
கவசமந் திரத்தால் கரங்களைச் சுற்றி
அவனது முலத்து அகங்கைகள் கூட்டி

**சூரிய அங்கநியாசம்**

கரநியா சந்தனை கவின்பெற வியற்றி 25

உரமிக மூலத் துறுசுத்தி கவின்பெற வியற்றி
திதமுற மார்பு சென்னி சிகைகளில்
இதய முதலா வெண்ணும் மந்திர
மலர்விரல் முதலா யடையமூ விரலால்
பணிவுறு நியாசம் பண்ணிய தற்பின் 30

**தன்னை சூரியனாகப்பாவிப்பது**

வளமுறு கவச மந்திரத் தியற்றி
நாடிய தர்ச்சனி நடுவிரல் நிமிர்த்து
நீடுகேந் திரங்களில் நேத்திரம் கொடுத்தே
ஆர்த்திடு மந்திரத் தனாமிகை களினால் 35

ஏற்றிடுங் கைத்தலம் இரண்டிலும் ஊன்றி
அசைவுறு மந்திரத்து அங்கைகள் கொட்டித்
திசைதொறும் செய்து திக்குபந் தனமும்
கவசங் கொண்டு கருதுதர்ச் சனியால்
அவகுண் டனஞ்செய் தாகமெங் குஉற 40

முந்திய சூரிய மூலமந் திரத்தினால்
சிந்தைகொண் மாகமுத் திரையும் கொடுத்தே
நேரி யங்க நியாசத் தாற்றனைச்
சூரியன் றனது சொருபம தாக்கி

**சூர்ய தர்சனார்க்கியம்**

பைமணிச் சென்னிறப் பாத்திரந் தன்னில் 45

செய்மலர் முதலாத் திரவியம் பொருத்தி
செழும்புனல் நிறைந்த தர்சனார்க் கியத்தை
முழந்தா ளூன்றி முடியளா வெடுத்து
மூலமந் திரத்தால் முன்னுறக் கொடுத்தே

**சாமான்ய அருக்கியம் முதலியன**

மாலர வவன்றன் மந்திரஞ் செபித்தே 50

அத்திர சுத்திசெய் தமர்ந்தபாத் திரத்தில்
வைத்திடு கடோர்க்க மந்திர மதனால்
மென்னுதல் அருண விந்துவில் அமுதென
தன்னிகர் பதிதளத் தண்புனல் நிறைத்தே
அருணன் முலத்துடன் அங்கமாறு அமைத்து 55

கருணையோ டத்திர கவசமந் திரங்களில்
திக்குபந் தனத்துடன் திகழவ குண்டனம்
தக்கவா றியற்றித் தரணி மூலத்தால்
முன்னிய தேனு முத்திரை கொடுத்தபின்

**சுத்திசெய்தல்**

தன்னையும் பூசைத் தானத் துடனே 60

உளம்பெறு பூசை உபகர ணங்களை
துளங்குமந் திரங்கொடு சுத்தி புரிந்தே

தாங்கெழிற் பூசைத் தானந் தன்னை
ஓங்குமந் திரம்பயில் ஒருமலர் தன்னால்
சுற்றிவிக் கினம்பல துருசற வித்தபின் 65

## தண்டி முதலோர் வழிபாடு

சுற்றிய வேதிகை நடுவுற வமைத்திடும்
செம்பொனா திகளில் செய்திடும் எட்டிதழ்
அம்புயந் தன்னில் அருச்சனை செய்யும்படி
வனப்புறு நிருதி வாயு ஈசானம்
அனற்றிசை என்னும் அடைந்தநாற் றிசையிலும் 70

பெருக்குறு தண்டி பிங்கலன் கணபதி
குருக்களிவர் தம்மைக் குணம்பெறச் சாத்தி

## சூரிய ஆசன பூசை

புகல்நடு விற்பிர பூதா சனந்தனை
அகமகிழ்ந்து அர்ச்சித்து அனற்றிசை முதலாய்
தருமெழில் விமலர் சாரன் ஆரனத்தியன் 75

பரம சுகனெனும் பாதசிங் கங்களும்
மன்னுபீ டந்தனில் பத்மா சனமும்
பொன்னலர் கொண்டு பூசனை செய்தபின்
கீழ்த்திசை இதழ்முதல் கிளரிதழ் எட்டினும்
ஈட்டிய கன்னிசை ஈசா னத்திலும் 80

மொய்த்திடு தீப்தை முதலாம் ஒன்பது
சத்திகள் தம்மையும் தகைபெறச் சாற்றி
விற்புற முத்திரை விதமுறக் காட்டி
அற்புத மலர்நடு வர்க்கா சனத்தையும்
திருந்திய வருச்சனை செய்தாங் கதன்மேற் 85

**சூரியமுர்த்தி தியானம்**

பரந்திடு வெண்ணிறப் பங்கயா சனமும்
சென்னிற மண்டலந் திகழ்திரு மேனியும்
தன்னிரு கரத்து வெண்டா மரைமலர்
ஒருதிரு முகத்தொளிர் உபய லோசனமும்
அருணவா டையும்பயில் அருணன் வடிவினை 90

கருத்துற நினைந்து கடோற்கமந் திரத்தால்
இருத்திய பின்னர் இருவிரல் கொண்டே

**ஆவாகனம்**

நேத்திரம் கொடுத்து நிறைதரு மலர்கள்
ஆர்த்தவஞ் சலியில் அருணவிந் துவினும்
கரந்தனில் வாங்கிய கதிரவன் தன்னை 95

வரந்தரு மூல மந்திர மதனால்
மெய்தரும் இதய மீதில் ஆவாகனம்
செய்து தாபனத்தொடு சிறந்த சன்னிதானம்
சன்னிரோ தனமிவை தகைபெற இயற்றி
முன்னிய விம்ப முத்திரை காட்டிச் 100

சன்னிரோ தனமிவை தகையுற இயற்றி
முன்னிய விம்ப முத்திரை காட்டி
தருமொழி னேத்திரந் தவிரஅஞ் சங்கமும்
உரமுதற் கராந்தம் உறநியா சம்பண்ணி
மிக்கமு லத்தால் விருப்பொடு கூட்டித் 105

திக்குபந் தனத்தொடு செய்தவ குண்டனம்
ஆர்த்தமூ லத்தால் ஆவின்முத் திரையொடு
சேர்த்திரு மகாமுத் திரையும் கொடுத்தே
முறைபுகழ் கடோற்க மந்திர மதனால்
அறுகல ரரிசி யடைவுறச் சாத்தி 110

### அபிடேகம் (திருமுழுக்கு)

மருவிய கடோற்க மந்திர மதனால்
கருதிய வெண்ணெய்க் காப்புமாக் காப்பிவை
அடைவினில் அளித்தாங்கு அபிடே கித்தே
படைசெவ் வாடை புனைந்தவை நினைந்தே
சந்தனம் குங்குமம் தாமரைப் போதொடு 115

செந்தொடை மலர்பல சிறந்திடச் சாத்தி

### சூரிய லயாங்க பூசை

செங்கதிர் மந்திரஞ் செபித்தொடு முக்கால்
அங்கெதிர் புட்ப அஞ்சலி செய்தே
கொண்டிரு மருக்கியம் கொடுத்த வதற்பின்
முண்டக விம்ப முத்திரை காட்டித் 120

திருந்துமங் கங்களைத் திருமே னியிலுறப்
புரிந்துல யாங்க பூசனை புரிந்தே

### சூரிய போகாங்க பூசை

கூறிய யாங்கங் கொடுத்திட வாங்குதல்
இருதயம் சிரம் சிகைகவ சங்களை
இருமைகொள் அங்கு ஈசன் திசையுடன் 125

நிருதிவா யுக்களில் நிறைபெறச் சாத்தி
இலங்குநேத் திரங்கதி ரெதிர்பெறச் சாத்தி
இருதய முதனான் இசைத்திடு நேத்திரம்
மேவுமந் திரமென விளங்குமூ வகைக்கும்
கோவின்முத் திரையொடு கோவிடாண மெனும் 130

முத்திரை திராசனி முத்திரை யெனுமிவை
அத்தகு மவைகளை அடைவினிற் கொடுத்தே
முன்னிய கீழ்த்திசை முதலிதழ் எட்டிலும்
தன்னிகர் சோமன் தனைமுத லாகக்

கேதுவீ றான கிரகம் எட்டினையும் 135
ஓதிய அடைவினில் உறைந்திடச் சாத்தி

## தூப தீபம் நைவேத்தியம்

கரத்தினி லுறுநமஸ் காரமுத் திரையுடன்
அருந்துநல் லருக்கியம் அவர்தமக் குதவிப்
படைக்கும் நைவேத்தியம் பானியத் துடனன்
அடைக்கா யமுதும் அருணனுக் குதவித் 140

திகழ்தரு தூப தீப முதலாந்
தருமுப சாரமும் தந்த வதற்பின்

## ஆசமன பராமுக அர்க்கியம்

அன்புடன் ஆசம னார்க்கியம் கொடுத்தே
முன்புறச் சூரிய மூலமந் திரமதை
இயன்றன செபித்தபின் இரவிக்கு உதவிப் 145

பயின்றிடு தோத்திரம் பற்பல கூறி
உன்னி அட்டாங்க முறமே தினியிற்
பன்னிரு காலும் பணிந்துட னெழுந்தே
மாசறு கடோர்க்க மந்திர மதனால்
ஆசறு பராமுக அர்க்கியம் கொடுத்தே 150

## இதயந்தன்னில் எழுந்தருளப்பண்ணல்

தேவனே சிறியேன் செய்திடும் பிழைகள்
யாவையும் பொறுத்தரு ளெனமுறை வணங்குக
தயங்கு மாறங்கந் தனைமுத லாக
வயங்கி பல்வகை மந்திரத் தொகையினை
அத்திர மந்திரம் அமர்ந்த நாராச 155

முத்திரை கொண்டு முறைமையில் எழுப்ப
முற்பயில் கடோர்க்க மூலமந் திரத்தால்

எற்பயில் சூரிய னிடந்தனிற் கூட்டி
உதயமார்த் தாண்டனை உத்துவா சனஞ்செய்து
இதய மனத்தில் எழுந்தருளப் பண்ணி *160*

**தேசச்சண்டேசர் பூசை**

இனிதமர் வேதிகை ஈசா னத்தும்
தனியெழிற் றேச சண்டன் தன்னையும்
ஆதன மூர்த்தி அவன்றன் முலத்தால்
போதவை கொண்டு பூசனை புரிந்தே
அடுத்திடு பாத்திய ஆசம னார்க்கியம் *165*

கொடுத்துநின் மாலியம் குறைவில் நைவேத்திய
அவமதி யின்றி அடைக்கா யுடன்பல
உபகர ணங்கள் உதவிய பின்னர்

**சூரிய பூசையின் பயன்**

வருந்து வினைகெட வணங்கி யுத்யாபனம்
புரிந்திடு சூரிய பூசையின் முறைமையை *170*

நலம்பெறக் கற்பவர் நயப்பொடு கேட்பவர்
நிலம்பெறு புகழொடு நீடுவாழ் பவரே *172*

சூரிய பூசை முற்றிற்று

*****

# சிவ பூஜை

## இருக்க வேண்டிய திக்கு

*பூங்கம லத்தயன் புண்டரி கக்கணன்*
*ஈங்கிவர் காணரும் இலிங்க மதாகிய*
*சங்கரன் தனையலர் சாத்துதல் புரிவோன்*
*ஆங்கவன் தென்பால் ஆசனத் திருந்தே*

## ஆசமனம் கரநியாசம் பாத்திர மந்திர சுத்தி

*ஆசமனம் செய்து அருங்கர நியாசமும்* 5

*நேசமோ டங்க நியாசமும் செய்தே*
*பாத்திர மந்திர பரிசுத்தி செய்தே*

## சாமான்ய அர்க்கியம்

*ஏத்திடும் இதயத்து இரும்புனல் நிறைத்தபின்*
*ஓமெனும் மந்திரம் உச்சரித்து ஏழுகாற்*
*சாமானி யர்க்கியந் தனையருச் சித்தே* 10

## துவாரபூசை

*திக்குபந் தனாதி செய்தாங் கதனால்*
*தக்கதுவா ரந்தனை சுத்தி செய்தே*
*கீழ்த்திசை துவாரங் கிளருமேற் படிமிசை*
*வாட்டமில் வடபால் வாரண முகனையும்*
*தாங்குறு தென்பால் சரஸ்வதி தன்னையும்* 15

*ஈங்கிவர் நடுவில் இலக்குமி தன்னையும்*
*அந்தவாயி லின்வடக்குத் தென்புறங் களில்*
*நந்தி கங்கைகளை நயப்புடன் சாத்தி*
*வாயிலின் தெற்கு வடக்குத் திடவே*
*ஏசின்மா காளன் யமுனையைச் சாத்தி* 20

*பத்திசேர் சிவமயப் பார்வையி னாலும்*
*அத்திரம் தெறித்த பத்திரத் தாலும்*

பாசுப தாத்திரப் பாததா டணத்தினும்
ஏசில்வான் முதன்மூ விடையூறு தீர்த்துக்
கிளர்ந்திடு துவாரக் கீழ்ப்படி நடுவில் 25

துளங்கிய வத்திரத் துவாரபா லகனையும்
நீங்கரி தான நிருதியின் திசையின்
பாங்குறு வாஸ்து பதியையும் சாத்தி
பொருத்திருந்து துவார பூசைசெய் ததற்பின்

**ஆத்மசுத்தி** (தத்துவங்களினின்றும் நீங்குதல்)
**ஆக்குமதேகசுத்தி**

பரந்திடும் அத்திர பஞ்சரங் கருதிச் 30

சோர்வர ஐவகை சுத்திசெய் திடவே
நேர்பட வருங்கர நியாசம தியற்றி
பாதப் பெருவிரற் பற்றி யீருருவாய்
ஆதா ரத்தை அடைந்த வதற்பின்
உச்சி யளவும் ஓருரு வாகி 35

அச்சமில் இதய மாதிஐந் திடத்திலும்
பிங்கலை இடைகளில் பின்னலுற் றதோமுகம்
பங்கய முகிழப் பஞ்சகம் பொருந்திய
சுழிமுனை தன்னில் துளையிடத் தமுதம்
பொழிதரு சத்தியின் பூரண நிறைந்தே 40

ஊங்கா ரத்துடன் உள்ளே வாயுவை
வாங்கி நிறுத்தி மறுத்துமே னோக்கு
அம்புய முகைகள் அலர்ந்து மேநோக்க
உம்பட் டென்றே தெறித்துற்ற சோடிகையால்
மாருதந் தன்னை வலத்தில் விடுத்து 45

பூரக கும்பகம் பிரிந்து மீளவும்
சீருறும் இதயச் செழுந்தா மரையில்
தாரகை போலத் தகைபெற விளங்கிய
அம்மெனும் எழுத்தாம் ஆன்மா வதனைச்
செம்மை ஊங்காரச் சிகையினில் ஏற்றி 50

அழுந்திய வாயு வதனைமேல் நோக்கம்
ஒழிந்த சங்கார முத்திரை யதனால்
அவாவி ஆன்மாவை ஆன்ம மந்திரத்தால்
துவாத சாந்தத்தில் சோதியிற் கூட்டிச்
சத்தப் பரிச சதுர்முக விடத்தினும் 55

எத்திய இரதம் விண்டுவி னிடத்தும்
உருவம் கந்தம் உருத்திர னிடத்தும்
அருவுரு புத்தியோ டாங்கா ரந்தனை
மகேசனி டத்தும் மனோவித் துக்களைத்
தகாமல மொழிக்கும் சதாசிவ னிடத்திலும் 60

ஐவர் இடத்தினும் அவைசென் றொடுங்கச்
செய்வது குங்கும தேககுத் தியதாம்

**ஸ்தூல சுத்தி**

உடலினிற் தனித்தனி ஓரைம் பூதம்
அடைவுறக் குணம்வடி வனைத்தையும் நினைந்தே
மருவிய வாயுவை வாங்கி நிறுத்தி 65

விரவமே னோக்கி விடுத்திடும் போதில்
இறைஞ்சிய நிவிர்த்தியால் ஆமெனும் எழுத்தை
அறைந்து மண்ணிக்குனம் ஐந்தையும் நீக்கி
உவந்திடு பிரதிட்டையான் வீமெனும் எழுத்தை
நவின்று நீரின்குணம் நான்கையும் நீக்கி 70

ஒழிந்தபின் வித்தையின் உருமெனும் எழுத்தை
மொழிந்தன லின்குணம் மூன்றையும் நீக்கி
அடுத்திடு சாந்தியின் ஐமெனும் எழுத்தை
எடுத்துரைத் ததன்குணம் இரண்டையும் நீக்கி
சாந்தியா திதந்தனில் ஓமெனும் எழுத்து 75

ஓர்ந்துரைத் ததன்குணம் ஒன்றையும் நீக்கி
மண்முத லைந்தையும் வாயு வனல்புனல்
தின்ன மேதினியொடு சிற்பரா காசம்

இவைகளி னாலடர்ந் திட்டபின் மேனியை
அவையவை யின்வடி வாக நினைந்தே 80

மறம்பொரு மத்திர மந்திர மதனால்
பிறங்கிய வலக்கால் பெருவிரல் தன்னில்
ஊக்கம தாக உதித்தவெங் கனலால்
ஆக்கையின் குற்றம் அனைத்தையும் அடர்ந்தே
உறுமல பந்தம் ஒழிந்தொரு வெளியாய்ச் 85

சருவசூ னியமாம் தன்மையை நினைந்தே
உய்த்திடு நாடிகள் உள்ளும் புறம்பும்
சத்தியின் அமுத தாரையால் நனைந்தே
அகார உகாரம் அதனொடு மகாரம்
பகாத பிரணவப் பாவனை யதனால் 90

சித்த மாகிய செழுந்தா மரையில்
சுத்தவித் தையெனும் துலங்கு ஆதனத்தில்
அம்முதல் விந்து வளவா நாற்கலைச்
செம்மைய தாகத் திகழ்பிர ணவத்தால்
இலையத் தானத்து இழிந்தசூக் குமவுடல் 95

நிலைபெற வந்து நிகழ்ந்தமை கருதி
ஐங்கலைப் பிரணவ ஆத்மமந் திரத்தால்
பொங்கிய வாயுவில் பூரகத் துடனே
சூக்கும உடலியை துவாதசாந் தத்தினாலும்
நீக்கியான் மாவை நிலைபெற வைத்தே 100

அருள்பொழி அமுதால் அபிடே கித்தே
நிரை தரும் அங்க நியாசம் செய்திட
சூக்கும சுத்தி நூலகத் தியெனும்
ஆக்கையின் சுத்தி ஆன்மசுத் தியதாம்
எண்ணிய முக்குணத் திருநிறஞ் செம்மை 105

வெண்ணிற மண்டில மீமிசை பயின்ற
நாபிகந் தந்தனி னாலிரண் டங்குல
மேவிய னாளமிசை வெண்ணி றம்பயில்
போதமாம் எட்டிதழ்ப் புண்டரி கத்துறை
சோதிலிங் கத்தினில் துவாதசாந் தத்தினும் 110

ஆவா கனஞ்செய் தலமனை மஞ்சனம்
பூவாதி யாற்புறம் போலருச் சித்து
விந்துவின் அமுதால் மெஞ்ஞா னாக்கினி
உந்திக் குண்டத்து ஓமம் புரிந்தே
வியன்றரு பூசனை வேள்வியின் உள்ள 115

பயின்றனை முழுதும் பரமனுக்கு அளித்துப்
புருவ நடுவினிற் பொங்கொளித் தாரகை
உருவுறு சோதியை உறநினைந் திருந்தே
புறம்பினும் என்பாற் பூசை கொண்டருளென
அறம்பெற வேண்டி அனுமதிபெற்றிடும் 120

அந்தரியாகமும் ஆன்ம சுத்தியும்
இந்த முறைமையில் ஈசனுக்கு இயற்றி

**தானசுத்தி** *(மாயையை கடந்து நிற்றல்)*

தக்கதோர் பூசைத் தானந் தன்னை
விக்கின நீக்கி வியந்தகாப் புறவே
பத்திர மந்திர மதுகொடு முக்காற் 125

கைத்தலத் தட்டி கண்வெண் திசையினும்
திக்குபந் தனமும் செய்தத் திரத்தால்
அக்கவசத் தாலவ குண்ட னத்துடன்
மெத்திய கீழொடு மேலு நிறைந்திடும்
சத்தியின் முழுவுறச் சத்திமந் திரத்தால் 130

தேனுமுத் திரையும் சீர்பெற இயற்றி
தான சுத்தி தன்னையும் புரிந்தே

**விசேட அர்க்கியம்** (இது சிவபெருமான் ஒருவருக்கே உரியது)

மருக்கமழ் பாத்திய மருவுமா சமனம்
அருக்கிய மூவகைக் கமைத்த பாத்திரங்களை
பத்திர சுத்திசெய் தங்குசத் தமுதம் 135

வைத்திடும் இதய மந்திரத் தமைத்தே
நாலா றெட்டென நவில்திர வியங்கள்

ஏலா தொழியின் இசைந்த சந்தனமுடன்
தணந்திடா தறுகு தண்டுல நறுமலர்
அணைந்த பாத்திய முதலாகிய முன்றினுள் 140

பொருவிலா றங்கம் பொருந்துபாத் தியமும்
பிரமமா றங்கம் பிறங்கா சனமும்
தீதற வமைத்தபின் திகழர்க் கியந்தனை
ஆதன மூர்ந்தி ஐமுக மந்திரம்
சீலமாம் வித்தியா தேகநேத் திரமுடன் 145

மூல மிதய முடிசிகை கவசம்
மந்திர மூலம் அடைவுமந் திரங்களில்
புத்தலர் கொண்டே பூசனை புரிந்தே

***திரவிய சுத்தி*** *(திரவியங்கள் எல்லாம் மாயையினின்றும் உண்டாயின. ஆகையால் சிவசத்தி பதிந்த அருக்கிய நீரால் திரவியங்களைச் சுத்திகரிக்க அவைகள் சிவனுக்குப் பயன்படும். மேலும் எல்லாம் சிவமாகக் காணுதல் என்னும் தத்துவமும் அமைந்தது.)*

இவ்வகை மூவிடத் திசைந்தபாத் திரங்களில்
அவ்வவ் மந்திரித்து அபிமந் திரித்தே 150

திக்குபந் தனமாத் தேனுமுத் திரைதரும்
அர்க்கியம் தனைக்கொண்டு அத்திர மதனால்
தன்னையும் பூசைத் தகுதிர வியங்களொடு
இன்னியல் சுத்தி இயற்றிமீண் டவைதனை
அறைந்திடு கவசத்து அங்கையால் மூடிச் 155

சிறந்திட வபிமந் திரித்தித யத்தால்
அழுந்திடும் கவசத்து அவகுண் டனத்துடன்
மொழிந்திடு தேனு முத்திரை கொடுத்தபின்
சுத்திநால் வகைசெயும் தோயகும் பத்துடன்
வத்திர மத்திர மந்திர மதனால் 160

முந்துறக் கழுவி மொழிந்திடும் இதய
மந்திரங் கொண்டு வடித்தெடுத் தமைந்தே
ஆர்த்த மஞ்சனந்தனை அருக்கியந் தன்னில்

தோய்த்திடு மலரால் சுத்திசெய் திப்படி
உன்னிய பூசையின் உபகர ணம்பல
துன்னிய திரவிய சுத்தி செய்தபின் 165

### *மந்திர சுத்தி*

*(சிவபூசா மந்திரங்ளை அருள்நாத ஒலியில் எழுந்தனவாகச் சிந்தித்தல்)*

தன்னா தனத்தில் தகுஞ்சிவா தனத்தையும்
உன்னிய மார்பினில் மூர்த்தி தன்னையும்
சாத்தி நெற்றியிற் சந்தனத் திலகமிட்டு
ஏத்தி ஒண்மலர்கொடு இசைந்த மூலத்தால்
சிரந்தனி லருச்சனை செய்தே சிவமயம் 170

பொருந்திடல் தன்பால் பூசனை புரிந்தே
மாசறு நாளினில் வருபிறப் பிறப்பெனும்
ஆசூ சங்கட அனைத்துமந் திரங்களும்
உற்றநாத் தாந்தத்து உள்ளொளி பொருத்தல்
சொற்ற மந்திர சுத்தியும் புரிந்தே 175

### *இலிங்க சுத்தி*

*(எட்டு மூர்த்திகளையே திருமேனியாகக் கொண்ட பெருமானை இவ்வெட்டு மூர்த்திகளைக் கடந்தும் இலிங்க ரூபத்தில் எழுந்தருளியிருப்பவனாகக் கருதுதல்.)*

தரித்திடு மனந்தன் றருமம் ஞானம்
அருத்தி வைராக்கி யமைசுவரி யத்துடன்
ஏசறு பத்மம் எனும்சடுத் தாசனம்
பூசனை செய்து புதியவெண் டுகில்புனை
மிகுமெழின் மஞ்சன வேதிகை தன்னிற் 180

தருஞ்சிவ லிங்கந் தனையுற விருத்தி
முந்திய வாதன மூர்த்தி மூலம்
சிந்தைகொள் இதயம் சிரம்சிகை கவசம்
அத்திரம் இவையால் அட்ட புஷ்பமும்
சுத்திசெய் தருக்கிய தூபதீ பங்கொடுத்து 185

ஆய்ந்தஅத் திரத்தால் அகற்றுநின் மாலியம்
போந்திடு தண்டிதன் பூசனைக் கமைத்தே
அமைதரு தூபநீ ராட்டி யதன்பின்
கமழ்தரு எண்ணைக் காப்புமாக் காப்பு
மஞ்சள் நெல்லி வழுவறச் சாத்திப் 190

பஞ்ச கௌவியம் பஞ்சா மிர்தமிவை
ஆடி யருளியதன் பின்நெய் யாட்டி
நீடிய இளவெந் நீராட் டியபின்
வில்வ பத்திரந்தனை விரவ அர்ச்சித்து
நல்ல கற்பூர நறுந்துகள் நிமிர்ந்தே 195

விருப்புறு செழும்புனல் வெண்டயிர் செந்தேன்
கருப்பஞ் சாறுபல் கனிச்சா(று) இளநீர்
அஞ்செழுத் தாலிவை அபிடே கித்தே
விஞ்சிய முடிக்கலக விடாது புனைந்தாங்கு
இடைஇடை தூபநீர் இசைநறுந் தூபப் 200

புடைபயில் அட்ட புஷ்பமும் சாத்தி
பொருந்திய குச்சுப் புற்கவ சத்தால்
பரிந்துசாத் தியபின் பதானசமுத் திரையால்
அதிகமா மூலத் தைமுறை யாட்டி
பதினொரு மந்திரம் பகர்ந்தினி தூட்டி 205

மிகுந்திடும் வியோம வியாபி மந்திரத்தால்
சகத்திரத் தாரைத் தண்புன லாட்டித்
தண்ணறும் புனலொடு சந்தனக் குழம்பும்
தண்ணிய பனிநீர் நயத்துடன் ஆட்டித்
தண்ணறு சுகந்த சந்தனா திகள்பயில் 210

நவகல சங்கள் நயப்புடன் ஆட்டி
இங்கிப் படிசெய் திதயமந் திரத்தால்
சங்கத் தருக்கியத் தண்புன லாட்டி
ஆசறு திருவொற் றாடையுஞ் சாத்தி
ஈசனை பீடத் தெழுந்தரு ளப்பண்ணி 215

**ஐங்கரன் - திருமகள்-சப்தகுருக்கள் வழிபாடு**

மன்னுமைங் கரன்றனை வாயுகோ ணத்திலும்
உன்னுசெந் துருவினை உத்தர திசையினும்
அத்தகு பீடத்து ஈசா னியத்தில்
சத்த குருக்கள் தம்மையும் அடைவே
திறம்பெறச் சாத்தி தென்திசை முகமுற *220*

**சிவாசன பூசை** *(பிருதிவி முதலிய தத்துவங்களைக்கடந்த பெருமானை ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டாய் தத்துவங்களை அதிட்டிக்கச்செய்தல்)*

பிறங்கிய இலிங்க பீடத் தின்கீழ்
ஆதார சத்தி அனந்தா சனத்தொடு
மீதா மனந்தனை மிசையுறச் சாத்தி
பெருந்தகை யுறுமணிப் பீடக் கால்களில்
திருந்திய வங்கி திசைமுதல் நான்கினும் *225*

உறைதரு தன்ம முதல்நான் கமைத்தே
புறையதச் சதன முர்த்துவச் சதனம்
ஏதமில் நிருதி ஈசனிற் சாத்தி
இதழ்நுதி வட்டத் திரவிமண் டலத்தையும்
அதன்அதி பதியாம் அயனையும் சாத்தி *230*

நுண்டரு மகோர நுதீயினின் மதியின்
மண்டலந் தன்னொடு மாயனைச் சாத்தி
தாங்கிய கர்ணிகை தகுநுதி நாட்டத்து
ஓங்கநன் மண்டலத்து உருத்திரன் தனையும்
தயங்குகர் ணிகைநடுச் சத்தி மண்டலத்து *235*

வயங்கதி பதியா மகேசன் தனையும்
சிவாதனந் தனையும் சிவமூர்த் தியையும்
தவாத னம்மிதில் சாத்திய பின்னர்

***இலிங்கத்து இருந்தருள் என்னல்***

சிரமுதற் பதாந்தந் தெண்டபங் கியினால் *240*
முரணில் ஈசான முதல்நியா சம்பணிச்

சத்தியோ சாதந் தனைமுத லாகப்
பத்திசேர் முண்ட பங்கியும் அமைத்தே
பங்கயா சனமும் பானிற மேனியும்
பொங்க வமைத்த பொற்புரி நூலும் 245

தெண்கலை வெண்பிறை திருமுடி ஐந்தும்
கண்கள் மூவைந்தும் கரங்கள் ஈரைந்தினில்
மலைதரு சூலம் வத்திரம் கதிர்வாள்
கொலைமழு வபயம் கொண்டு வலப்பால்
அறவொரு பாசம் அதிர்மணி வெங்கனல் 250

விரவிய அங்குசம் மேவி இடப்பால்
உறைந்திடும் சதாசிவ உருவினை நினைந்தே
சிறந்திடும் வித்தியா தேகமா வாகித்து
அடுத்த திருமுகம் ஐந்தினும் நேத்திரங்
கொடுத்தபின் நறுமலர் கொண்டவஞ் சலியாம் 255

உருத்திடு தினகர ஒளிபயில் பிரணவ
மதித்திடு மூல மந்திர மதனால்
சுழுமுனை ஒலியொடு துவாதசாந் தத்து
எழுமொரு சோதியை இறக்கி விந்துவிற்
சந்திர கோடி தருமொளிர் சரத்தில் 260

வந்திட பிராண மார்க்கந் தன்னில்
சத்தியோ சாதம் தன்னிலா வாகித்து
அத்தகு வாம மாதிமூன் றாலும்
தாபன சந்நி தானசன் னிரோதன
மேவிடக் கொடுத்தே விமலனைச் சுவாகதம் 265

அன்பொடு வினவி அருள்பெற்று அகிலமும்
இன்பொடு காக்கும் இறைவ(நான்) உன்னைச்
செவ்விய பூசை செய்திடும் அளவும்
இவ்விலிங் கத்து இருந்தருள் என்றே
இறைவனை வேண்டி ஈசா னத்தால் 270

அறைதரு சுவாகத அருக்கியம் கொடுத்தே

**பாத்திய ஆசமன அருக்கியம் கொடுத்தல்**

சித்தமாம் இதயம் சிரஞ்சிகை கவசம்
அத்திரம் உரமுதல் அங்கையி றமைத்தே
ஏற்ற மூலத்தால் ஏகத் துளம்பெற
சேர்ந்திரு கரத்தால் திக்குபந் தனமுடன் 275

அவகுண்ட டனம்செய்து ஆவின்முத் திரையுடன்
சிவனெதிர் மகாமுத் திரையும் கொடுத்தே
கதிதரு கானகர் ணிகையில் இலிங்கம்
முதிர்நமஸ் கார முத்திரை தன்னுடன்
முறைதரு ஐமுக முத்திரை காட்டி 280

அறைதரு பாத்தியம் ஆசம னார்க்கியம்
ஆலமுண் டவனுக்கு அலர்அறுகு அரிசி
மூலமந் திரத்தினால் முறைபெறச் சாத்தி
தூயமு லத்தால் தூபமும் கொடுத்தே
ஆய ஆசமன அருக்கியம் உதவி 285

**பாவநாபிஷேகம்**

நிருத்தனுக்கு எண்ணை நெல்லுமாக் காப்பு
கருத்தினா லடைவுறக் கருதியாட் டியபின்
ஆர்த்திடும் அருக்கியம் அபிடே கித்தே
பாத்திய முதலான பரிவுற நல்கி
மறுவுநுண் டுகிலால் மாற்றிய பின்னர் 290

தருபல சுகந்த சந்தனம் அறுகு
வில்வ மலராடு வியங்கொ ளாபரணம்
நல்லபொற் றுகில்மன நயப்பொடு சாத்தி
முன்புறத் தத்துவ மூவகை மந்திரத்து
அன்புறப் புட்ப அஞ்சலி செய்தே 295

சூட்டி இண்டை தொடைநறு மாலை
சூட்டி ஒலிமணி அத்திர மதனால்

தேசுறு தூப தீபம் கொடுத்தபின்
ஆசம னத்துடன் அருக்கியம் கொடுத்தே
முந்திய மனோரத முத்திரை காட்டி 300

### லயாங்க பூசை

ஐந்து பிரம அங்கமா றென்னும்
இங்கிவை லயாங்கத் தெழில்பெறச் சாத்தி

### போகாங்க பூசை (ஆவரண பூசை)

பொங்கு போகாங்க பூசனை புரிதற்கு
ஆதர வியம்பி அனுமதி பெற்றே
ஓது மூலத்தால் ஒருமலர் சாத்திக் 305

கிளர்ந்த ஈசானம் கிழக்கொடு தெற்கு
விளங்கிய வடக்கு மேற்றிசை இவைகளில்
மொழியும் ஈசான முதலோ ரைந்தையும்
பொழிநறு மலராற் பூசித் ததன்பின்
இயலுறு நேத்திரம் ஈசன் றிசையினும் 310

அயலுறு இதயம் அங்கித் திசையிலும்
ஈசா னத்தில் எழில்சிரந் தனையும்
தேசார் நிருதியிற் சிகையது தனையும்
காட்டிய வாயுவிற் கவசந் தனையும்
கீழ்திசை தெற்குக் கிளர்மேற் குத்தரம் 315

அருந்திசை நான்கினும் அத்திரம் தனையும்
இருந்திடும் ஈசன் இலயாங்கந் தோறும்
அடைவினில் வாங்கி அத்திசை இதழ்களின்
புடையுற விருத்திப் பூசனை புரிந்தே
ஆன அருக்கியம் அடைவினில் உதவி 320

தேனு பத்மம் திரிசூ லத்தொடு
தூய மகர சுருக்குமுத் திரையிவை
ஆய ஈசான மாதியைந் தினுக்குக்
செங்கரங் குவித்திடு சிறந்த முத்திரை
அங்கம் ஆறுக்கும் அடைவினில் அளித்து 325

புகலு முலத்தால் புட்பவஞ் சலியும்
திகழ்தரு மகாமுத் திரையும் கொடுத்தே
ஈசனுக் கபேத மிவரெனத் தூபம்
ஆசம னத்துடன் அருக்கியம் அளித்தே

**அரனை அமுது செயப்பண்ணல் ஆசமனார்க்கியம் உதவல்**

ஈசன் திசையில் இசைந்திடுங் கௌரியை *330*

ஆசன மூர்த்தி ஆதியிற் சாத்தி
நானா விதந்தரு நைவேத் தியந்தனைப்
பானி யத்தொடு பரிகல மேந்தி
நிகழ்தரும் இவைகளை நிரிக்கனை முதலாம்
துகளறு நால்வகைச் சுத்தியும் செய்தே *335*

திரமுறு கௌரிதன் செங்கையிற் கொடுத்தே
அரனை மூலத்தால் அமுதுசெயப் பண்ணி
பிரமாஸ் தங்களைப் பிரிவறக் கருதிப்
பரிகல மொன்றினில் பரித்தமு தளித்தே
ஆசமனம் கொடுத்து அங்கைகள் துவட்டி *340*

வாசமொடு அடைக்காய் வகையற உதவி
தந்திடும் அருக்கியந் தன்னொடு மூல
மந்திரம் கொண்டு மருமலர் சாத்தி
தூபமும் நால்வகை சுத்திநேத் திரம்தரு
தீபமும் கொடுத்து திகழுமா சமனம் *345*

அருக்கியம் உதவி அலாறுடு அரிசியுள்
தருக்கிய சர்வ தத்துவா தீதனென
பகரும் மூலத்தால் பவித்திரம் சாத்தி
நிகரில் ஆலத்தியில் நிகழ்பரா சத்தியை
முன்னுற வாதன மூர்த்தி மூலங்கள் *350*

அன்னவை சாத்தி அருக்கியம் கொடுத்தே
சுத்தி பொருந்திய தூபதீ பங்கொடுத்து
அத்தனை கவசத்து அங்கையால் சுற்றி

மிருகமுத் திரைபயில் வெண்ணீ ரதனால்
அருகுற முக்கால் அமலனைச் சூழ்ந்தே 355

எண்ணு மாலத்தி இடத்தினில் உய்த்தபின்
அண்ணலுக் காசம னார்க்கியம் உதவி

## ஆராதனை-ஜெபநிவேதனம்

நீறு கண்ணாடி நிகழ்குடை சாமரம்
மாறில் பொன்னால வட்டமும் விசிறியும்
அடைவினி லடக்கிய ஆச மனங்கள் 360

இடைஇடை பொருத்த இயந்திர மூலத்தால்
நாதமோ டெழுப்பிய நமோந்த மூலத்தால்
ஆதியைப் புட்ப அஞ்சலி செய்தே
சித்திர மகாமுத் திரையுடன் ஐமுக
முத்திரை தன்னையும் முறையுறக் கொடுத்தே 365

எய்திடும் அவருன் இதயத் தருச்சனை
செய்திடும் ஜெபவடம் செங்கையில் வாங்கி
நுவலு மூலத்தால் நூற்றெட் டுருவினைப்
பவமகன் றிடச்செபம் பண்ணிய தற்பின்
கதமுறும் அத்திர கவசமோ டிதயத்து 370

இதயமுதன் மறித்து எதிர்சம் புடித்தே
அறிந்திடு மிரச்சை அவகுண் டனத்துடன்
செறிந்திட தலது செங்கையிற் பற்றி
அத்த நிறைந்த அருக்கிய முற்பவ
முத்திரை தன்னொடு முழந்தா ளூன்றி 375

உன்னருஞ் செபத்தை முற்றகன் மத்தையும்
தன்னையும் வரதந் தனிலுறக் கொடுத்தே

## குருபீடபூசை

அங்கித் திசையில் அருட்குரு மூர்த்தியிற்
தங்கிய பரசிவந் தன்னை அருச்சித்தே
நாடிய மேற்றிசை நண்ணிய யோக 380

பீடமேல் வித்தியா பீடந் தனையும்
பூசித் தரனையும் புட்பவஞ் சலியால்
நேசித் தவன்புகழ் நெஞ்சுறத் துதித்தே

**வலம், வணக்கம் மாற்றிருகாய வழிபாடு**

அண்டனை வலஞ்செய்து அட்டாங் கம்முற
தெண்டனிட் டிருகரம் சென்னிமேற் கூப்பி 385

கருத்துறு உபய காலமா திகளில்
அருச்சனை புரிதற் கசத்தா மவர்தாம்
ஆசன மூர்த்தியோடு அரனை மூலத்தால்
பூசனை புரிந்து போகாங் கங்களை
நிறைதரு பிரம நேத்திராங் கங்களை 390

முறைதரு சந்தி முறைமையிற் சாத்தி

**அக்கினி காரியம்**

கருத்தாம் அக்கினி காரியம் செய்தற்கு
உரித்தா மவர்செய் துடனிவே தித்தே
அட்டபுட் பங்கொடுத்து ஐமுக முத்திரை
சிட்டனுக் கன்பு சிறந்திட உதவி 395

சத்தியோ சாதந் தனைமுத லாக
மொய்த்தவை முடியினும் மூலமந் திரத்தால்
பூசனை அருக்கியம் புரிந்த வதற்பின்
ஆசில் போகாங்க அவைதனக் கடைவே
சயம்பெறு மந்திரம் தனைமுத லாக 400

வியம்புமீ சானம் இறுதி யாக
உற்ற வருக்கியம் ஒருமையிற் கொடுத்தே
முற்று நாராச முத்திரை மலராய்

ஆர்த்த மந்திரங்கள் அனைத்தையும் எழுப்பி
மூர்த்தியிற் றிவ்விய முத்திரை கொடுசேர்த்து 405

அஞ்செழுத் தருச்சித்து அருக்கியக் கொடுத்து
வஞ்சனேன் பிழைகளை மனம்பொறுத் தருளென
தொக்கபின் நினைந்து சோதிலிங் கந்தனைத்
திக்குபந் தனத்துடன் செய்தவ குண்டனம்
முன்கொடு தேனு முத்திரை கொடுத்தே 410

தன்குரு முதலோர் தமக்கும் பராமுகங்
கூர்த்த வருக்கியம் கொடுத்து விருந்தே

**சண்ட பூஜை**

மூர்த்திசெய் ததற்பின் முனைமழுச் சண்டனே
ஆசன மூர்த்தி அவன்றன் மூலத்தால்
பூசனை செய்து புனைந்தநின் மாலியம் 415

தகைமை நைவேத்தியம் தான்முதலாயின
வகைபெறக் கொடுத்தவன் மந்திர மதனால்
செவித்து நிவேதனம் செய்திடு கரங்களை
குவிந்தடி யேன்செய் குறைபொருத் தருளெனா
குலவிய வருக்கியம் கொடுத்து விடுத்தபின் 420

மலர்பயி லருக்கிய மந்திர மனைத்தையும்
நேர்பெற வாங்கி நெஞ்சகத் தமைத்தே
சோர்வினின் மாலியஞ் சுத்தியும் புரிந்தே
இருபதங் கழுவி யியற்றி யாசமனந்
திருநீ றணிந்து செய்து நியாசம் 425

ஓர்ந்திடு இருபத் தோருரு அகோரம்
சாந்தியின் பொருட்டுத் தகைபெறச் செபித்தபின்
மாசறு கபிலைக்கு வாயுறை கொடுத்துப்

**நூலின் வரலாறும், பயனும்**

பூசனை செய்திடும் பூசனை முறைமையைச்
சொற்றமி ழகவலில் சொல்ல வேண்டுமென *430*

நற்றவன் உலக நாயகன் விளம்பச்
சிற்குண னுரைத்த சிவாகம நோக்கி
நற்கமலை யில்வாழ் ஞானப்பிர காசன்
சொல்லிய பூசைத் தொகையினைப் பழுதற
வல்லவர் வீடுற வல்லவர் தாமே. *435*

*சிவபூசையகவல் முற்றிற்று*

